முன்னை யார்மயில் ஊர்தி முருகவேள்
தன்னை யாரெனில் தான்ஓர் தலைமகன்
என்னை யாளும் இறையவன் எம்பிரான்
பின்னை யாரவர் பேரெயி லாளரே. 14

செல்வியைப் பாகங் கொண்டார்.
சேந்தனை மகனாக் கொண்டார்
மல்லிகைக் கண்ணி யோடு
மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியைக் கரையி லாத
காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எல்லியை விளங்க நின்றார்
இலங்குமேற் றளிய னாரே. 15

உடம்பெனும் மனைய கத்துள் உள்ளமே தகளி யாக
மடம்படும் உணர்நெய் யட்டி உயிரெனுந் திரிம யக்கி
இடம்படு ஞானத் தீயா லெரிகொள இருந்து நோக்கில்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே. 16

ஆரட்ட தேனும் இரந்துண் டகமக வன்றிரிந்து
வேரட்ட நிற்பித் திடுகின்ற தால்விரி நீர்ப்பரவைச்
சூரட்ட வேலவன் தாதையைச் சூழ்வய லாரதிகை
வீரட்டத் தானை விரும்பா வரும்பாவ வேதனையே. 17

படைமலிந்த மழுவாளும் மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்
நான்மறையி னொலிதோன்றும் நயனந் தோன்றும்
உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்றும்
மூரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்
புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. 18

கோழிக் கொடியோன் தன்தாதை போலும்
கொம்பனாள் பாகம் குளிர்ந்தார் போலும்
ஊழி முதல்வரும் தாமே போலும்
உள்ளுவார் உள்ளத்தின் உள்ளார் போலும்
ஆழித் தேர்வித் தகரும்தாமே போலும்
அடைந்தவர் கட்கன்ப ராய்நின்றார் போலும்



ஏழு பிறவிக்கும் தாமே போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி ஈச னாரே. 19

கோவாய இந்திரனுள் ளிட்டா ராகக்
குமரனும் விக்கின விநாய கன்னும்
பூவாய பீடத்து மேல யன்னும்
பூமி யளந்தானும் போற்றி சைப்பப்
பாவாய இன்னிசைகள் பாடி ஆடிப்
பாரிடமுந் தாமும் பரந்து பற்றிப்
பூவார்ந்த கொன்றை பொறிவண் டார்க்கப்
புறம்பயம்நம் ஊரென்று போயி னாரே. 20

கள்ளி முதுகாட்டி லாடி கண்டாய்
காலனையுங் காலாற் கடிந்தான் கண்டாய்
புள்ளி யுழைமானின் தோலான் கண்டாய்
புலியுரிசேர் ஆடைப் புனிதன் கண்டாய்
வெள்ளிமிளிர் பிறைமுடிமேற் சூடி கண்டாய்
வெண்ணீற்றான் கண்டாய் நஞ்செந்தின் மேய
வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே. 21

முக்கணா போற்றி முதல்வா போற்றி
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி
தக்கணா போற்றி தருமா போற்றி
தத்துவனே போற்றிஎன் தாதாய் போற்றி
தொக்கணா வென்றிருவர் தோள்கை கூப்பத்
துளங்கா தெரிசுடராய் நின்றாய் போற்றி
எக்கண்ணுங் கண்ணிலேன் எந்தாய் போற்றி
எறிகெடில வீரட்டத் தீசா போற்றி. 22

அரவணையான் சிந்தித் தரற்றும் அடி
அருமறையான் சென்னிக் கணியாம் அடி
சரவணத்தான் கைதொழுது சாரும் அடி
சார்ந்தார்கட் கெல்லாம் சரணாம் அடி
பரவுவார் பாவம் பறைக்கும் அடி
பதினெண் கணங்களும் பாடும் அடி
திரைவிரவு தென்கெடில நாடன் அடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன் அடி. 23

முந்தைகாண் மூவரினும் முதலா னான்காண்
மூவிலைவேள் மூர்த்திகாண் முருக வேட்குத்

தந்தைகாண் தண்கடமா முகத்தி னாற்குத்
தாதைகாண் தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால் விடையொன் றேறும்
எந்தைகாண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காணவனென் எண்ணத் தானே. 24

**சுந்தரர் (ஏழாந் திருமுறை)**

குறவனார் தம்மகள் தம்மகனார்
மணவாட்டி கொல்லை
மறவனாராய் அங்கோர் பன்றிப்பின்
போவது மாயங்கண்டீர்
இறைவனார் ஆதியார் சோதிய
ராயங்கோர் சோர்வுபடா
அறவனார் ஆவதறிந் தோமேல்
நாம்இவர்க் காட்படோமே. 25

பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேல்
தென்னானைக் குடபாலின் வடபாலின் குணபாற்
சேராத சிந்தையான் செக்கர்வான் அந்தி
அன்னானை அமரர்கள்தம் பெருமானைக் கருமான்
உரியானை அதிகைமா நகருள்வாழ் பவனை
என்னானை எறிகெடில வடவீரட் டானத்
துறைவானை இறைபோதும் இகழ்வன்போ லியானே. 26

ஒட்டியாட் கொண்டுபோய் ஒளித்திட்ட
உச்சிப் போதனை நச்சரவார்த்த
பட்டியைப் பகலை யிருள்தன்னைப்
பாவிப்பார் மனத்தூறு மத்தேனைக்
கட்டியைக் கரும்பின் தெளிதன்னைக்
காதலாற் கடற்சூர் தடிந்திட்ட
செட்டியப்பனைப் பட்டனைச் செல்வ
ஆரூரானை மறக்கலு மாமே. 27

திங்கள்தங்கு சடைக்கண் மேலோர்
திரைகள் வந்து புரளவீசும்
கங்கை யாளேல் வாய்திறவாள்
கணபதியேல் வயிறு தாரி



அங்கைவேலோன் குமரன் பிள்ளை
தேவியார் கொற்றட்டி யாளார்
உங்களுக்காட் செய்ய மாட்டோம்
ஓணகாந்தன் தளியுளீரே. 28

திங்கள் நம்பி முடிமேல் அடியார்பாற்
சிறந்த நம்பி பிறந்த உயிர்க்கெல்லாம்
அங்கண் நம்பி யருள்மால் விசும்பாளும்
அமரர் நம்பி குமரன் முதல்தேவர்
தங்கள் நம்பி தவத்துக் கொருநம்பி
தாதை என்றுன சரண் பணிந்தேத்தும்
எங்கள் நம்பி யென்னை ஆளுடைநம்பி
எழுபிறப்பும் எங்கள் நம்பிகண்டாயே. 29

**மாணிக்கவாசகர்: திருவாசகம் (எட்டாந் திருமுறை)**

சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பக நாட்டியெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடியெடுமின்
அந்தரர் கோனயன் தன்பெருமான்
ஆழியான் நாதனல் வேலன்றாதை
எந்தர மாளுமை யாள்கொழுநற்
கேய்ந்தபொற் சுண்ண மிடித்துநாமே. 30

பாலக னார்க்கன்று பாற்கடல் ஈந்திட்ட
கோலச் சடையற்கே யுந்தீபற
குமரன்றன் தாதைக்கே யுந்தீபற. 31

**கருவூர்த்தேவர்: திருவிசைப்பா (ஒன்பதாந் திருமுறை)**

திருமகன் முருகன் தேவியேல் உமையாள்
திருமகள் மருமகன் தாயாம்
மருமகன் மதனன் மாமனேல் இமவான்
மலையுடை யரையர் தம்பாவை
தருமலி வளனாஞ் சிவபுரன் தோழன்
தனபதி சாட்டியக் குடியார்
இருமுகங் கழல்மூன் றேழுகைத் தலமேழ்
இருக்கையி லிருந்த ஈசனுக்கே. 32

தனதன்நற் றோழா சங்கரா சூல
பாணியே தாணுவே சிவனே
கனகநற் றூணே கற்பகக் கொழுந்தே
கண்கள் மூன்றுடையதோர் கரும்பே

அனகனே குமர விநாயக சனக
அம்பலத் தமரர் சேகரனே
உனகழல் இணையென் நெஞ்சினுள் இனிதாத்
தொண்டனேன் நுகருமா நுகரே. 33

**சேந்தனார்: திருவிடைக்கழிப் பதிகம் (ஒன்பதாந் திருமுறை)**

மாலுலா மனம்தந்(து) என்கையிற் சங்கம்
வவ்வினான்; மலைமகள் மதலை
மேலுலாந் தேவர் குலமுழு தாளுங்
குமரவேள் வள்ளிதன் மணாளன்
சேலுலாங் கழனித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாந் தடக்கை வேந்தன்என் சேந்தன்
என்னும்என் மெல்லியல் இவளே. 34

இவளைவா ரிளமென் கொங்கைபீர் பொங்க
எழில்கவர்ந் தான்;இளங் காளை
கவளமா கரிமேல் கவரிசூழ் குடைக்கீழ்க்
கனகக்குன் றெனவருங் கள்வன்
திவளமா ளிகைசூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
குவளைமா மலர்க்கண் நங்கை யானைக்கும்
குழகன்நல் அழகன்நங் கோவே. 35

கோவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள் சூழ்கோழிவெல் கொடியோன்
காவல்நற் சேனையென் னக்காப் பவன்என்
பொன்னை மேகலை கவர்வானே?
தேவின்நற் றலைவன் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தூவிநற் பீலி மாமயி லூரும்
சுப்பிர மண்ணியன் தானே. 36

தானமர் பொருது வானவர் சேனை
மடியச்சூர் மார்பினைத் தடிந்தோன்
மானமர் தடக்கை வள்ளல்தன் பிள்ளை
மறைநிறை சட்டறம் வளரத்
தேனமர் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
கோனமர் கூத்தன் குலவிளங் களிறென்
கொடிக்கிடர் பயப்பதுங் குணமே? 37



குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை
படுமிடர் குறிக்கொளா(து) அழகோ?
மணமணி மறையோர் வானவர் வையம்
உய்யமற்(று) அடியனேன் வாழத்
திணமணி மாடத் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
கணமணி பொருநீர்க் கங்கைதன் சிறுவன்
கணபதி பின்னிளங் கிளையே. 38

கிளையிளஞ் சேயக் கிரிதனைக் கீண்ட
ஆண்டகை கேடில்வேற் செல்வன்
வளையிளம் பிறைச்செஞ் சடைஅரண் மதலை
கார்நிற மால்திரு மருகன்
திளையிளம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
முளையிளங் களி(று)என் மொய்குழற் சிறுமிக்(கு)
அருளுங்கொல் முருகவேள் பரிந்தே. 39

பரிந்தசெஞ் சுடரோ? பரிதியோ? மின்னோ?
பவளத்தின் குழவியோ? பசும்பொன்
சொரிந்தசிந் துரமோ? தூமணித் திரளோ?
சுந்தரத்(து) அரசிது என்னத்
தெரிந்தவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வரிந்தவெஞ் சிலைக்கை மைந்தனை அஞ்சொல்
மையல்கொண்(டு) ஐயுறும் வகையே. 40

வகைமிகும் அசுரர் மாளவந்(து) உழிஞை
வானமர் விளைத்ததா ளாளன்
புகைமிகும் அனலிற் புரம்பொடி படுத்த
பொன்மலை வில்லிதன் புதல்வன்
திகைமிகு கீர்த்தித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தொகைமிகு நாமத் தவன்திரு வடிக்(கு)என்
துடியிடை மடல்தொடங் கினளே. 41

தொடங்கினள் மடலென்(று) அணிமுடித் தொங்கல்
புறவிதழ் ஆகிலும் அருளான்
இடங்கொளக் குறத்தி திறத்திலும் இறைவன்
மறத்தொழில் வார்த்தையும் உடையன்
திடங்கொள்வை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
மடங்கலை மலரும் பன்னிரு நயனத்(து)
அறுமுகத்(து) அமுதினை மருண்டே. 42

மருண்டுறை கோயில் மல்குநன் குன்றப்
  பொழில்வளர் மகிழ்திருப் பிடவூர்
வெருண்டமான் விழியார்க்(கு) அருள்செயா விடுமே?
  விடலையே எவர்க்கும்மெய் யன்பர்
தெருண்டவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
  திருக்குரா நீழற்கீழ் நின்ற
குருண்டபூங் குஞ்சிப் பிறைச்சடை முடிமுக்
  கண்ணுடைக் கோமளக் கொழுந்தே. 43

கொழுந்திரள் வாயார் தாய்மொழி யாகத்
  தூய்மொழி அமரர்கோ மகனைச்
செழுந்திரட் சோதிச் செப்புறைச் சேந்தன்
  வாய்ந்தசொல் இவைசுவா மியையே
செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
  திருக்குரா நீழற்கீழ் நின்ற
எழுங்கதிர் ஒளியை ஏத்துவார் கேட்பார்
  இடர்கெடும்: மாலுலா மனமே! 44

### திருமூலர்: திருமந்திரம் (பத்தாந் திருமுறை)

எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலால்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலால்
மைந்த னிவனென்று மாட்டிக் கொள்ளீரே. 45

எம்பெருமான் இறைவா முறையோ என்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல
அம்பவள மேனி அறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே. 46

### சேக்கிழார்: பெரியபுராணம் (பன்னிரண்டாந் திருமுறை)

செய்ய மேனிக் கருங்குஞ்சிச்
  செழுங்கஞ் சுகத்துப் பயிரவர்யாம்
உய்ய வமுது செய்யாதே
  யொளித்த தெங்கே யெனத்தேடி
மையல் கொண்டு புறத்தணைய
  மறைந்த வவர்தாம் மலைபயந்த
தைய லோடுஞ் சரவணத்துத்
  தனய ரோடுந் தாமணைவார். 47

பதினோராந் திருமுறை - திருமுருகாற்றுப்படை ஆற்றுப்படை வரிசையுள் காண்க.

**திருமுறைகளில் முருகப்பெருமான் முற்றிற்று**



உ

# செந்திலாண்டவன் துதியமுது

**சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார்**

### காப்பு

சீரூரும் செந்தில் திருவேடன் சேவடிக்கே
நாரூரும் பாத்தூவும் நற்றவத்தைக்—காரூரும்
பொன்மலை மேலேறும் போதகத் தாளிணையே
கன்மலைபோற் காக்கும் கனிந்து.

### நூல்

ஆனைக் கிளையவனை ஐயனைச் செந்தில்வாழ்
கோனவனைக் கோழிக் கொடியினனைச்-சேனைக்கு
நாயகனை நாயடியேன் கும்பிட்டு நன்கடைந்தேன்
பாயவினை போயகலும் பண்பு. 1

செல்வத் திருச்செந்தூர்த் தேவாவுன் பொன்னடிகள்
நல்ல கவனமாய் நான்றொழுவேன்-முல்லைநகை
வள்ளி கணவா மயில்வா கனனேயென்
பொல்லா வினைகளெல்லாம் போக்கு. 2

முத்திதருஞ் சித்திதரும் மூவாத நல்வரங்கள்
எத்தனையுந் தந்தே இனிதளிக்கும்-பத்திதரும்
செந்தில் நகர்மேவும் செவ்வேள் மலரடிகள்
எந்தவித மேனு மெனக்கு. 3

முத்தம் கொழிக்குந் திருச்செந்தில் முன்னவனே
எத்திசையும் ஏத்தும் இறையவனே-சித்தம்
சிறிதே இரங்கித் திருக்கடைக்கண் பார்ப்பாய்
வறிதே இராதேநீ வந்து. 4

கேட்டிலையோ ஐயாநீ கீழ்மையேன் என்முறையை
நாட்டில் வளர்செந்தில் நன்னகராய்-ஏட்டிலே
எல்லாங் கருணையுரு என்றெழுதி யேயிருக்கப்
பொல்லே னளவதுவோ பொய். 5

கையும் வலிக்கிறது காலும் வலிக்கிறது
செய்யாள் பிரியாத செந்தினகர்-ஐயாநான்
செய்யும் வகையறியேன் சேர்துன்பந் தீர்ந்தேயிங்
குய்யும் வகையை உதவு. 6

உலகம் புரக்கின்ற ஒண்சுடரே செந்தில்
இலகும் பரம்பொருளே ஏழை-கலகமிடும்
நோய்ப்பகைகள் தம்மால் நலிவுண்டு நோவாதே
வாய்ப்புடைய நல்லருளை வை. 7

ஆவகை செய்யும் அனைத்துநின் பொன்னடிக்கே
சேர்வகை செய்வாய்நீ செந்தினகர்த்-தேவனே
உன்சே வடியன்றி உற்ற துணையில்லை
தஞ்சமென வந்தடைந்தேன் சார்ந்து. 8

நோயுற்று நைந்திளைத்தேன் நொய்ம்மையேன்
நான்துயரால்
பாயுற்று நைதலும் பண்பாமோ-சேயுற்ற
தன்மைபோ லென்னைத் தலையளித்துக் காத்திடுவாய்
அம்மையார் செந்தினக ராய். 9

பாரார் பரவும் பதியாகும் செந்தினகர்ச்
சீராரும் தேவனடி சிந்தித்தால்-ஏராரும்
இன்பமெலாம் வந்தெய்தும் இன்னல்கள் போயகலும்
நன்மை வருமே நமக்கு. 10

பூசுகின்ற வெண்ணீற்றின் பொற்பார் பொலிவுடனே
தேசுடைய செந்தினகர்த் தேவனையே-பேசினால்
நன்மைகள் முற்று நமையிடமாக் கொள்ளும்பின்
புன்மைகட் கெங்கே புகல். 11

நீலக் கடற்கரையில் நீள்செந்தில் மாநகரை
மாலகல ஏத்தி மனங்கொண்டால்-ஆலநிகர்
வெந்நோய்கள் என்னை மெலிவிக்க வல்லவோ
எந்நாளு நன்றே எனக்கு. 12



உடையானே செந்தில் உடையானே வேற்கைப்
படையானே பாதம் பணிந்தேன்-கடையேனைக்
காத்துப் பணிகொள்ளல் நின்றன் கடன்வானோர்
ஏத்தும் இறையவ னே. 13

மாறுசெய்யும் வல்வினைகள் மாய்ந்தகலப்
புன்னெறிக்கோர்
ஈறுசெய்வாய் எங்கள் இறையவனே-கூறும்
திருச்செந்தில் நன்னகரம் சேர்ந்தருளும் செல்வா
இருட்சிந்தை யுள்ளே இசைந்து. 14

பொய்யெலாம் போயகலப் புன்மைகள் நீங்கிவிட
மெய்யெலாம் மேவி மிகஅமையக்-கையுலாம்
வெற்றிவேற் பண்ணவனே வெல்கழல்கள் வந்திக்க
உற்றெனக்கோர் நற்சொல் உரை. 15

செழுங்கமலப் போதனைய செந்திலி னாதன்
தொழும்பரிற் கூட்டித் தொழுதே-அழுந்தி
அமுதம் அருந்த அருளைப் புரிவான்
எமையாள என்றும் இனிது. 16

செழுங்கடலின் சீரலைவாய்ச் செல்வனே யுன்றன்
பழங்கருணைத் தாளிணைகள் பற்றி-அழுந்தினேன்
துன்பக் கடலுட் டுளங்காமல் ஏழையைநீ
இன்பமுற ஏமத் திசை. 17

பார்பூத்த செந்திற் பதியாளு மன்னாவுன்
ஏர்பூத்த பாத மிறைஞ்சுதற்குச்-சீர்பூத்த
செல்வமும் நல்ல உடல்நயமும் சீரடியார்
நல்லிணக்கும் என்றனக்கே நல்கு. 18

நிருத்தம் புரியும் நிமலன் மகனே
திருச்செந்தில் மேவுகின்ற தேவே-கருத்தில்
உனைவைத்தே நித்தம் உவந்து பணிந்தேன்
எனையாள்வாய் கந்தா இனிது. 19

கடலின் திரைமோதிக் காலுலவும் செந்தில்
இடமாக உள்ள இறைவன்-திடமாகப்
பத்திசெயு மன்பர்தம் பக்கம் எழுந்தருளி
எத்திசையுங் காப்பா னினிது. 20

மண்ணுலகை வாழ்விக்கச் செந்திலிலே வந்தருள்வாய்
விண்ணுலகை வாழ்வித்த வித்தகனே-என்னுடலின்
புன்மைகள் நீக்கியுன்றன் பொற்கழற்கீழ்க் கொண்டிடுவாய்
மன்னவனே நின்னருளை வைத்து. 21

வாகார் திருச்செந்தூர் வள்ளல் திருப்பாதம்
போகாப் பிணிகளெலாம் போக்குமே-ஏகாமல்
ஏத்து மடியார் இதயத் திருக்குமே
பூத்த கமலமதைப் போல். 22

சீல முடையவர்கள் சென்றேத்தும் மாவனப்புக்
கோல முடைய குமரனே-ஏலுமிடர்
எல்லாங் கெடுத்தேழை என்னை உயக்கொண்டு
சொல்லார் நலந்தருவான் சூழ்ந்து. 23

நெறிநிற்கு மன்பதையை யாட்கொள் நிமலா
குறியொன்று மில்லாக் கொடியேன்-பறியுண்ட
பாழுடலை யோம்பிப் பயின்றிங் கலைவதோ
வாழ்செந்தில் தேவே வழங்கு. 24

நமச்சிவய மந்திரத்தின் நாதனே சேர்ந்தோர்
தமச்ச மொழிக்கின்ற தாயே- இமைப்பளவில்
எல்லா வினைகளையும் நீக்கும் எழிற்செந்திற்
பொல்லா மணிநீ புகல். 25

தில்லைமணி யம்பலத்தான் சேயே திருச்செந்தில்
இல்லமென வாழ்வுகந்த ஏந்தலே-நல்லையென
உன்னை யடைந்தாரை ஓயாமற் காக்கின்றாய்
என்னைப் புறக்கணிப்ப தென். 26

அண்டங் கடந்த அருட்பெருகு செந்நெறிக்குத்
தொண்டரையே யுய்க்குந் தொழிலாளா-கண்டவர்கள்
கண்கவருங் காட்சிக் கடவுளே செந்திநகர்ப்
பண்ணவனே என்னைமுகம் பார். 27

இன்பந் தருஞ்செந்தில் எம்மான் திருக்கைவேல்
துன்பந் துடைக்குந் துயர்நீக்கும்-என்பந்தம்
எல்லா மகற்றும் எழிற்கழல்கள் காட்டுவிக்கும்
பொல்லா வினையேன்பாற் புக்கு. 28

இப்பாடே மக்களெலாம் இன்புற் றிருக்கின்றார்
எப்பான்மை யோரு மியம்புகின்றார்-சொற்பால



எல்லா மிதுவே எனத்துணிந்தார் செந்தில்வாழ்
வல்லாளன் நற்பெயரை வைத்து. 29

அருளா ரமுதப் பெருங்கடலே ஆண்டு
தெருளாய் விளைந்த திருவே-பொருளாக
இந்தக் கடையனையும் ஏற்றருளல் நின்பரங்காண்
செந்திற் பதியாய் சிறந்து. 30

பாலார் மொழிமங்கை பங்கனெனும் அம்பலவன்
பாலாநற் செந்திற் பதியுடையாய்-காலால்
எனதின்னல் நீக்க இனிதே மிதிப்பாய்
உனதருளை வேண்டினேன் உற்று. 31

வளைகடலின் மேற்கரையில் வாய்ந்ததிருச் செந்தில்
திளைக்கும் திருக்கோயில் தேவே-களைகணாம்
ஊற்றுத் துணையிங் கொருவரு மில்லையெனை
ஏற்றருள்வ துன்பார மே. 32

புத்தி யெலாமுன்றன் பொன்னடிக்கே யாக்கினேன்
சித்தம் திகையாமற் செய்தாள்வாய்-எத்திசையும்
போற்றும் திருச்செந்தில் புண்ணியா என்துயரம்
மாற்றும் வகையினிதே வந்து. 33

சீரார் திருச்செந்திற் செவ்வேடன் சேவடிகள்
ஏரார்ப் போற்றி இறைஞ்சினால்-வாராத
புத்திசித்தி தம்மோடு புண்ணியங்கள் பூரிக்கும்
பத்திசெய்க நெஞ்சே பயின்று. 34

கருடன் இவர்ந்தோன் கமலத்தோன் வானில்
வெருளில்லா விண்ணவர்கள் வேந்தன்-அருள்பெற்றுச்
சேவித் திருக்கும் திருச்செந்திற் சேந்தன்பேர்
பாவித்தே உய்வேன் பகர்ந்து. 35

வைப்பு நிதியென்றே வந்தித் தடியார்கள்
செப்புந் திருச்செந்திற் செவ்வேளே-எய்ப்பினில்
வந்திங் கெனைக்காக்க வல்லாயோ என்றேநான்
சிந்தித் திருப்பேன் சிறந்து. 36

பார்பரவும் செந்திற் பதியான்றன் பொற்றாளின்
சீர்பரவச் செல்வம் சிறக்குமே-ஏர்பரவும்
இன்பங்கள் எல்லாம் இணைந்தெய்தும் பின்னடைந்து
துன்பங்கள் போமே தொலைந்து. 37

சோதியாய் எங்குந் தொடர்ந்திருவர் காணாமல்
நீதியாய் நின்ற நிமலன்சேய்-கோதகற்றும்
செந்திற் பதியுள்ளான் சேவடிகள் நாணாளும்
சிந்தித் திருப்போம் சிறந்து. 38

இந்திரிய மைந்தின் இடுக்கண் களைந்தாட்கொள்
செந்தில் நகரினருட் டெய்வமே-இந்தவெறும்
பாழாம் உடலையே பார்த்திருக்க வொண்ணாதே
ஏழாய் எழுகவென்பா யின்று. 39

கலந்து வளருமடி யாருடன் காலால்
வலஞ்செய்து வாழவெண்ணி வந்து-மலங்கினேன்
என்கருத்தை நீயறிவாய் இன்பாரும் செந்திலாய்
உன்கருத்திங் கேதோ உரை. 40

அடியார்கள் வாழ அருட்செந்தில் வந்து
குடியாகக் கொண்டகுணக் குன்றே-செடியேனை
ஆட்கொண் டருளக் கருணைசெய்வாய் அங்கமலத்
தாட்கொண்டே னென்றன் றலை. 41

மேவும் பெருமை அடியாரும் வேட்டசெந்திற்
கோவும் கலந்து குலவுகின்ற-காவலகம்
கண்டிலையோ நெஞ்சமே கண்டாயேல் பின்னதனை
விண்டலைவ தேனோ விளம்பு. 42

புற்றுமாய் வன்மரமு மாகிப் பொருந்துமுடல்
வற்றி நினைந்திருக்கும் வண்மையோர்-நிற்க
வறிய மரம்போலும் என்னையாள் வள்ளல்
செறியும் திருச்செந்தில் தேவு. 43

பூங்கமலச் சேவடிகள் போற்றேன் புகழ்ந்திருந்து
தீங்ககலச் செந்தினகர் சென்றடையேன்-பாங்காகக்
கந்தன் திருநாமம் கல்லேன் கடையேனுக்
கெந்தவகை உய்தி இனி. 44

தேவர் வணங்குந் திருச்செந்தில் நாயகனை
யாவரும் போற்றும் இறையோனை-ஏவலராய்ச்
சென்று வணங்கியே சீரடையா ரார்நாமும்
நின்று பணிவோம் நிதம். 45

மாதொரு பங்கன் மகிழ்மகனே செந்தினகர்
போதருவார் மேலேற்றும் போதகமே-ஏதஞ்சேர்



நாயனையேன் நோய்நீங்கி நன்காக வேண்டியே
தாயனையாய் போற்றுவனுன் றாள். 46

காடிடமா ஆடிதன் கான்முளை நற்செந்தில்
நாடிடமா நண்ணுமென் நாயகன்-கூடிப்
பழவடியார் வேண்டப் பரிந்தீயும் வள்ளல்
மழவெனக்கும் நல்கும் மகிழ்ந்து. 47

ஒன்றா யிரண்டாகி யுள்ளொளியா யென்னுடைய
பின்றாழ் வினையின் பிறப்பகல-நின்றான்
திருச்செந்தில் என்று திசைநோக்கி வாழ்த்தி
இருக்கில் அவல மிலை. 48

முத்தி பெறவருளும் முன்னவனார் செந்தினகர்
எத்திசையும் போற்று மிறையவனார்-தித்திக்கும்
சீர்நாமம் செப்பிடின் சிந்திக்கின் உள்ளத்தில்
ஏர்பெருக உள்ளுருகு மே. 49

நமச்சிவய என்று நணுகினர்க்கு நல்ல
அமைத்து நலநல்கும் அண்ணல்-இமக்கொடியின்
மாமகனற் செந்தில் வளர்வேலன் பொன்னடிகள்
தாமென்றும் பண்ணும் தயை. 50

தில்லையி லாடுஞ் சிவபெருமான் சேய்செந்தில்
எல்லை இருந்த இறைவன்சீர்-சொல்லிப்
புகழாப் பொறியிலி என்னையு மாண்டிங்
கிகழா தளித்திடுவா னே. 51

அண்டங் கடந்த அருள்வெளியி லானந்தம்
மொண்டங் கருந்த முழுமுதலாய்-வண்டருந்துந்
தார்கடம்பு மார்பணிந்த செந்தில் தலத்தவன்
ஏர்பெறுந் தாளே இறைஞ்சு. 52

நான்முகன்மால் வானோர்கள் சூழ்ந்திறைஞ்ச நண்ணினான்
மேன்மைகொள் செந்தினகர் மேவியே-கான்மலர்
பாச வினையகலும் பாங்கினிலே நல்கியித்
தேசந் தொழநின்ற தேவு. 53

மெய்யனே செந்தினகர் மேவும் வடிவேற்கை
ஐயனே என்றென் றழுதரற்றுங்-கையனெனை
வாழவருள் வைத்தருள்வாய் வானவரை வாழ்வித்தாய்
தாழ்ந்தேனின் செங்கமலத் தாள். 54

பரவுவார் அன்பர் பணிந்திடுவார் உள்ளம்
உருகுவார் நின்றபடி உள்கி-விரவுவார்
மெய்ப்புளகம் செந்தில்நல் வேலா வெறுந்தமியேன்
எய்த்தடைந்தேன் அன்பின்றி யே. 55

சிந்திக்கச் சித்தம் சிறிதுமிலேன் செந்தில்போய்
வந்திக்கும் வன்மைக்கும் வாய்ப்பில்லேன்-எந்தவகை
இவ்வேழைக் குன்னருளை ஈவாய் அருள்வடிவாம்
செவ்வேளே நீனக்குச் செப்பு. 56

செந்தில் திருநகரஞ் சென்றேநான் அங்குறையும்
கந்தக் கடவுளையே கண்டுகண்டு-எந்தக்
கவலையு மின்றிக் களித்திருக்க எந்நாள்
அவன்கருணை செய்தருளு வான். 57

செந்தி லெனச்செப்பிற் செய்வினைபோம் அப்பதியிற்
கந்தனெனில் எந்தக் கடுவினையும்-வெந்தகலும்
அன்னான் கழல்பணியில் ஆனந்தம் வந்துறும்
என்னா மறையோது மே. 58

திருச்செந்தில் மாநகர மென்றுநீ செப்பாய்
உருச்செய்தே ஈடேற்று மொன்றோ-கருப்பையுள்
வாராமற் காக்கும் வளர்கருணைக் கந்தன்றாள்
தாராத துண்டோ தகவு. 59

வேல்மறவேன் வெல்லுங் கழல்மறவேன் செந்திலொரு
கால்மறவேன் பன்னிரண்டு கண்மறவேன்-மேன்மைதருங்
கொற்றக் கொடிமறவேன் கண்மணியாஞ் செவ்வேளைப்
பற்றினேன் ஈங்கிவையென் பற்று. 60

அழகாரும் செந்தில் அணைந்துன் முருகார்
கழல்கள்யான் கண்ணாரக் கண்டு-மழவாகும்
அக்கோலம் உள்ளுருக்க அங்கே பணிசெய்வ
தெக்காலம் வேலா இயம்பு. 61

செஞ்சேவ லின்கொடியாய் சேவேந்து சங்கரர்
தஞ்சே யெனத்தரணி சார்பவனே-மஞ்சேய்
மயிலிவர்ந்து செந்தில் மகிழ்வோனே மன்னும்
அயிலாயுன் றாளே அரண். 62

செந்தினகர் செந்தினகர் செந்தினகர் செந்தினகர்
செந்தினகர் செந்தினகர் என்றுசொல்லிக்-கந்தனடி



வந்தித்து நிற்பேன் வழியடியேன் ஆதலினால்
பந்தவினை ஓடும் பறந்து. 63

ஆறு முகத்தெங்கள் ஐயா திருச்செந்தில்
வீறுடைய வேலவனே வேண்டாவோ-தேறுமுகம்
செய்தென்னை யாண்டருளிச் சேவடியைக் காட்டியென்றும்
உய்ந்திடவே ஏற்கும் உவப்பு. 64

சீர்பூத்த செல்வத் திருச்செந்தில் சேர்ந்தமர்ந்த
ஏர்பூத்த கந்தன் இணையடிகள்-நார்பூத்த
நல்லடியார் சேமத் துணையாகும் நாமுகந்து
சொல்லத் தகுமனமே சூழ்ந்து. 65

செந்தில் புகுந்தெங்கள் செவ்வே ளடிபணிந்தே
உந்தும் வினையவற்றை ஓட்டுகந்து-நந்தும்
பிறவிக் கடல்கடப்பேன் பேரின்பம் பெற்று
மறலி தொழில்துடைப்பேன் மற்று. 66

இன்றே எழிற்செந்தில் எய்தி இறைஞ்சுமின்
குன்றே யனைய குவவுத்தோள்-வென்றிவேல்
ஒன்றேந்து கையானை ஓங்குமயில் ஊர்வானை
நன்றே பணிமின் நயந்து. 67

கோலப் பசுங்கிள்ளாய் குற்றமறுத் தாட்கொள்ளும்
பாலன் விளங்கும் பதிபகராய்-ஞாலம்
இடையகலாத் தொண்டாற்றி ஈடேற நல்ல
நடைபயிற்றுஞ் செந்தில் நகர். 68

துதித்திடுவாய் நீவாக்கே சொல்லியென்றும் வாழ்த்திப்
பதித்திடுவாய் நெஞ்சேஉள் பார்த்துக்-கதியருளி
உம்பர் கிளைகாத்த உத்தமன் ஆறுமுகன்
எம்பெருமான் செந்தினக ரென்று. 69

சீரார் திருச்செந்தூர்த் தேவா திருமாலின்
ஏரார் மருகா இறையவனே-காரார்
குழலுமை சேயே குவலயத்து வந்தே
எழவெமை யாள்வா யினிது. 70

மான்மருகா வென்று வழுத்தே னவனாமம்
வேன்முருகா வென்று விளம்பகிலேன்-பான்மைபெறச்
செந்திற் பதியென்னேன் செவ்வேள் அடிபணியேன்
அந்தோநான் வாழ்வகையுண் டா. 71

செவ்வேற் பெருமானே செந்திற் பதியானே
இவ்வேழை யேற்கு மிரங்குவையோ-செவ்வையே
தேவர் குடிகாத்த தேவே இரங்கிலையேல்
ஏவர் துணையிங் கெனக்கு. 72

மானேரும் நோக்கியெம் வள்ளி மணவாளா
தேனே திருச்செந்தில் தேவேஎம்-மானே
கடையவ னாகக் கருதிக்கை விட்டால்
அடையும் புகலெனக்கிங் கார். 73

பூமங்கை நாமங்கை பொய்தீர் புலோமசை
ஏமம் பெறவே இனிதளித்தான்-சேமஞ்செய்
செவ்வேளெம் செந்தில் சிறந்தோங்கு தெய்வமென
எவ்வே ளையுமேத்து வேன். 74

திருத்தங்கு மார்பன் திசைமுகன் என்றிங்
கொருத்தருங் காணா துயர்ந்தே-பெருத்ததழல்
என்ன நிமிர்ந்தான் இளஞ்சேய் திருச்செந்தில்
மன்னன் பதமே மதி. 75

திருவார்ந்த செந்தில் திகழவரு தெய்வம்
செருவார்ந்த செய்யவேல் தெய்வம்-உருவார்ந்த
வள்ளி பிடிமகளை வைத்தொளிருந் தெய்வநமை
எள்கலின்றிக் காக்குமே ஈண்டு. 76

வினைகெடச் செய்திடும் வேல்வாங்கி நின்று
தினைகெட லின்றிநலம் சேர்க்கும்-நனைகவுள்
வேழமுடன் கூடி விரவும் கடற்செந்தில்
தாழவுறும் சேயோன் தழைத்து. 77

செந்தமி ழாய்ந்த சிறப்புடை எம்பெருமான்
செந்திலில் வந்தருளும் சீர்மையான்-கந்தனெனப்
பேர்புகல அண்ணிக்கும் பேராளன் என்னுள்ளே
ஏர்பெறவே நின்றான் இருந்து. 78

அருமைத் திருச்செந்தில் ஐயனடி காண
உரிமையாற் சென்றங் குறைந்தே-ஒருமையால்
வந்தித்தே வாழ்த்தி வணங்குவேன் நல்லுருவைச்
சிந்தித்தே நிற்பேன் தினம். 79

என்னுடைய தீய இருளைத் துரந்தநம்
மன்னன் திருச்செந்தில் வாழ்வுகந்த-தென்னவன்



சேவடியே சிந்தித் திருநெஞ்சே சேமமாம்
பூவடியே தூவிப் புகழ்ந்து. 80

அற்புதமே யான அமுதத்தின் தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றுவன்-பொற்புடைய
செந்தில்சேர் கந்தன் திருவடியை ஏத்தியே
வந்தித்து நெஞ்சமே வாழ். 81

சாயாத அன்பையே நாளும் தழைப்பவரைத்
தாயாகிப் பேணும் தயாபரன்-சேயாகச்
செந்தினகர் வாழ்கின்ற செவ்வேள் மலரடியை
எந்நாளும் நெஞ்சமே ஏத்து. 82

ஆற்றுப் படுக்கும் அடிமலர்கள் ஏத்தாதே
போற்றித் திருச்செந்தில் புக்கங்கே-வேற்றவுணர்
தம்மையடும் வேற்பெயரைச் சாற்றாதே ஈங்கந்தோ
எம்மையேன் வைத்தாய் இயம்பு. 83

கன்னெஞ்ச வன்மரக்கட் கள்வனையும் ஈர்த்தாண்ட
நன்மைசேர் செந்தினகர் நாயகனே-என்நெஞ்சும்
நல்லிடமாய்க் கொண்டாய்க்கு நாயேன்செய் கைம்மாறென்
வல்லை தருவாய் வரம். 84

செந்தினன் மாநகர் சேரேன் திருவடிக்கே
எந்தநற் றொண்டும் இயற்றகிலேன்-சந்ததமும்
வாழ்வதற்கே எண்ணி வளர்கின்றேன் ஏழையேன்
தாழ்வதற்கோ இந்தத் தகவு. 85

அன்பர்தங் கூட்டத்தில் ஆளாய்க் கொடுத்தென்னை
இன்பமளித் தாட்கொண்ட எந்தையே-செந்திலின்
தெய்வமே என்றென்று சிந்தித்தே நாயடியேன்
எவ்வங்கள் போக்குவன் ஈங்கு. 86

திருச்செந்தில் வாழ்கின்ற தேவனே நின்றன்
விருப்பமே என்பால் விளைய-இருப்பதன்றி
வேறொன்றும் வேண்டேன் வினைதீர்க்கும் மாமருந்தே
தேறும் வகையெனக்கே செப்பு. 87

ஐயா திருச்செந்தில் அப்பா உனைப்போல
வெய்யேனை ஆட்கொள்ளும் மேலவரார்-எய்யாமற்
காப்பாய் எனைக்கடைக்கண் பாராய் கடவுளே
பாப்புனைந்து சாற்றுவனப் பா. 88

மலங்களைந்தால் நொந்து வகையற்றேன் தன்னை
விலங்க எடுத்தருள் வேலா-நலங்கிளர்
செந்திற் குமராவுன் சேவடிக்கீழ் தாழ்கின்றேன்
எந்தவினை யும்போக்க என்று. 89

வாழ்முதலே செந்திற் பதியில் வளர்கரும்பே
ஊழ்முதலைப் போக்கி ஒளிவளரும்-வாழ்வுதவிச்
சந்ததமும் உன்றாள் தரிசிக்கும் பேறீவாய்
கந்தா கடையனையும் காத்து. 90

கடையவ னேனையுங் காத்தல் கடனாம்
உடையவர்க் கென்பதோர் உண்மை-விடையவன்றன்
சேயே திருச்செந்திற் சேவகனே கும்பிட்டேன்
நீயே வருவாய் நிதம். 91

செந்தில் திருச்செந்தி லென்று தினந்தினமும்
சிந்தனைகள் செய்தே திரிவேனைக்-கந்தனே
எவ்வேளை யுங்காத் தினிதருள வேண்டினேன்
செவ்வே யளிப்பாய் தினம். 92

நீருருகக் கண்கள் நினைந்திடேன் செவ்வேளின்
பேருருக நின்று பிதற்றிலேன்-சீருருவச்
செந்தில் திருக்கோயில் சென்று வலம்வரேன்
எந்த வழியோ எனக்கு. 93

ஓயாதே உள்கி உருகுவார் உள்ளிருக்கும்
தாயான செந்தில்சேர் தத்துவனை-நாயேனும்
உள்நினைந்தேன் எல்லாரும் ஒன்றாக உய்யவே
எள்கலின்றிக் காக்குமே என்று. 94

என்னையுந் தன்றொண்டி லேற்றருளு மென்னையன்
தென்செந்தில் நன்னகர்ச் சேவகன்-நன்னெஞ்சே
கோலவேல் ஏந்தியாள் கொற்றவன்பேர் சொல்லிநீ
ஏலவே இன்புற் றிரு. 95

பூவார் திருவடிகள் பூண்டேன்என் சென்னிக்கே
தேவார் திருக்கைவேல் சேவித்தேன்-நாவாரச்
செந்தமிழ் பாடியே சீருற்றேன் காத்திடவே
செந்திலாய் நற்கருணை செய். 96

போற்றி திருச்செந்தில் போற்றி திருக்கைவேல்
போற்றி குகனூரும் பொன்னூர்தி-போற்றியெம்



வெவ்வினை போக்கியருள் வேலன் அடியிணை
அவ்விய மின்றி அகன்று. 97

போற்றி திருச்செந்தில் போற்றி யவனாமம்
போற்றியவன் சேவற் பொலன்கொடி-போற்றியவன்
ஏறுதகர் என்றே இயம்பின் மடநெஞ்சே
கூறுபடும் நோய்களெனக் கொள். 98

போற்றி திருச்செந்தில் மேவிப் பொலிகோயில்
போற்றி திருத்தொண்டர் பொற்கழல்-போற்றி என்றும்
காக்கின்ற நீறென்பார் காற்போதென சென்னிமிசைப்
பூக்கின்ற பூவாம் பொலிந்து. 99

போற்றி திருச்செந்தில் மேவுமோர் புட்கரிணி
போற்றியவன் தேவியர் பொற்பாதம்-போற்றியே
அன்பர் விழிக்கென்றும் ஆராத கோலமென
என்புருக ஏத்துவன் ஈங்கு. 100

### வாழ்த்து

செந்தில் நகர்வாழி சேயோன் கழல்வாழி
கந்தன்கை வேல்வாழி கண்டுருகி-வந்திக்கும்
தொண்ட ருடனித் துதியமுது துய்க்கின்ற
எண்டிசையோர் வாழி இனிது.

**செந்திலாண்டவன் துதியமுது முற்றிற்று**

# வண்டுவிடு தூது

## திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்

மூக்கா லுழுதுண்ணும் வண்டுகாள்
மூத்தோன் இளவலைக் கண்டுதான்
தேக்கா ரமுதரன் மைந்தனே
சீர்ப்பார்ப் பதிதரு கந்தனே
நோக்கா யுனைநினைந் தன்பினால்
நோற்பாள் தனையின மென்றுநீர்
மாக்கா வளமலி போரிவாய்
மாத்தா ளிணைதொழு தேத்துமே. 1

தாமரைப் பூமணத் தேனெலாந்
தண்டுறை யுண்டுறை வண்டுகாள்
கோமளப் பாவையர் கேள்வனைக்
கொண்டை மயூரப்ர சண்டனைப்
பாமணப் போரியிற் கண்டிதோர்
பாவைப ணிந்தன ளென்றுதான்
நீர்மனத் தன்பொடு பேசுவீர்
நீள்சுகப் பொய்கையில் மூழ்கவே. 2

தாதினைத் தேனொடுங் கூட்டியே
சந்தனம் பூசிய வண்டுகாள்
ஆதரித் தென்னைமுன் ஆண்டவன்
ஆறுமு கப்பெரு மாளுடன்
பேதமைப் பான்மைய ளாயினும்
பிச்சியை யொத்தவ ளேனுமியான்
மூதருட் பேரமு தாழிவாய்
மூழ்கிடப் பேசுமின் நீவிரே. 3

சோலை விருந்திட வுண்டுதான்
சோபனம் பாடிய வண்டுகாள்



காலமெ லாமுனை யேநினை
காரிகை கைதொழு தாளென்றே
ஆலையின் வாயென மேதிவாய்
அம்புயத் தேன்சொரி போரிவாழ்
வேலவன் நூபுரக் கஞ்சமேல்
விழுந்தெழுந் தாடிவி ளம்புமே. 4

கோங்கலர் மாழைம தாணிமேற்
குயின்ற மணியன்ன வண்டுகாள்
மாங்கனி வாழையின் தீங்கனி
மன்னு பலாக்கனிச் சாறெலாந்
தேங்குறும் போரியி லுண்டுநீர்
செவ்வேள் பதம்பணிந் தேத்தியே
ஓங்கொளி வீடுற நாயினேன்
ஓதுமின் என்துணை நீவிரே. 5

சந்தனச் சாரலின் நெய்தலில்
தண்டலை நந்தனச் சூழலில்
வந்தொரு நால்வகைப் பூநறை
வாசந் துளைந்தாடும் வண்டுகாள்
கந்தனைப் போரிவி சாகனைக்
கண்டென் கவலைக்க ருத்தறச்
சிந்தை மகிழ்ந்தெனை யாளவே
செப்புமின் எற்குற வானிரே. 6

மல்லிகைத் தாதரித் துண்டலர்
வாரிசத் தேன்கொடு வாய்கழீஇ
மெல்லிதழ்ப் பூவணை மீதிலே
மென்துயில் கொண்டுறை வண்டுகாள்
அல்லியல் நெஞ்சினள் அன்பிலா
ளான நெறிபுரி யாதவள்
புல்லிய ளென்றுவி டாதெனைப்
போரி முருகனுக் கோதுமே. 7

தண்டலை யூர்விண்டு நெய்தலூர்த்
தாவடி போய்ப்பனைக் கள்ளெலாம்
மொண்டு மிகக்கொள்ளை கொண்டுதான்
மொய்த்து வருஞ்சிறை வண்டுகாள்

பண்டெனை யாண்டருள் நேசனைப்
பண்புறு போரியில் வாசனைக்
கண்டினம் ஆண்டுகொ ளென்றுநீர்
காண வுரைத்திடு வீர்களே. 8

மாமலைச் சேணிலத் தேதுஞ்சி
வார மனைபுகுந் துண்டுபின்
கோமலர்க் காமுக சாலையிற்
கூடும் அரசிள வண்டுகாள்
தேமலர்த் தார்புனை மார்பனைச்
செஞ்சிறை யஞ்சேவ லாளனைக்
காமணக் குந்திருப் போரிவாய்
கண்டெனை யாண்டிடச் சொல்மினே. 9

நீல நிறப்பொறி வண்டுகாள்
நித்தலுங் கைதொழு வேன்உமை
ஏல வுரைத்த மொழிகளை
யெல்லாம் அயர்த்து விடாதுநீர்
சால நிகழ்த்திடும் போரிவாழ்
சண்முக வேலனுக் குங்களைப்
போலு மெனக்குற வுண்டுகொல்
பொங்கரும் நுங்களுக் கீவலே. 10

**வண்டுவிடு தூது முற்றிற்று**



உ

# செல்வச் சந்நிதி முருகன் பேரில்

# கிளித் தூது

## சந்தனா - நல்லலிங்கம்

### விநாயகர் துதி

**வெண்பா**

வாரானைக் கன்றே வரமருளும் ஆரணமே
காரானைக் கன்றே கலியுகத்தில்—தாரானை
செல்வச் சந்நிதியானைக் கிளித்தூதி னாற்பாட
செல்வமிகு வாரணமே காப்பு. 1

**இந்நூல், குருவாகிய தாய் பசுவாகிய மகளைப் பக்குவப்பட்ட ஆன்மாவாக்கித் தருமமாகிய தோழி துணை செய்ய, அறிவாகிய கிளியைத் தூதனுப்பிப் பதியாகிய முருகக் கடவுளோடு கலந்து பேரின்பம் அனுபவித்தலைக் கருதிற்று.**

திருவுடைய பூந்தொடையல் சூழ்ந்த
கருங்குழ லவிழ்ந்ததென்ன மகளே
மருவுகந்தன் மால்மருகன் றானும்
மங்கையுன்னை வந்தணைந் ததாலோ
விருப்புடன் மலர்வனத்திலே
சுரும்பூதும் மலரெடுக்க விரைந்தேன்
மலர்க் கொடிகள் மாறுசுற்றியே
மலர்க் குழலும் அவிழ்ந்ததென்றன் தாயே
பைந்தொடியே நுதலிலிட்ட
பசுஞ் சாந்தம் அழிந்ததென்ன மகளே
ஆறுமுகவேலன் சந்நிதியான்
ஆருமறியாம லணைந்தாரோ
வேயுறு தோழியர்களோடு

வெயிலில் விளையாடியதனாலே
வியர்வை மிக்குச் சிந்தியதாலே
விரைசாந்தம் அழிந்ததென்றன் தாயே
கெண்டை விழிகளிரண்டுமே
கேடுபடச் சிவந்ததென்ன மகளே
தொண்டை மானாறுறையும் வேலர்
தொட்டணைத்ததால் சிவந்ததாமோ
தீட்டியமை விழியினையுடையார்
நாட்டியங்கள் புரிந்ததனாலே
வாட்டமின்றிப் பார்த்திருந்தேன்
நாட்டவிழி சிவந்ததென்றன் தாயே
கொவ்வைக்கனி இதழ்களிலே
குறிகள் பதிந்த தென்ன மகளே
கோதிலாத குமர வேளும்
கோலமுடன் கூடி யணைந்தாரோ
பஞ்சவர்ணக் கிள்ளையதற்குப்
பாலடிசில் ஊட்டி நின்றேன்
வளைந்த சொண்டால் கனியெனவே
வாகாகக் கௌவியதென் தாயே
புரிசங்கம் நேர்கழுத்தின்
புனைந்த வைரம் நெரிந்ததென்ன மகளே
பூந்தாரா செங்கடம்பனாரும்
பூவையுன்னைக் காவிலணைந்தாரோ
வனிதையர்களோடு கூடியே
வரிப்பந்து விரைந்தாடுகையிலே
வசையேதும் இல்லாமலே
வயிரமணி நெரிந்ததென்றன் தாயே
தையலே உன் செங்கரத்தினில்
தங்கவளை நெரிந்ததென்ன மகளே
தெரியலுடைச் சேந்தனவனும்
செல்வச் சந்நிதியானும் அணைந்தாரோ
பாவையர்களோடு கும்மி கொட்டி
பாங்குடன் நான் ஆடும் போது
பொன்வளை நெரிந்த தென்றன் தாயே
புரிந்திடுவீர் காரணத்தை நீரே
பொற்சுணங்கு மார்பினில்
பதிந்த நகக் குறிகளென்ன மகளே



வெற்றிபெறு வேலவராம் செல்வ
சிவ சண்முகரும் வந்தணைந்தாராமோ
பொல்லாத பூனையொன்று தான்
பொன்ற நசுக்கியதென் கிள்ளைதனையே
நில்லாது காக்கச் சென்றேன்
நகத்தாலே கீறியதென் தாயே
மார்பிற்றுணி கொய்தலைப் பாக
மாற்றியணி காரணந்தான் யாது மகளே
மால்மருகன் ஆறுமுகனாரும்
மாலுங்கொண்டு உன்னை அணைந்தாரோ
கான் சுனையில் கன்னியர்களோடு
களித்து நீராடி நின்றேன் தாயே
வானரமுந் துள்ளிய தனாலே
வீண் பயத்தால் மாறு தலைப்பாச்சே
இந்தவிடை யத்தனையும் சொல்ல
இங்கிதமாய் எங்கு கற்றாய் மகளே
பந்தமுடை சண்முகனார் தாமும்
படித்துச் சொன்ன வார்த்தைகளோ கூறாய்
குன்றிலுறை குமரவேள் தான்
உன் கரம் பிடிப்பா ராயின்
மின்னனைய என் மகளே கேளாய்
பொன்னுலக வாழ்வு பெறுவாயே
எனையீன்ற எந்தன் அன்னாய்
துணையுறு தோழியின் இல்லம்
சென்றுமே கடிதில் மீள்வேன்
சீருடன் விடையுந் தாரீர். 2

**விருத்தம்**

தன்மனை தன்னை விட்டே தலைவியும் விடையுங்கொண்டு
தன்னுயிர் பாங்கியில்லம் தயவுடன் நாடியேதான்
மன்னு மாங்காவில் வேலர் வடிவுடன் அணைந்தசெய்கை
நன்னுதல் நங்கைதானும் நயந்துமே நவிலலுற்றாள் 3

**வேறு**

எந்தனுயிர்த் தோழியரே
ஏந்திழையே எந்தனுரை கேளும்
செல்வச் சந்நிதி வேள் காவினிலே

சேர்ந்தணைந்து சென்றாரடி தோழி
அன்னை தந்தை தவப்பயனே
அன்பராய் முருகர் வந்தணைந்தார்
இன்னும் நீசெய் தவப்பயனே
இந்தக் காவினிலே கந்தரணைந்தார்
இந்த மொழி கேட்டதுமே நங்கை
இயம்பினளே தோழிக்குத் தன் நிலையை
கந்தர் வந்தணைந்து சென்றதாலே
எந்தன் சித்தம் கலங்கிடுதே தோழி
மெய்யாகவே கூடிச் சென்ற சேதி
மேதினியில் யார்க்குரைப்பேன் தோழி
கையினிலே வேலுடனே வந்து
மெய்கலந்து சென்றனனே தோழி
தோற்றமெல்லாம் கந்தவேளாய் எங்கும்
தோற்றுதே யென் கண்களுக்குத் தோழி
தேகமெல்லாம் சோர்கிறதே தோழி
தேசுடைய வேலரைக் காணாமல்
வேலவரை மீண்டுங் கண்டு கூட
வேண்டியதோர் புத்தி நீயும் கூறாய். 4

**விருத்தம்**

மாண்புறு மங்கை நங்காய் மேதினியதனில் நீயும்
மயங்கியே தயங்க வேண்டாம் மதியுரை நானும் சொல்வேன்
சேணுயர் மாடமோங்கும் செல்வச் சந்நிதிவேலன் பால்
பேணுதற் கினியதான கிள்ளையை விடுப்பாய் தூது. 5

**தரு**

கனக மாமணிக் கூட்டினிலே உன்னைக்
கண்ணின்மணிபோலப் பேணி வளர்த்தேனே கிள்ளையே
மனமுவந்து மாடமோங்கும் செல்வ
மாநகர முருகரிடம் தூது செல்வாய் கிள்ளையே
மனக்கவலை தீர்த்துவைக்க வேண்டி நீயும்
மதியுடனே சென்றுவாராய் எந்தன் கிள்ளையே
இமையவரும் இந்திரனும் வந்து தமது
இடுக்கண் கூறி இரக்கும்போது இயம்பாதே கிள்ளையே



குறவள்ளியுடன் குலவிநிற்கும் வேளை
குதலைமொழி கூறாதிரு எந்தன் கிள்ளையே
குஞ்சரியார் சஞ்சரிக்கும் வேளை தன்னிலே
கொஞ்சுமொழி கூறாதிரு கோலக் கிள்ளையே
கந்தர்வனாம் ஐராவசு பூசிக்கும் வேளை
எந்தன் காதல்தனை இயம்பாதிரு எழிற்கிள்ளையே
மருதர் கதிர்காமருக்கு முருகர் தாமே
மந்திரமியம்பும் போது உரைத்திடாதே கிள்ளையே
வீரவாகு தேவர்தாமும் வணங்கும் வேளை
வேதனையைக் கூறிடாதே வண்ணக் கிள்ளையே
மேனகை திலோத்தமையாம் நடனமாதர்
மேன்மையுற வேண்டும்வேளை இயம்பாதே கிள்ளையே
செந்தமிழாற் பாவலர்கள் வாழ்த்தும்போது
சொந்தமுள்ள கந்தனிடம் குறை சொல்லாதே கிள்ளையே
வாசமலர் தூவிப் பணிந்தேதான்
வாதை தனை உரைத்துவாராய் எந்தன் கிள்ளையே.6

**விருத்தம்**

குளிர்மலர் தூவியேதான் கழலணிதாள் பணிந்து
களிப்புறக் கந்தர் என்னைக் கலந்துமே சென்ற செய்கை
அழிந்த என் உள்ளந்தன்னில் அதி நிறை வளிக்கும் வண்ணம்
அளியுறு தொடையலொன்று அவசியம் வாங்கி வாராய்.7

**வேறு**

தையலுரை கேட்டதுமே கிள்ளைதானும்
தைரியமாச் சந்நிதி யுற நினைந்ததே
உத்தர திசையை நோக்கியே
உயரப் பறந்ததாமே கிள்ளை
நித்தமுமே தேவரெல்லாம் போற்றும்
நிகரில்லாக் கோணேச்சரம் தான் பணிந்ததே
முத்துத்திரை கொழிக்கும் நல்ல
முந்திய கேதீச்சரமும் பணிந்ததே
நற்றமிழார் நாவலர் போற்றும்
நல்லூரிற் கந்தவேளைப் பணிந்ததே கிள்ளை
மாருதப்புரவீகவல்லி சாபந் தீர்த்த
மாவிட்ட புர வேலனை வணங்கிற்றே கிள்ளை
வானோங்கி வளர்ந்துநின்ற பனந்தோப்பு

தேனோங்கும் மா பலாவின் வளத்தோப்பும்
கானோங்கிக் காட்சிதந்த செவ்விகண்டு
களித்துமே பறந்ததாமே வண்ணக்கிள்ளை. 8

**விருத்தம்**

சோதிமா மணிகளோங்கும் சுடரொளி மாடமோங்கும்
கோதிலாக் கொடிகளோங்கும் போதலர் சோலையோங்கும்
போதமே அளிக்கவல்ல பொலிவுறு சந்நிதியை
ஏதமே போக்க வென்றே இசைந்துமே வணங்கும் கிள்ளை.9

**நொண்டிச் சிந்து**

தத்துகடல் முத்துமிழ்ந்ததே
வித்தாரச் சந்நிதியான் பொற்பதியிலே
குத்திடுதே கோலமணிக்கோபுரம் வானை
குலவியே விளங்கிட நின்றுயர்ந்துமே
பொல்லாத வினைகள் போக்கும்
செல்வச் சந்நிதிக்கடலில் ஆடியதே
பொற்றேரோடும் வீதி தனையே
பொலிவுற வலம் வந்து வணங்கியதே
நக்கீரரின் ஆற்றுப் படையை
தத்தை மொழியாலே இயம்பிற்றே கிள்ளை
ஆலிலையிலே சாதம் உண்டு
பாலமுது பஞ்சாமிர்தம் தாமுமுண்டு
ஏலவார் குழல் வள்ளி
தேவானையாருடன் மகிழ்ந்தவேலர்
பூவரச மர நிழலில்
புன்னகைத்துப் பக்தர்களைக் காத்து நிற்கையில்
வன்ன மயில் தோகை விரித்து
வாகாக ஆடுநின்ற வேளைதனிலே
வளைசிலை மதன் செய்கையால்
வனிதையர் படுந்துயர் பன்னிற்றே கிள்ளை
வாய்புதைத்து வணங்கி நின்று
வாதைப் படும் பெண்ணின்றுயர் விளம்பியதே
பூவை படும் பொல்லாத்துயரம்
பூதலத்திற் றாங்கொணாது என்பதனையே
பூங்கடம்ப மார்பனிடம் மெல்லக் கழறி



பூந்தொடையல் ஒன்றருள வேண்டுமென்றதே
புன்னகைத்து வேலவரும் மெல்ல
தன்னுடைய மார்பிலணி வாசத்தொடையை
மன்னுகாதல் வசப்பட்ட மங்கையவளின்
பொன்றுதுயர் போக்கிடவே புரிந்தளித்தார்
மெய்புளக மெய்தியதே வண்ணக்கிள்ளை
தெய்வக் கந்தன் சந்நிதியைத் தான் விட்டதே
பூந்தொடையைப் பூவையவள் முகமலர
பூங்கரத்தில் பூசித்துமே அளித்திடவே
மால்மருகன் மீது காதலான மங்கையும்
மலர்த்தொடையலைத் தனது மார்பிலணிந்தே
மாலுறுமனத் துயரம் மாறக் கண்டனள்
மலர்தலையுலகினில் மகிழ்வாய் வாழ்ந்தாள்
வச்சிர் கூட்டிலுறை கிள்ளையை
வாகாகக் கைகளிலே காரிகை யேந்தி
இச்சகமாகப் பல வார்த்தைகள் கூறி
இனிதாகப் பாலமுதும் பழமும் ஊட்டி
இசைவாக நாட்டின் வளங் கேட்டனளே
இங்கிதமாகக் கிள்ளைதானும் இனிதே செப்பும் 10

**விருத்தம்**

கோபுரம் உயர்ந்த நல்ல கோயிலிற் குடிகொண்டோங்கும்
கோமள வண்ணச் செவ்வேள் கோழிக் கொடியுடையான்
பூமகள் புளக மெய்தப் பொலிந்திடும் சந்நிதி பதியான்
தோமறு செல்வச் சீரை சொற்கொடு உரைக்கலாமோ. 11

**நொண்டிச் சிந்து**

கன்னல் கதலி வளரும் நல்ல
சென்னெலும் சிறந்து வளர்ந்திடுமே
மன்னு புகழ் வளரும் நல்ல
மாதவம் புரி செல்வச் சந்நிதியில்
வரிக்கை தேன் மாரிபொழிந்து
வரம்பினை உடைத்துமே வயல்பாயும்
மாங்கனிகள் சிதறி நிற்க
வாழைக் கனிகளும் புவியிற் சிதறிடுமே
மாதவி புன்னை வெண் செருந்தியுமே

தாதவிழ்ந்து சுகந்தம் சிறந்திடுமே
தானம் தவமிவை ஓங்கும்
அன்ன தானமும் ஓங்கிடும் ஆச்சிரமத்தில்
சித்தரும் யோகியரும் ஞானியரும்
சித்தம் வைத்தே உறைந்திடும் பதியிதுவே
செந்தாமரை செங்கழு நீர்
செறிந்திடுமே நீர் ஓடை யெங்குமே
கண்டா மணியின் ஓசை
கனகாதம்வரை கேட்டிடுமே
குன்றாடும் குமர வேளும்
குஞ்சரியும் சஞ்சரிக்கும் கர்ப்பக்கிருகம்
வண்டாடும் மலர்க்கூந்தல்
வள்ளியம்மை யாருக்குத் தனிக்கோயில்
கொண்டாடும் வாரணமும்
குலவிடும் கோயிலின் இடப்புறமே
நிலவிடும் வினை தீர்க்கும்
நீர்க்கேணியும் தானதன் அயலிலுண்டு
தீபங்கள் தூபங்களும்
திருவினை விளக்கும் கற்பூரவொளியும்
மேளங்கள் தாளங்களும்
மேன்மையைக் காட்டிடும் நாதங்களும்
தொல்புகழ் காவடிகள்
தொல்வினைகளை அவை களைந்திடுமே
தொண்டர்கள் பசனைகளை
விண்டுமே விளக்கிட வார்த்தையில்லையே
பொல்லாத பிறவித் துயரம்
பொன்றிட இறைஞ்சுவர் அடியவரே
கல்லாத மாந்தர்களும் நல்ல
கல்வியறிவிற் சிறந்த மேதைகளும்
சொல்லாலே துதித்திடுவர்
செல்வச் சந்நிதிவேலவனின் அருள்பெறவே
நீற்றினைப் பூசியேதான்
நீண்டநாள் வருத்திடும் நோய்தீர்வர்
போற்றுவர் வேலினையே
புகழ்பாடுவர் ஆடுவர் பொலிந்திடுவர்
சிங்காரச் சந்நிதியான் உந்தன்



சிந்தையுறவே நீர் வாழ்ந்திடுவீர்
மங்காத புகழுடனே என்றும்
மாண்புறு சந்நிதி வேள் வாழ்ந்திடவே
தங்கிடு தவத்துடனே
தவஞானியர் யாவரும் சிறந்திடுவர்
பொங்கிடும் அருள் பொலிய
பொன்னகரில் வேலர் வீற்றிருப்பர். 12

**கிளித் தூது முற்றிற்று**

# திருச்செந்தூர் நொண்டி நாடகம்

## முத்தாலங்குறிச்சிக் கந்தசாமிப் புலவர்

### காப்பு - நேரிசை வெண்பா

ஆடகப்பொன் மாடத் தணிதிகழ்செந் தூர்நொண்டி
நாடகத்தைச் செவ்வே ணலம்பெறுவான்-பாடவருஞ்
சந்திரன்மெய் குன்றத் தவளமருப் பொன்றேவும்
ஐந்துகரன் பொற்றா ளரண். 1

### காப்புப் பருவம்

#### விநாயகர்

செந்தா மரை மலருறு வனிதையு
வந்தே யுறை திருநக ரலையெறி
செந்தூர் வளர் அறுமுக னதுபுகழே-கொண்டாடவே;

செந்தே றன்ம தலையறு குதலைபு
னைந் தோர் வடை யவல்பொரி யமுதுகொள்
சிந்தூ ரம திருசர ணுறுதுணையே. தந்தானனா. 2

#### முருகன்

வாரத் தெழுதிரை யொலியுரு மெனவொலி
ஆரத் திரள்மணல் செறிகரை யிடைபொலி
மானத் திருநகர் வருமுரு கனதிசையே-கொண்டாடவே;

சூரற் கிளையரு மவர்துணை யெனவரு
தலைவரு மழியவ யிலைவிடு
தோகைக் கடவுள ரிணையடி பரவுதுமே.
தந்தானனா. 3



#### இறைவன்

அடலி னிசிசர ருடல மதுபொடி
படவு மயின்மிசை நடன மிடுபவர்
ஆல முண்ட நீல கண்டர்
பால னண்டர் பீழை துண்ட
அயில்வி டுத்தம யூரன்க தலிகை
குருகு வைத்தகு மகன ரும்புகழே-கொண்டாடவே;

புடவி யிடைபல சடல மதுபல
தடவை பிறவியி லிடைத லுறுமுயிர்
போத லெங்ஙன் மீள லெங்ஙன்
வாழ்த லென்ற கேள்வி யுந்து
புதைய மைத்துவங் கூழனல் நீர்தரை
வெளிய மைத்தவொ ருவனை விள்ளுவாம்.
தந்தானனா. 4

#### சந்தி விநாயகர்

செங்கமல வாவி கொங்குசெறி சோலை
பைங்கழனி யேநெ ருங்குவள மேய
செந்தினகர் வாழ்வு கந்தன்மிசை நொண்டியே.
கொண்டாடவே,

சங்கரிம ணாளன் நந்துவர பாலன்
வெங்கயமு காசூர்பங்கமுற வேசெய்
சந்தியின்வி நாயகன் றுணையு முண்டுமே.
தந்தானனா. 5

#### மும்மூர்த்திகள், அவர் மனைவியர், ஐயனார்

மாவி ளாவொடு தென்னைப லாபனை
பூவை சேகிலி புன்னைய சோகரி
வான நீவிடு சீரலை வாய்புகழே -கொண்டாடவே;
பூவில் வாழ்பிர மன்திரு மாலரன்
வேத நாயகி பின்னைம னோன்மணி
பூர ணைதவன் பொன்னடி கூறுதுமே. தந்தானனா. 6

#### சமய குரவர்கள்

சந்த னந்திகழ் சந்த னாசலச்
செந்தி லின்வரு கந்த னார்மிசை
சந்த தம்புகழ் சிந்து நொண்டியே-கொண்டாடவே;

செந்த மிழ்மறை தந்த ஞானிசம்
பந்தர் சுந்தரர் செஞ்சொல் வாகீசர்
செங்க மூல்தலை கொண்டு பாடுதுமே.
தந்தானனா. 7

செல்லு திகழுஞ் செழுஞ்சோலைச்
சேணார் நறவப் பிரசம்விண்டு
பல்கிப் பழனத் திடைபாய்ந்து
பசுங்கூழ் விளைந்தோங் கலைவாயே-கொண்டாடவே;
கல்லு கனியக் கவிபாடிக்
கானார் நரிகள் பரியர்கச்
செல்ல வருளுஞ் செம்மலடிச்
சேவை திளைத்தோ னடிதுணையே.தந்தானனா. 8

**வேல், சூரியன், சந்திரன், மயில்,**
**சேவல், நவவீரர், வீரபத்திரன்**

முகிலூரு கிரியூடு புளிஞூழல் பனைவாகை
முதுகீச கங்கே தகை
அகில்தாழை கணிசாதி புனைவாழை பிழிதூவும்
அஸலவாய்வி ரிந்தே றுசீர்-கொண்டாடவே;
இகல்மேவி வருசூர னொடுதார கனுமாள
எறிவேல்ப தங்கன் மதி
சிகிகோழி நவவீர ருமைபால னிவர்தாள்கள்
சிரமேல ணிந்தேத் துவாம். தந்தான்னா. 9

**சத்த கன்னியர்**

புவிமீதி லடிதாழ வானவரும் வந்தே
குமராகு காவெனப் பேறுபெறு செந்திற்
புகழ்மேவு நொண்டிதரை மீதுகூத் தாகவே-
கொண்டாடவே;

அவிராமி யயிராணி காளிவ ராகி
கவுமாரி நாராய ணிமகே சுரியென்
னவதார சத்திமன தவதான மரணே.
தந்தானனா. 10

குழறிக் குழறிக் குமரனைப் பாடெனப்
பழமைத் திருமொழி பயிலயான் பகர்ந்தேன்



ஆசு கூறா தவனி நந்தமிழ்த்
தேசி கன்புகழ் செப்புமிந் நூலே. 11

**நொண்டி களரியிற் றோன்றல்**

**விருத்தம்**

ஏடவிழ் கடப்பந் தார னிசையினைப் பரவும் நொண்டி
நாடக மதனைப் பார்மே னடித்திடக் கெச்சம் பூண்டு
ஆடகப் பணிகள் மேனி யழகுற நொண்டி நொண்டி
நாடகக் களரி தோன்றி நவிலுவான் நவிலு வானே. 12

**ஆனந்தக்களிப்பு (சிந்து)**

தெண்டிரை முத்தங்கொ ழிக்குந்-திருச்
செந்தில்வ டிவேலன் செம்புகழ் பாடத்
தொந்திவ யிறனைப் போற்றி-நானுந்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டினேனே. 13

செந்திரு மாதுசி றக்குந்-திருச்
செந்தின்மு ருகனைத் தேசிக னைப்ப
சுந்தோகை மேல்வரு வானைப்-போற்றித்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 14

விப்ரர்வ ணங்குசெந் தூரில்-வந்த
வேதாந்த சற்குருவை நாதாந்தப் பொருளைச்
சுப்ரம ணியனைக்கொண் டாடி-நொண்டி
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 15

பருதிச்செவ் வேற்படைப் பெம்மான்-பசும்
பச்சைமயில் வாகனன் செச்சைத ரித்தோன்
சுருதிப்ப ழம்பொருளை வாழ்த்தி-நானுந்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 16

ஒப்பாய்க்குப் பாயமுங் கட்டிக்-கொண்டைக்
குல்லாசப் பொற்சரிகைச் சல்லாவுங் கட்டித்
துப்பாரு முத்துத்தொங்கல் பூட்டி-நானுந்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 17

கண்ணாடி போற்சரிகை பதித்து -நானுங்
கால்வீசி வட்டமிட்டு மேன்மீசை திருத்திச்
சுண்ணாம்புக் கல்லுப்பல்லுக் காட்டி-நொண்டி

தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 18

தேன்மொய்த்த பூச்செண்டு கட்டிச்-சமணர்
சிரத்தையுங் காலிற்பனை மரத்தையுங் கட்டிச்
சோமன்த லைவிருது கட்டி -நானுந்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 19

மாயாவி தத்துக்கொரு வித்து-மலையாள
மந்திரமெல் லாம்படித்த விந்திர சித்து
தூயசன் மார்க்கசபை முத்து-நாலுந்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 20

இகப்பற்றில் லாதுயிர் புரக்குஞ்-செந்தில்
ஏகன்ப ணித்தவிந்தத் தேகந்த னக்குஞ்
சுகத்துக்க மென்றவிரண் டுக்கும்-நானுந்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 21

முருகன்பேர் நாவிலுச் சரிப்பேன்-செந்தில்
முத்தையனை வணங்காரைக் கேலிபண்ணிச் சிரிப்பேன்
குருபரனன் பரையுப சரிப்பேன்-சற்றுங்
கூசாம லெட்டாத தேசமுஞ்சஞ் சரிப்பேன். 23

ஆறெழுத்தை மாத்திரஞ் செபிப்பேன்-அந்த
அச்சரத்தை யுச்சரியாத் துச்சனரை வெறுப்பேன்.
..................................
......................... 23

தீயர்தமைத் துரும்பென ..... .....
.........................
...... ..... மதியேன்-மின்போற்
செத்துப்பி றக்கின்ற தெய்வங்களைத் துதியேன். 24

நன்மார்க்க மறியாத மூடம்-இந்த
நாட்டுக்கு ளெத்துமெத்தச் சூட்டுங்கி ரீடம்
துன்மார்க்க வித்தைக்குரு பீடம்-நானும்
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 25

ஆகட்டு மார்க்கும்வந்து நட்டம்-கைகால்
அல்லாமற் போனதென் பொல்லாவ திட்டம்
தோகைக்க டவுளிட்ட சட்டம்-நொண்டி
தொந்தோமென் றாடிக்கொளத் துயங்கட்டி னேனே. 26



## நூல்

### விருத்தம்

தென்மலை முனிவன் போற்றுந்
தேவனைச் சகத்திற் கோடி
மன்மத வுருவங் கொண்ட
வடிவனை முடிவி லானைத்
தன்மவா ரிதியைச் செந்தூர்
தழைத்தசண் முகனை நீலப்
பொன்மயூ ரனைக்கொண் டாடிப்
புகன்றிடு நொண்டி நானே. 27

### சிந்து

சேண்தொடு மாமலையும்-நதிகளுஞ்
செறிந்துபல் வளங்களும் நிறைந்துமிகு
மாண்புறு நன்னாடாம்-வண்டுறை
வாவிசூழ் நாவலந் தீவுதனில் 28

நாவலர் பாவலரும்-தேவரும்
நத்தியே வந்துறை வித்தகஞ்சேர்
மாவளம் வயல்வளமும்-பொருந்தியே
மழைவளந் தவறாத மண்டலமதில் 29

மழைக்கார் நிறத்தழகர்-செங்கண்
மாயவர் வேங்கட நாயகனார்
தழைக்குந் திருப்பதிக்குள்-கள்ளர்
சாதிக்கு ளேபிரக் யாதிக்குள்நான் 30

ஆதிக்க மேன்மைபெற்றேன்-நாட்டில்
அம்பல காரர்தொ ழும்பெருமான்
கீதத் தமிழாளன்-துரைத்
கெப்புலி பெற்றம தப்புலிநான் 31

புலிபாய்ச்சல் பாய்வதுபோல்-சூதும்
பொய்யுங் களவும் புரட்டுருட்டுங்
கலிகாலக் கற்பனையால்-எல்லாங்
கற்றறிந் தேன்பேரும் பெற்றிருந்தேன் 32

அறிந்தேனென் வல்லமைக்கு-வானில்
அம்புலி மானும பூர்வமல்ல
செறிந்ததி ருடருக்குளே-என்போல்
தீர்க்கமு மார்க்கமு மார்க்குமுண்டோ 33

உண்டான ஆத்தியெல்லாம்-வீட்டில்
உடைமை கடமைகளு முடனெடுத்துக்
கொண்டாடிக் கொண்டெழுந்தேன்-பாதை
கூடித்தென் பூமியை நாடிச்சென்றேன் 34

சென்றேன் தலங்களெல்லாம்-பின்னர்ச்
சிதம்பரத் தையர் பதம்பெறநான்
நின்றேன் புலியூரில்-தொண்டர்
நேசிக்குஞ் சந்நிதி வாசல்வந்தேன் 35

தேன்போலு மொழிபாகர்-ஆடகச்
செம்பொன்னி னாற்செய்த வம்பலத்தில்
தான்போய்ப் பொற்சுனைநீ-ராடியிரு
கைவக்கு மாத்துடன் கைகுவித்தேன். 36

குவித்தேன் மனங்களித்தேன்-தில்லைக்
கோவிந்த ராயன்ப தாம்புயத்தைச்
செவித்தேன் வெளியில்வந்தேன்-தெற்குத்
தேரடி மண்டபத் தோர்புறத்தே 37

புறத்தே யிருக்கையிலே-அந்தப்
பொன்னம்ப லத்தையர் சந்நிதிக்கே
சிறப்பான தேவடியாள்-முத்து
செண்பக ரத்தினஞ் சிவகாமி 38

சிவஞானம் வள்ளிமுத்தாள்-குப்பி
தில்லைசி தம்பரம் நல்லமுத்தாள்
அவிராமி வேதரத்னம்-தெய்வ
யானைச வுந்தரி யாதிரத்னம். 39

ஆதிக னகரத்தினம்-அபி
சேகரத் தினம்புட்ப ராகரத்தினங்
காதிற்செந் தேனொழுகுங்-கீதங்
கற்றசி தம்பர ரத்னத்துடன். 40



உடந்தைப்பொன் மான்கிளைபோற்-கூடி
ஒக்கச்சென் றார்நானும் பக்கத்திலே
தொடர்ந்தேனென் னாசையினாற்-சுற்றிச்
சுற்றிச்சி தம்பர ரத்னத்தையே. 41

பரமென்று சென்றடுத்தேன்-என்னைப்
பார்த்துக்கை கோர்த்துப்பி டித்துக்கொண்டாள்
திரமென்று நம்பிக்கொண்டேன்-வீட்டிற்
செல்லுமுன் பூர்வீகஞ் சொல்லுமென்றாள் 42

சொன்னேனென் செய்தியெல்லாம்-உள்ள
தொந்தம்வி டாதினிச் சந்தேகமென்
முன்னே நடவுமென்றாள்-ஆசை
மூட்டித்தன் வீட்டினிற் கூட்டிச்சென்றாள். 43

சென்றேன் மனைபுகுந்தேன்-செய்தி
சீக்கிர மாய்ச்சென்று தாய்க்குச்சொன்னாள்
இன்றாக்கம் வந்துதென்றாள்-நமக்
கேந்திழை யேகப்பல் சேர்ந்ததென்றாள். 44

சேர்த்தார்க்குத் தங்கமடி-இந்தத்
தேட்டாள னம்முடைய வீட்டாள்போல்
வாய்த்தா னெனப்பகர்ந்து-நல்ல
வாய்ப்பாய்ச்சு தென்றந்தத் தாய்ப்பாவி. 45

விருந்திட் டுபசரித்தாள்-என்னை
வெல்லச்சி தம்பர வல்லிகையால்
மருந்திட்ட வாடையுடன்-என்றன்
மனங்குளி ரச்சந் தனம்பூசினாள். 46

பூசச்சவ் வாதுதந்தாள்-நெற்றிப்
பொட்டுமிட் டாள்மிக்க கட்டுமெட்டாய்
வாசக் குழன்முடித்தாள்- என்முன்
வந்துநின் றாள்நல்ல விந்த்ராணிபோல் 47

இந்த்ரநீல மேல்வீட்டில்-எனைவாரும்
என்றாள் நானங்கு சென்றதின்பின்
சந்த்ரகாந்திப் பொற்சுழிகை-மெத்தை
தட்டிவி ரித்தாள்பொற் கட்டிலின்மேல். 48

மேலாக வென்னைவைத்தாள்-தானும்
வெக்கிநின் றாளொரு பக்கலிலே
சேலைமுன் தானைதொட்டேன்-வந்து
செவ்வேயி ருந்தாளென் கைவழியே. 49

கையிற் சுருள்கொடுத்தாள்-பச்சைக
கற்பூரம் பாக்கிற் கலந்துதந்தாள்
உய்யுஞ்சஞ் சீவியைப்போல்-இதழ்
ஊறல்தந் தாளதை மாறியுண்டேன். 50

மாறிச் சுருண்மடித்தாள்-மார்பின்
மத்தக யங்கொடு குத்தவிட்டாள்
மீறிச் சரசஞ்செய்தாள்-கொஞ்சியே
மேற்கொண்டாள் மின்கொடி
சேற்கெண்டைபோல் 51

கொண்டைச் சொருக்கவிழக்-குக்கு
குக்குவென் றெட்டுக்கு ரன்முழங்கத்
தண்டைப் பதம்வருந்த-மெல்லச்
சாய்ந்தாள் கொடுங்கையி லேந்திக்கொண்டேன். 52

ஏந்தியே முலைநெருடிச்-செவி
யேறுகண் ணாளைவளைத் திதழ்பருகிச்
சேர்ந்தேன் பரவசமாய்-இரு
தேகமொன் றாகிச்சம போகம்வரப் 53

போகித்து லீலைதந்தாள்-ஆசை
பூட்டியெ னைக்குரங் காட்டவென்றே
பாகத்திற் கைதேர்ந்த-மருத்துவப்
பண்டிதர் முறைப்படி குண்டிகைதனில் 54

குட்டிக்கு நிலப்பனைவேர்-முத்துராயி
கூந்தலுஞ் சித்தர்முடி சீந்தியிலையும்
நெட்டியிலை யெட்டிவிரையும்-பேய்ப்பீர்க்கு
நெல்லியிலை வில்லையிலை அல்லியரிசி. 55

சித்தாம ணக்குநெறிஞ்சி-ஊமத்தை
சிறுகுறிஞ் சியுநல்ல பணமுறிஞ்சி
கத்தாளை நிலம்பறண்டி -ஆலின்கீழ்க்
கன்றுதலை சுருளியு நின்றுசிணுங்கி 56



சில்லானிடை கரும்பூனை -கருநாய்
செந்நாயின் தலைமண்டை சன்னாசிமூரல்
பல்லிமுட்டை அரணையின்வால்-முயற்குடல்
பக்குமுள்ளு பச்சோந்தி கொக்குமயிரும் 57

மடையான் தவளைப்பித்தும்-ஆந்தையின்
வலக்கண்ணுந் தேரையும் புலிப்பாலும்
விடையான் கோழியெச்சமுங்-கன்னியர்கள்
மீதிலெழு மிந்த்ரியநல் மாதவிடையும். 58

நரிக்கொம்பு கரடிமயிர்-ஊர்க்குருவி
நாக்குக்க ரிக்குருவி-மூக்குடனே
கரிச்சான் முதுகெலும்புஞ்-செம்போத்துக்
கழுத்துமு சித்தமுட்டை கெழுத்திமுள்ளும் 59

முள்ளிவேர் மொசுமொசுக்கை -புற்றின்மேல்
முளைத்தகி லுகிலுப்பை கழற்சியிலை
கள்ளிப்பால் வெள்ள றுகுவேர்-போத்தாணி
கத்தரிவ முதலையுஞ் சித்ரமூலம் 60

மூஞ்சூர் முகட்டெலித்தோல்-தேவாங்கு
மொழிக்கால் நகமுட னடிக்காலும்
பூஞ்சோலைக் குயிலிறகு-மரவட்டை
புடையான டிவயிறு நெடுமரையும் 61

நெறிவிசம் பாசாணம்-கோட்டை
நேர்வாளம் பச்சைநாவி கோரோசனை
முறுகிய வலம்புரிக்காய்-திரைகடல்
முறையுடன் சித்தரத்தை யரிதாரம் 62

தாவிய துருசுக்கட்டி-வெண்காரஞ்
சடைக்கஞ்சா திப்பிலியுஞ் சாதிபத்திரி
காவிக்கட்டி புழுகுச்சட்டம்-மரைப்பொடி.
கத்தூரி கல்லுமதங் கொத்தமல்லியும். 63

..................................
..................................

நீர்முள்ளி சிறுதேக்குக்-காட்டெருமை
நெய்யாகும் பெருந்தேன் துய்யசொரங்கம். 64

சொல்லிய மனோசிலையுங்-கடுக்காய்
சுக்கும திமதுர மொக்கவபினும்
.........................................
..................................... 65

காட்டினில் மூலிகையுஞ்-சமன்வாங்கிக்
கடைச்சரக் கும்விராக னிடைப்படியே
கூட்டியம் மியினடத்தி-இளங்கன்றுக்
கோமயந் தெளித்தஞ்சு சாமஞ்செவித்து 66

அஞ்சுநா ளூறவைத்து-முலைப்பால்விட்
டரைத்துருண் டைபண்ணிக் கருக்கலிலே
வெஞ்சனங் கறிசோற்றில்-வெத்திலையில்
வெதுப்பிய தீம்பாலி லிதத்துடனே. 67

தீட்டியே மருந்தையிட்டாள்-தின்றேன்
சேப்பணத் துட்பட்ட ஈப்போலே
பாட்டவ ணையுமிட்டேன்-வீட்டுப்
பையலைப் போற்செய்தேன் கைக்கருமம். 68

கருமந் தனைக்குறித்தாள்-என்றன்
கையிற்பொற் சாளிகைப் பையுங்கண்டாள்.
ஒருமாத முபசரித்தாள்-என்றன்
உடைமையைச் சூறை யிடநினைந்தாள் 69

சூரத்துக் கப்பலிலே -வந்த
சோனகன் கொண்டுவந் தானீதென்று
வீரான பொற்சரிகைப்-பட்டும்
வெள்ளிக்கும் பாவும்பொற் பள்ளயமும். 70

அயல்வீட் டுடைமையெல்லாங்-கொண்டுவந்
தந்நேரந் தன்னிலென் முன்னேவைத்தாள்
இயல்பான காரியமென்றே-விலையும்
இட்டெழு நூறுபொன் கட்டிவிட்டேன் 71

கட்டிச் சமைந்துகொண்டென்-பையின்
கனங்குறை யக்கங் கணங்கட்டினாள்
பட்டாடை துன்னிடையாள்-அல்குற்
பைக்காகக் கொட்டினேன் கைக்காசெல்லாம். 72



எல்லா வுளவுங்கண்டாள்-கையில்
இல்லாத தைமுகஞ் சொல்லாதோ
சல்லாப லீலையிலே-அவள்வஞ்
சகம்படித் தாள்பின்க லகந்தொடுத்தாள். 73

தொடுத்தாள் பழங்கிழவி-என்முன்
தொந்தோமென் றாடத் துணிந்துகொண்டாள்
கடுத்தாள் மனங்கறுத்தாள்-நெஞ்சினிற்
கையைக்கொ டுத்துப்பையத் தள்ளிவிட்டாள். 74

விட்டுக் கதவடைத்தாள்-அந்த
வேசைதன் னாசார வாசல்முன்னே
ஓட்டுத்திண் ணைமறைவில்-அந்த
ஊதாரி வெள்ளாட்டி காதலினால். 75

.................................
..............................
.................................
.............................. 76

நாலும றைபடித்த-தில்லை
நம்பியார் வீட்டைவி ரும்பிக்கொண்டு
காலூன்றி நெட்டிரவிற்-சென்று
கட்டித்தி ரவியப் பெட்டகத்தை 77

அகத்திற் புகுந்தெடுத்தேன்-அதைச்சுமந்
தந்தப்பு றம்விட்டு வந்துவிட்டேன்
மகத்திற் சனியனையாள்-வீட்டில்
வந்தவு டன்பெட்ட கந்திறந்தேன். 78

கந்தம லர்க்குழலாள்-பெட்ட
கத்தைக்கண் டாளென்மு கத்தைக்கண்டாள்
முந்திந டந்ததிலும்-ஆசை
மும்மடங் கெண்மடங் காய்நடந்தாள். 79

நடராசர் சந்நிதிக்கென்-போலொரு
நாட்டியச் சிலைவேணும் வீட்டுக்கென்றாள்
உடனே நன் றாச்செனவே-நான்மன
தொப்பிப்ப யணம னுப்பிக்கொண்டேன். 80

அனுப்புஞ் சமயத்திலே-என்மேல்
ஆசைபோ லேமுகமன் பேசினாளே
தனித்தால் மனந்தரியேன்-எங்கே
சஞ்சரிப் பீரென்று பஞ்சரித்தாள். 81

..................................
..............................
..................................
.............................. 82

..................................
..............................
திருப்பூட்டுங் காந்தனிடஞ் செய்யுஞ்
சீராட்டெல் லாமங்கே பாராட்டினாள். 83

நாட்போக்கில் நான்சகியேன்-என்று
நாரிசொ லக்கிழட் டோரிவந்து
தேட்போலும் வாய்திறந்து-தம்பி
சீக்கிரம் போய்வாரும் பாக்கியமென்றாள் 84

பாக்கிய மென்றெழுந்தேன்-தில்லைப்
பண்ணவன் சந்நிதி முன்னேவந்தேன்
யோக்கியத் துடன்தொழுதேன்-தொழு
தோர்மன தாய்வந்தேன் தீபரமாய்ப் 85

பரங்குன்றத் தோர்சருகும்-மீனும்
பச்சியு மாகியி முத்ததுபோல்
அரங்கேற்றங் கண்டகள்ளி-ஆசை
அங்கேதள் ளக்கர்ம மிங்கேதள்ளத் 86

தள்ளித்தள் ளிநடந்தேன்-ஒரு
சத்தமிட் டாந்தையி டத்துவந்து
கல்லுக்கு ளேறிநின்று-சாயங்
காய்ச்சுவண் ணான்சொல்லும்வாய்ச்சொல்லையும்87

வாய்மையென் றேநடந்தேன்-தொண்டை
மண்டலத் தின்சோழ மண்டலத்தின்
சீமையெல் லாங்கடந்தேன்-அதி
சீக்கிரஞ் சீகாழி யூர்க்குள்வந்தேன். 88



சீகாழி யூர்தனிலே-சென்று
செக்கடி வேம்பிலி ருக்கையிலே
ஆகம்பிரி யாத்தோழ-னானபொன்
னப்பனைக் கண்டேனென் னப்பனைப்போல்89

என்னாணை வாருமென்றான்-அவன்
இருக்கையிற் புகுந்தேன் சருக்கரைபோற்
சொன்னா னுபசாரம்-பாலுஞ்
சோறுந்தந் தான்பசி யாறுமென்றான். 90

பசிதீர்ந்து நித்திரைகொண்டேன்-அந்தப்
பாக்கியத் தானித்திரை போக்கியபின்
நிசிதீர்ந் தெழுந்திருந்தேன்-தம்பி
நில்லென் றவனுடன் சொல்லிக்கொண்டேன்91

சொல்லிவாய் மூடுமுன்னே-வெகு
தூரம்வந் தேன்திரு வாரூரில்
அல்லார் குழலிபங்கன்-திரு
வாலய முங்கம லாலயமும் 92

கமலத்த டாகங்களுங்-கண்ணிற்
கண்டுடல் பூரித்துத் தெண்டனிட்டேன்
விமலகு மாரருக்குக்-கருணை
மிக்கவி ரதம்வெள் ளிக்கிழமை 93

விமலர்கு மாரசட்டி-எல்லாம்
வித்தக மாயனுட் டித்தபின்பு
குமரன் திருவருளால்-முசு
குந்தனுக் கிந்திர னிடமிருந்தே 94

ஏதமி லாதிழிந்து-வந்த
ஏழ்விடங் கர்முதற் சூழ்விடங்காம்
வீதிவி டங்கர்தமைப்-போற்றி
விட்டக லாதந்தப் பட்டினத்தே 95

பகட்டான பேருடனே-கூடிப்
பத்துநா ளங்கேத ரித்திருந்தேன்
.............................
......................... 96

..........................

........................

செட்டித் தெருதன்னிலே-ஒரு
சீராட்டுக் கலியாணம் பாராட்டினான். 97

கலியாணச் சந்தடியில்-அசங்
காமற்சென் றேறினேன் மேன்மச்சின்மேல்
நலியா திருந்துகொண்டேன்-பின்னே
நடந்தது தொடர்ந்து சடங்கனைத்தும். 98

சடங்கு நிறைவேறிச்-சோறு
சாப்பிட்டுப் பின்பெண்ணும் மாப்பிள்ளையும்
படங்கும றைவுக்குள்ளே-வச்சிரப்
பத்திசேர் மஞ்சத்தில் நித்திரைகொண்டார் 99

திரைநீக்கி யுட்புகுந்தேன்-மாயஞ்
சேவித்தேன் கைப்பொடி தூவிவைத்தேன்
அரைநாழி கைப்பொழுது-பதை
யாமற்கி டந்தார்ம தோன்மத்தமாய். 100

மாயப் பொடிப்பலத்தால்-அந்த
மாப்பிள்ளை மார்பிலோர் ஆட்சுமைபோல்
தோயுஞ் சரப்பளியு-முத்துத்
தொங்கற்ப தக்கமுஞ் சங்கிலியுஞ் 101

சங்கைப் பணிகளெல்லாம்-ஒருநிமி
சத்திற்க ழற்றியெ டுத்துக்கொண்டேன்
மங்கை கழுத்துடைமை-காதின்
மாணிக்கத் தாலிட்ட பூணுடனே. 102

உடைதார முத்தரீயம்-எல்லாம்
உச்சிக்கொண் டேனெனை மெச்சிக்கொண்டேன்
புடவைமுந் தானையிலே-கட்டிப்
பேசாம லேவந்தேன் வாசலிலே. 10.3

வாசற் கடைதிறந்தேன்-வெளி
வந்தேன டந்தேன்வி டிந்திடுமுன்
ராசகோ பாலமன்னார்-கோவில்
நாடியச் சாலையிற் கூடிக்கொண்டேன் 104



சாலைக்குட் கன்மடங்கள்-அன்ன
சத்திரந் தோறுந்த ரித்திருந்தேன்
காலாறி மெள்ளவந்தேன்-அள
காபுரி நேர்தஞ்சைக் கோபுரமும் 105

புரிசைச் சிகரங்களும்-சூழப்
பூவனம் பூத்தநந் தாவனமும்
வரிசைத் தெருவுங்கண்டேன்-மாட்டு
மந்தைக்கு மேற்கான சந்தைகண்டேன் 106

சந்தைக்கு ழாமாகப்-பல
சாதியுஞ் சூழ்கடை வீதிகண்டேன்
அந்தத் தலந்தனிலே-சென்றங்
கமர்ந்துமெ லிந்தச டந்தேற்றச் 107

சடக்கெனத் தலத்திடைச்சி-ஒரு
தாய்க்கிழ விக்குச்செவ் வாய்க்கிழமை
மடத்தில் விடுதியென்றாள்-அந்த
மாதாவைக் கண்டேனென் தாதாவைப்போல்.108

வைப்புச்செப் புள்ளதெல்லாம்-அங்கே
வைத்துவை யென்றுகொ டுத்துவைத்தேன்
முப்போதுஞ் சோறுமிட்டே-அவள்
முத்துப்போ லென்னைவ ளர்த்துக்கொண்டாள். 109

### விருத்தம்

இடைச்சிதன் மனையிற் கிட்ண
னெனவவள் வளர்க்கு நாளில்
கொடைத்தரு சாகோசி யூருங்
குடிகளு மலைந்த வாறும்
படைச்செயத் தளவாய் வந்து
பாளையஞ் செய்த வாறுந்
தொடைச்செழுந் தமிழாற் பாடிச்
சொல்லுவேன் சொல்லு வேனே. 110

### சிந்து

மருச்சிந்து துணர்க்கடம்பன்-வானவர்சத்
துருச்சிந்த வேற்படை தொடுத்தபிரான்

தருச்சிந்து மலர்ப்பொழில்சூழ்-சந்தவரைத்
திருச்செந்தி லூர்புரந்த தேவதேவன் 111

வள்ளிப்பெண் மணவாளன்-மரகதப்
புள்ளிக்க லாபமயிற் புரவியினான்
தெள்ளித்தெ ளிந்ததமிழோர்-செய்யும்வினை
தள்ளிக்க ருணைதருஞ் சண்முகத்தான். 112

சேவலங் கொடிவீரன்-செந்திலெந்தை
ஆவலுடன் புரக்கு மண்டலத்தில்
பூவுல கினிற்சிறந்த -புகழ்பெற்ற
நாவலோ கம்பெருந் தீவுதன்னில் 113

பூமகள் திருமனைபோற்-பொன்செய்த
மாமதில் சூழ்சோழ மண்டலத்திலே
ஆமெனக் கொலுவிருக்கும்-அவட்கொரு
தாமரை போற்சிறந்த தஞ்சையிலே. 114

தீட்டிய பெரும்புகழான்-செழித்தம
ராட்டியத் துரைகளிற் றாட்டியவான்
கூட்டிய நிதிகோடி-தேடிக்கொடி
நாட்டிய கோசிக நரபாலன். 115

பாலக னெனவுதித்தோன்-பாவையர்க்கு
வாலசொ ரூபமன் மதராயன்
பூலோகத் தரசர்மெச்சும்-புத்திவாய்ச்
சாலகன் சாகோசி மகராசன் 116

மாமுகில்சா கோசிமன்னன் மதுமலர்த்
தாமப்பு யனிளைய தம்பியுடனி
ராமனி லக்குவனென்ன-இருந்திந்தப்
பூமண்ட லமனைத்தும் புரந்திடுநாள் 117

இசைபெற்ற மதுரையிலே-மலையத்து
வசனற்கு மாரிசெய்த துரைத்தனத்தில்
நிசமுட னரசுசெய்து-நீதிபுரிந்
தசையா மணிகட்டு மாதீனத்தில் 118

உற்றசொக்க நாதேந்திரன்-உதவிய
வெற்றிரங்க கிட்ணமுத்து வீரேந்திரன்



பெற்றெடுத்த வரபாலன்-பிரவுடீக
கொற்றமனு ராசர்தொழக் கொலுச்செய்கு
வோன். 119

அஞ்சலர் குறும்படக்கி-மைசூருஞ்
செஞ்சியுந் தஞ்சையுந் திரையிடவே
மிஞ்சிய மனுவேந்தன்-எளியவர்
தஞ்சம தானசமத் தானபதி. 120

வெங்கட கடகளிற்றான்-விசைய
ரங்கதிரு மலைச்சொக்க நாதேந்திரன்
சங்கைச் சமத்தானந்-தன்னிலொரு
சிங்கே றெனவந்த செயவீரன். 121

அரசர்க்கு மகுடரத்தினந்-தளவாய்
நரசப்ப னுதவிய நரபாலன்
திரையுற்ற கடற்படையாற்-செயங்கொண்டு
தரைமுற்றுந் திறைகொண்ட தளராயன் 122

வீரத்தில் விக்ரமார்க்கன்-புத்திவிவ
காரத்தில் பட்டிதனை நேரொத்தகார்
பார்மெச்சுஞ் சதுர்வேதன்-பணிந்தோர்க்குப
காரத்து ரையெனுங்கு மாரத்தளவாய் 123

மறுமன்யர் குறும்படக்க-வேணுமென்று
மாத்தார்ம லுக்குடன் மேத்தாருகான்
தறுகண்ணன் சத்தரேகான்-தாரேகான்
சவ்வாசு கான்கோரி நல்வாசுகான். 124

வரசுலை கான்சருவாணி-பீருகான்
வாவாகா னுகான்பத் தேகானேகான்
கிரிதேச மெச்சுஞ்சூலுபு-கான்பரித்
திரள்செறி மீருகா னாதிறுவெக்கு 125

மதப்புலி கன்னிசாய்பு-இமாமுகான்
மதப்புலி கான்சாய்பு மம்மதுமதார்
சதுர்ப்பண்ணும் அவுதல்அலி-பக்கீரு
சாய்புஅ வுதல்பட்சி தல்லீதுகான். 126

திறற்றுறை யூரிலெட்டி-வல்லவன்
தேசமெல்லாந் திறைகொண்ட ராயர்தொண்டைமான்

மறப்படைத் தளவீரர்-கம்பளத்தில்
மாய்மாலச் செகவீர ராமவெட்டமன். 127

ராசர்பு கழ்வசீகரன்-இரகுவீர
ராமகட் டபொம்மு நரபாலன்
வாசற்பிர தானியான-தளசிங்க
மதியன்கு மாரசாமி அதிகாரி. 128

நால்வகைப் படையுடனே-விசைய
ரங்கதிரு மலைச்சொக்க நாதனருளாற்
சீலன்கு மாரத்தளவாய்-சந்திமலைத்
திருக்காட்டுப் பள்ளியெனுஞ்
சதுர்க்கோட்டைமுன் 129

விருதுமன் னியர்நடுங்கப்-பஞ்சபட்சி
வேளைய றிந்துவந்து பாளையஞ்செய்தார்
பருதியு தையகிரியுஞ்-செங்கனகப்
பாரமலை யும்போற்கூ டாரமடித்தார். 130

போர்வெல்லுஞ் செயத்தம்பம்போற்-கூடாரப்
புறத்தினி சான்களு நிறுத்தினரே
கார்செல்லுங் கருமலைபோற்-கட்டினார்
கடகரித் திரள்முற்று மிடையிடையே. 131

பார்க்கடல் வளைந்ததுபோற்-சுற்றெல்லாம்
பரித்திரள் முற்றுங்கட்டி நிறைத்தனரே
ஏர்ப்படைப் பொந்திலியரும்-வடுகரும்
இடங்கொள்ப டங்குதொறு முடங்கினரே 132

வன்னியரு மறவர்களும்-நிழல்தேடி
மரந்தோறு மிருந்தனர் நிரந்தரமாய்த்
தன்னிகரி லாததளவாய்-விருதுநி
சான்கண் டாசாரந் தான்கண்டபின் 133

பரந்திடு மருவலர்மேற்-புலிபோலப்
பாயுங்கு மாரத்தள வாயுடனே
வருந்திறல் வீரரெல்லாந்-திசைசக்ர
வாளந டுங்கிடச்ச ராளம்வந்தார் 134

சாடிய பாளையத்தார்-குதிரைப்படை
தஞ்சைக்கோட்டை வாசன்மட்டும் மிஞ்சிவரவே



கூடிய சனங்களெல்லா-மவரவர்
கூசாமற் றம்மிலே யோசனைசெய்தார் 135

செஞ்சித் தளமல்லவே-மைசூராமிச்
சேரிவே லூருத் தளமல்லவே
ஒஞ்சிப் பொருவர்களோ-இவர்நம
துளவெல்லா மறிந்த தளமாச்சே. 136

அரமனைத் தளங்கள்வந்தால்-ஊரைக்கொள்ளை
யாடிச்சூ றையிட்டுப் போடுவாரே
வரமன தில்லாதபேர்-இருமென்று
வலசையும் வாங்கினார் நிலவரமாய் 137

மாடமும் பாராமல்-கட்டுமச்சு
மாளிகையுஞ் சூளிகையும் பாராமற்
கூடமும் பாராமல் -நீராவிக்
கொல்லையும் பூங்காவும் பாராமல் 138

மெத்தையுங் குத்துவிளக்குஞ்-சோறுண்ட
வெள்ளிப்பள் ளையாமும் பாராமல்
பத்தரைமாற் றுத்தங்கம்போல்-சுட்டிநின்ற
பந்திக்கு திரைதனைப் பாராமல் 139

தேவியைத் தேடாமல்-தான்பெற்ற
சிசுக்களைப் பசுக்களைத் தேடாமல்
ஆவியைத் திரவியம்போல்-ஒதுக்கிக்கொண்
டாவென்ற லறிக்கொண்டு போவாரும் 140

வனத்திடைப் புகுவாரும்-இண்டஞ்செடி
மறைப்பிற்கி டந்துகைகால் விறைப்பாரும்
இனத்தொடுங் கூடிச்சென்று-மடங்களில்
இடக்கை தலைக்குள்வைத்துக் கிடப்பாரும் 141

ஆடலப் புரவியேறித்-திரிந்ததுபோய்
அடப்பத்தைத் தோளிலிட்டு நடப்பாரும்
பாடகக் கான்மடவார்-பாக்குத்தின்ற
பவளச்செவ் வாய்நுரைக்கச் செல்வாரும் 142

ஒவ்வாத கருமஞ்செய்தார்-மதுரையர்
உளவறிந் தாரென்று தளர்வாரும்

இவ்வாறு சனங்களெல்லாங்-கல்லதர்பற்றி
ஏனாதி யூர்விடியப் போனார்களே. 143

வலசையும் வாங்கிப்போனார் -வீடுதொறும்
வாசல்தொறு மாயர்பாடிப் பூனையைப்போலே
கலசமா டித்திரிந்தேன்-சலித்திரு
கால்சடைத்து வந்திருந்து யோசனைசெய்தேன். 144

**விருத்தம்**

கொம்பனை யாட்குச் செம்பொன்
கொடுக்கவே காட்டுப் பள்ளிப்
பண்புசேர் பாடி வீட்டுட்
புகுந்தியான் பயின்ற வாறும்
வம்பிலே தேசி யொன்றை
வௌவின வாறுங் கைகால்
துன்புற விழிந்த வாறுஞ்
சொல்லுவேன் சொல்லு வேனே. 145

**சிந்து**

பெண்ணுக்குப் பொன்கொடுத்து-நமக்கிந்தப்
பேருபெற்றுக் கொள்வது பூருவமென்றே
புண்ணிய வான்தளவாய்-பாளையத்திற்
புரவிகொண் டுவரத்தந் திரநினைந்தேன் 146

புலியா சனமெடுத்தேன்-உடம்பினிற்
பூதியுத் தளமாகப் பூசிக்கொண்டேன்
குலிசா யுதன்செலுத்து-மாத்திரைக்
கோலுந்திரி தண்டுமொரு வேலுமெடுத்தேன். 147

பவுத்திரம் விரற்கணிந்தேன்-உத்திராட்சப்
பழுத்தம ணிக்கோவை கழுத்திலிட்டேன்
உவப்பொடு மயிர்முடித்துக்-கவிழ்த்தியே
ஒட்டுத்தெரி யாமற்சடை கட்டிக்கொண்டேன். 148

காதிற்க வசகுண்டலம்-ஆறுகட்டுக்
கடுக்கனிட் டானுவத்தை யொடுக்கிக்கொண்டேன்
நாதிக்குஞ் சங்கமெடுத்தேன்-பன்றிக்கொம்பு
நரிக்கொம்புஞ் சடைமேலே
தரித்துக்கொண்டேன். 149



காசாய வேட்டியொன்றை -மருங்கினிற்
கட்டுமெட் டாகவே கட்டிக்கொண்டேன்
பூசணம் போலிலங்க-ஒட்டியாணம்
பூட்டினேன் சிவயோக வேட்டியுடன். 150

நேத்திரப் புருவமட்டும்-பூசுந்திரு
நீற்றுத்தி ரிபுண்டரக் கீற்றுமிட்டேன்
பாத்திரக் கமண்டலமுந்-திருநீற்றுப்
பையும்பி ரம்புமொரு கையிலெடுத்தேன். 151

பவவினை துடைத்தவர்போல்-தந்தக்குமிழ்
பதித்தபா துகைமேன் மிதித்துக்கொண்டேன்
சிவயோக வேடங்கொண்டு-பாளையத்திற்
சிங்கத்தைப் போலமு ழங்கிச்சென்றேன். 152

பாளையத் தெருவொழுங்கும்-கூடாரப்
பந்திக ளுங்குதிரைப் பந்திகளும்
வேழநிகர் தளவீரர்-விடுதிமுன்
வேழங்கள் நிற்குமடை யாளங்களும் 153

கோடிநிதிக் கொடிநாட்டி-வர்த்தகஞ்செய்
குச்சிலியர் கூடாரத் தெச்சரிக்கையுந்
தேடிநவ மணிகுவிக்கும்-வியாபாரச்
செட்டிப்பிள்ளை மாரிருக்கும் வட்டிக்கடையும் 154

பத்தியாய்ப் படங்குகட்டி-வீதியிரு
பக்கத்திலுஞ் சேர்பலச ரக்குக்கடையும்
கத்தன்முனைப் பாளையத்தை-உச்சிதமாய்க்
காக்குந்தலை யாரியள்ப ராக்கிரமமும் 155

கதித்தம ணியகாரர்-உபதானக்
கட்டளைபோ லேநடத்துந் திட்டவட்டமும்
மதித்தவ டுகதுரைகள்-வசீருகள்
மறுமன்னி யர்பாளையச் செறிவுங்கண்டேன் 156

தழைக்குங்கு மாரத்தளவாய்-கூடாரந்
தானுங்கண் டேனதினி சானுங்கண்டேன்
மழைக்குழ லியர்மதவேள்-தொண்டைமான்
மகராசன் கூடார வாசலில்வந்தேன் 157

வாசலிற் பிள்ளைமார்க்குஞ்-சேவகர்க்கும்
வரிசையூ ழியஞ்செய்யும் பரிசனர்க்கும்
கூசாமல் நீறுகொடுத்தேன்-என்னைக்கண்டு
கும்பிட்டெல் லோரும்வந்து கூடியேநின்றார் 158

தொண்டைமான் கொலுவிற்சென்றேன்-சென்றவுடன்
தொழுந்தெய்வம் போலெனைக்கண் டெழுந்
திருந்தான்
மண்டலா திபனிருக்குங்-கம்பளத்தில்
மதியாமற் சென்றிருந்தே னதிசயம்போல் 159

சாமியென்று வணங்கிநின்றான்-திருநீற்றைச்
சற்றேதொட்டுக் கைப்பிடித்து நெற்றியில் வைத்தேன்
வாமியென்ப தறிந்துகொண்டான்-அறுசுவை
வர்க்கமெ லாம்பூசைமு கத்திற்கொணர்ந்தான் 160

அமைந்ததை விடுவேனோ-தேவியென்
றானந்த மாகமத்ய பானங்கொண்டேன்
சமைந்தது சோறுங்கறியுங்-கொண்டுவந்தார்
சனங்களூ டிருந்துபோ சனம்பண்ணினேன் 161

துரைதொண்டை மானருளால்-பந்திதனில்
தோசையு முப்பழமும் பூசைகொண்டேன்
இரைகொண்ட விரியனைப்போல்-கடையெலும்
பெடுக்கநித் திரைவந்து படுத்தேனே 162

படுத்துநித் திரைவிழித்து-விடிந்தபின்
படையிருப்பைச் சுற்றினேன் தடையறவே
அடுத்தடுத் துபசரித்துக்-காவற்றலை
யாரிப தாதிகள்வி சாரிப்புங்கண்டேன். 163

வளங்கொண்ட பாளையத்தில்-உண்டான
வளப்பமு மதிற்றள வளப்புங்கண்டேன்
உளங்கொண்ட துணிவுடையோர்-சஞ்சரிக்கும்
உளவுமங் கேநடக்குங் களவுங்கண்டேன் 164

பறைதட்டி மணியடித்துப்-பறைகாரர்
பாளையஞ்சுற் றியேகாக்கும் வேளையுங்கண்டேன்
குறையற்ற பாக்யதுரைகள்-பாளையஞ்செய்
கூடாரந் தோறுஞ்சென் றூடாடினேன். 165



படுக்கையுக் களமுங்கண்டேன்-உக்களத்திற்
பழிப்பற்ற சேவகர்கண் விழிப்புங்கண்டேன்
கொடைக்கிந்த்ர தாருதளவாய்-துரையேற்றக்
குதிரையைச் சதுரான குதிரைதனைச் 166

சேவிக்கும் ராவுத்தமார்-எவரையுந்
தினசரி காத்திருந் தனுசரித்தேன்
ஏவற்காசு தாரிப்பயல்கள்-என்னோ
டிணங்கிவ ணங்கிடவங் கணம்பண்ணினேன். 167

விரவுந றுநெய்க்கடலை-வெத்திலைக்கும்
மிளகுக்குங் கையேந்திப் பழகிக்கொண்டேன்
ஒருதாய் பெற்றபிள்ளைபோல்-எல்லோர்க்கும்
உடந்தைய தாகவே நடந்துகொண்டேன். 168

எத்திலே மனஞ்செலுத்தி-அரமனையி
லாயத்துப் பயல்கள்ச காயத்தினால்
பத்துநாள் திரியுமுன்னே-குதிரைகள்
பயிலுந்தொ ழிலுநன்றாய்ப் பயின்றுகொண்டேன் 169

மையும்வெண் ணையும்போலே-சனங்களை
மருட்டிய மழைக்கா லிருட்டைக்கண்டேன்
கொய்யுளை தனைத்திருட-ஒருமித்துக்
கோழையில் லாமலிது வேளையென்றே. 170

தனித்தொரு தலத்தில்வந்து-வேடங்கொண்ட
சங்கடமெல் லாங்கழற்றி யங்குவைத்தேன்
மனித்தர்க்கு ருத்தெரியாமற்-கூட்டிய
மையத்த டவிக்கொண்டேன் மெய்யெங்குமே 171

காங்குச்சல் லடந்தரித்து-மருங்கினிற்
கறுத்தக்கச் சையைக்கட்டி யிறுக்கிக்கொண்டு
கோங்கிற்புல் லுருவியுடன்-குளிநரிக்
கொம்புஞ்சி கைக்குள்வைத்தேன் கெம்பீரமாய்ப் 172

பூனைக்கண் மணிக்குளிசம்-மாயச்சொக்குப்
பொடித்திரு நீற்றைக்கச்சைக் கொடுக்கில் வைத்தேன்
சேனைத்த லைவர்களெல்லாம்-எழுதிய
சித்திரத்தைப் போலுறங்கு நித்திரைகண்டேன். 173

காயத்தை யொடுக்கிக்கொண்டு-நாளைப்படுங்
காயத்தை யறியாமல் லாயத்திலே
மாயத்து டன்புகுந்தேன்-புல்லுக்கட்டு
மறைப்பிற்சென் றேவிளக்கை
நிறப்பிக்கொண்டேன். 174

மருவற்ற சீவரத்தினம்போற்-கட்டிநின்ற
வாம்பரியைக் கண்டுச லாம்பண்ணினேன்.
முருகர்செ ழுங்கருணையாற்-சிறந்தபொன்
முகந்தொட்டு பசரித்தி லாகன்பூட்டினேன். 175

பாளாசந் தனையவிழ்த்தேன்-முறுக்காணி
பறித்துக்க ழுத்துக்கட்டி தெறிப்பும்விட்டேன்
தோளாச மானபயல்கள்-கையைக்கொண்டு
சுருக்கிய மேல்வாகை திருத்திக்கொண்டேன். 176

குறுக்கின்மு றுக்குப்போட்டு-வெள்ளிக்கச்சைக்
கொடிக்கயிற் றைப்பிடித்து வெளிக்குள்வந்தேன்
அறிக்கைய றிந்தகுதிரை-கைக்குள்வசம்
ஆச்சுதெ னக்குநன்றாய் வாய்ச்சுதென்றே. 177

சதிர்கொண்டு வலஞ்சுற்றியே-மேற்கொள்ளச்
சறுக்காமல் நான்வந்த கறுப்பைக்கண்டு
குதிகொண்ட னுமானித்துக்-கிட்டநின்ற
குமையத்துக் கெடுத்தது சமையத்திலே. 178

புரவிமு ழக்கங்கேட்டே-எழுந்தனர்
பூணித்த ரட்டர்களுஞ் சாணிமாரும்
திரவியக் கட்டிபோலே-கட்டிநின்ற
தேசியைத் தேடுமென்றார் காசலையாய். 179

நாட்டங்கு திரைமேலே-என்றறிந்து
நமக்கென்ன பாவமென்று சமத்துடனே
ஓட்டத்தி லோடியொளிந்தேன்-பேசாமல்
ஒப்பத்துடன் தப்பிக்காணக் கொப்பரைக்குளே. 180

லாயத்தைச் சோதித்தபேர்-தலந்தப்பி
லகத்துக்கு ளாய்நின்றது ரகத்தைக்கண்டார்
மாயத்தி ருடனிவனைத்-தேடியோடி
மட்டுத்துறை மட்டும்வழி கட்டுக்கட்டென்பார். 181



விழுந்தப ணமுந்தெரியத்-தீவட்டியும்
விளக்கும்ப கல்வத்தியும் விளக்கிக்கொண்டு
கழுந்துமொட் டையாராகத்-திரிந்தனர்
காசுதாரிப் பயல்கள்பி சாசுகள்போலே. 182

பக்கத்தில் விடுதிகளும்-பறையர்கள்
பச்சைப்புல்லி னான்மடக்குங் குச்சுகளுந்
திக்கெங்குங் கும்பல்கும்பலாய்க்-கல்லணைகள்
சேணங்கள டுக்குமுக்கி ராணங்களும். 183

விரித்தப டங்குமறைப்பும்-புல்லுக்கட்டும்
விறகுக்கட் டுக்கடுத்த மறைவுகளும்
அரித்துச்சல் லடையிட்டுத்-தேடியென்னை
அலைந்தார திற்கிடந்து மலைந்தேனே. 184

கிடந்தச மயந்தனிலே-விழிப்பாய்க்
கிரமத்திற் றப்புவது முறைமையென்றே
கடந்துகொப் பரையைவிட்டுச்-சீக்கிரத்திற்
கழித்தபுற் சூட்டிற்சென் றொளித்தேனே. 185

சோதனை பெரிதெனவே-கையைக்காலைச்
சுருக்கியு டலைமறைத் திருக்கையிலே
காதிலெ றும்புதுளைக்க-நட்டுவக்
காலியொ ருபுறத்திற் காலிற்பிடுங்கத் 186

தேளொரு புறத்திற்கொட்டச்-சகனத்திற்
செய்யான்க டிக்கச்சற்று மெய்யாமலே
ஆளொரு புறந்தேட-அடுப்பிலிட்ட
ஆராற்போற் றுடித்தேனந் நேரத்திலே. 187

கடுப்புமெ ரிப்புமரிப்பு-மிகுந்திடக்
கல்லுப்போ லசையாமல் புல்லுக்குளே
இடுப்புமு றிந்தநாய்போற்-கிடந்துகொண்
டெத்தனைய வத்தைக்கென் றுத்தரஞ்சொல்வேன். 188

பதினெட்டுக் கொட்டுவகைக்கு-மருந்திட்ட
பையில்லை யோவெடுக்கக் கையில்லையோ
விதிசுற்றி விளைந்து கொண்டாற்-செய்வதென்ன
வெறுவாய்மென் றேனந்தத் தறுவாயில் 189

தருணத்தைக் குறித்துக்கொண்டு-நாமினிச்
சாதிக்க வேணுந்தெய்வஞ் சோதித்ததென்றே
விரணத்தைப் பொறுத்துக்கொண்டு-புட்டுத்தின்று
விக்கினாற் போலிருந்தேன் வெக்கினாற்போல். 190

கடித்துச்செ விக்குருத்திலே-அடிக்கடி
கறும்பிக்கொண் டேயிருந்த எறும்புக்குநான்
முடித்தகு றைதானுண்டோ-இதுக்கென்மேல்
முற்பிறப்பி லேதேனு முட்பகையுண்டோ. 191

வேதனை கொடிதெனவே-நானிருக்கும்
வேளையிற் றேடினபல் வாள்வீரர்
ஏதைநி னைத்தார்களோ-கழிப்புல்லை
இழுத்துப்ப டப்பிற்றீயைக்
கொளுத்துமென்றார். 192

தீயென்ற சத்தங்கேட்டு-நாமிருந்த
செடிக்குங்கொ ழுத்தசனி பிடித்ததென்றே
வாயொன்றும் பேசாமல்-தீக்கொளுத்தி
மருண்டபு கைமறைப்பி லுருண்டேனே. 193

தொங்கத்த னம்பண்ணாமலே-உருண்டுருண்டு
செந்தூர்க்கும ரேசர்திருத் தேருக்குப்பின்னே
அங்கப்ர தட்சணம்வந்தே-னானாலும்
அதற்கான தவப்பேறி லவித்திடுமே. 194

தொலையாத வேதனையெலாம்-போதாமல்
துறண்டிபோற் செறிந்தமுட் குறண்டிமுள்ளுத்
தலைமயிர் தனையிழுக்க-முனைக்கல்லுத்
தைத்துடல மெல்லாஞ்சில் ரத்தம்பாய 195

உப்புமண் தரையெரிக்க-நெரிஞ்சிமுள்
உருளையி லேதைக்க வுருளையிலே
குப்புறப் போய்விழுந்தேன்-சட்டாளக்
குதிரைநீர்க் கேடயக் குழியுக்குளே. 196

வாயிலு நாசியிலும்-விழியிலும்
மாத்திர மோகுதிரை மூத்திரம்வந்து
தீயிலுங் கொடிதாக-எறும்பிருந்த
செவியுட்பு குந்ததுமு தவியல்லவோ. 197



மரச்செக்கு லக்கைபோல-உருண்டநான்
வழிதப்பிக் கேடயக் குழியுக்குளே
இரைச்லு டனேவிழுந்தேன்-கள்ளன்மதி
இழந்தா னெனவந்து வளைந்தாரே. 198

கேடயக் குழிதனிலே-சுற்றிமொய்த்த
கேசமற்ற துருக்கரும் ராசபுத்திரருங்
கூடிய வடுகர்களும்-ஓடிவந்து
கூக்குரலெ ழுப்பிநின்று நாக்குவளைத்தார். 199

சட்டையைத் தொங்கவாண்டு-குதிரையைத்
தசுக்கரம் பண்ணவந்தா னிசிக்குளென்பார்
வெட்டவேணும் கட்டுகட்டென்பார்-கிடக்கிறான்
வெறிமுண்டா தொத்தனோரி கரிமுண்டம்போல் 200

பரியிவ னுக்குத்தகுமோ-அர்றே
பான்சோத்து பக்கொடு பக்கொடென்பார்
அரமனைக் கருவூலத்தைத்-திருடவந்
தழுந்தந ரகத்திடை விழுந்தானென்பார். 201

சலக்குழித் தண்ணீருங்-குதிரைத்
தாரைத்தண் ணீருலர்த்திச் சாரத்துடனே
கலக்கிய சேற்றுக்குளே-ஐம்புலன்
கடந்திட்ட ஞானிகள் கிடந்தானென்பார். 202

முகத்தைத்தி ருப்பிக்கொள்வா-ரப்புறம்போய்
மூச்சுவிடு வார்கெட்டி யாச்சுதென்பார்
குகைக்குழி தன்னிற்கிடக்குங்-காசுதாரிக்
கூத்திமக னைக்கரை யேற்றுமென்பார். 203

நாய்க்குந ரிக்கும்பொருந்தா-நாற்றமிவன்
நாசிக்கும் பொறுக்குமோ சீசீயென்பார்
மூக்குப்பூ ரினகழுதை-இவனுக்கு
மோசம்வந் தாலுமிலை ரோசமென்பார். 204

மரத்தினு முணர்ச்சிகெட்டு-நான்கிடந்து
வருணசெ பஞ்செவிக்குந் தருணத்திலே
கரைக்கிழுத் தெறிவனென்று-துணிந்தொரு
கழுக்காணி மொட்டையன்வந் திழுத்துவிட்டான். 205

இலக்கற்ற மழுங்கலென்னைக்-கொணர்ந்துபன்.
னிரண்டுவ யதுசென்று திரண்டபெண்போல்
தலைக்குத்தண் ணீர்சொரிந்தார்-சண்டாளச்
சடத்தில முக்கனைத்துந் துடைத்துக்கொண்டேன். 206

கதலமி தலப்போமோ-கையிறுகக்
கட்டியே கேக்கையிட்ட தட்டிக்கொண்டு
பதனம்ப தனமெனவே-பரிகாரப்
பறையர்கொ ணர்ந்துவிட்டார் சிறைதனிலே. 207

காவற்ற லையாரிகள்-நமக்கின்று
களைதீர்ந்த தென்றுநாலு முளைகளறைந்
தேவற்ப யல்களைவிட்டுக்-காலுங்கையும்
இழுத்துக்கட் டக்கிடந்தேன் முழுத்துக்கமாய். 208

விடியத்தெ ரியாமலே-ஏழெட்டு
வெறிகாரப் பயல்கள் வண் டுறுக்கிக்கொண்டு
கடினப்ர வர்த்தகமாக-நான்கிடந்த
காவற்பு ரைக்குள்வந்தா ரேவற்பேய்போல். 209

அவிழ்த்தென்னை முன்னேவிட்டு-மயிர்முடி
அவிழத்த லையைமெள்ளக் கவிழத்தள்ளித்
துவக்கிய கொடிக்கயிற்றிற்-பிடித்துத்
தொண்டைமான் திருமுன்னர் கொண்டுபோய்
விட்டார். 210

திசைபெற்ற மன்யராயர்-ராவுத்தமார்
சேவகத் துரைமக்கள் யாவர்களும்
வசைபெற்ற திருடனிவன்-வந்துநின்ற
மார்க்கத்தைப் பாரும்வெகு தீர்க்கனென்பார். 211

நாடறிந்த களவுசெய்து-காலைக்கையை
நடுக்காம னின்றான்மிகு துடுக்கனென்பார்
ஊடறிந் திவனல்லவோ-அன்றுசிவ
யோகியாய் வந்தஅனு போகியென்பார். 212

தளமித்த னைவந்திறங்கும்-பாளையத்திற்
சாண்காட்டி லெட்டுமுழத் தூண்காட்டினான்
களவுக்குச் சேமனென்பார்-சேமனிவன்
காலுக்குப்பற் றான்களவு நூலுக்கென்பார். 213



கள்ளனிவ னாகாசத்தை-வடுப்படக்
கடிப்பானி னைத்ததெல்லா முடிப்பானென்பார்
மெள்ளவந்து சிக்கினதெல்லாஞ்-சிவயோக
வேசத்தைத் தூசணித்த தோசமென்பார். 214

ஒருத்தனி வனுக்கிணையோ-சிவசிவா
ஒருகூடு கோழிதின்ற வெருகிதென்பார்
செருக்குநெ ளிப்பும்பாரும்-இவனிட்ட
திலகத்தி லேமயங்கு முலகமென்பார். 215

கொடுமைசெய் பாதகனை-வங்கிகொண்டு
குத்துமென்பார் யானைக்காலா லெத்துமென்பார்
வெடிவைத்துச் சுடுவமென்பார்-ஒருவெட்டாய்
வெட்டுமென்பார் கையொடியக் கட்டுமென்பார். 216

முண்டைமக னிவன்முகத்தில்-கண்விழியு
மூக்குந்தெ றிக்கரெண்டு தாக்குமென்பார்
மண்டலீகர் சமுகத்திலே-துச்சனனை
வாவென்ற ழைத்தாலும்பாவமென்பார். 217

மதுரைச்ச மத்தானத்தில்-இவன்செய்த
வல்லமைசெய் வாரொருவ ரில்லையென்பார்
குதிரைக்க ளவுக்கெனவே-துணிந்துவந்த
கூற்றுவ னைக்கழுவி லேற்றுமென்பார். 218

தரைபுகழ் துரைதொண்டமான்-கோவிக்குஞ்
சனங்களைக் கையமர்த்தி மனம்பொறுத்துப்
பரமெனும் ஞானியாரே-கையிற்க
பாலமெங் கேயெடுத்த கோலமெங்கே. 219

சளமித்த னைவந்துதோ-கம்பளியிற்
சரியிருப் பாயிருந்த பெரியவரே
களவுக்குத் துணிந்தீரோ-நமக்கன்று
கையிற்றிரு நீறுதந்த ஐயரல்லவோ. 220

கட்டுமெட்டாய் வந்தீரே-உமக்கினிக்
கரையேற்ற மேதுகாணும் பரமார்த்தமே
வெட்டுமட்டும் தொழிலாச்சே-நீதிரிந்த
மேதைக்கென்று சொல்லிநெஞ்சி லேதைக்
குறித்தோ. 221

களவா யிரஞ்செய்யினு-நாமிவனைக்
கண்டிப்ப தில்லையென்று விண்டுரைத்துத்
தளவாய் சமுகத்திற்போய்ப்-பண்டாரஞ்
சனுப்பெற வேணுமங்கே யனுப்புமென்றார். 222

தீரன்கு மாரத்தளவாய்-மனுநீதி
செலுத்திய ரசுசெய்யுங் கொலுத்தனிலே
ஆருந்த டைபண்ணாமற்-கூட்டிச்சென்
றருமைய றிந்ததுரை திருமுன்விட்டார். 223

விடுத்துச்ச முகந்தன்னிலே-நான்கொண்ட
வேசத்தை யுமுடித்த தோசத்தையுந்
தொடுத்துக்க தையாச்சொல்லி-நம்முடைய
துரகதந் திருடிய துரகனென்றார். 224

துரையென்மு கத்தைப்பார்த்தே-ஏமிரா
துஞ்சத்தொழி லிட்டுவந்த லஞ்சக்கொடுக்கா
வரலாறு மூரும்பேரும்-குலமுமுன்
வகையுஞ்சொல் லென்றாரந்த மகராசன். 225

சாமிநான் கள்ளனென்றே-ஒளியாமற்
சாதியுஞ்சொன் னேனடந்த சேதியுஞ்சொன்னேன்
சீமையு மென்பதியுஞ்-சொன்னவுடன்
சிரித்துக்கொண் டாரெசமான்
கருத்தைக்கண்டேன். 226

மனங்கலங் காமனின்றேன்-உயிர்ச்சேதம்
வாராது குறைநம்மைச் சாராதென்றே
சனங்களைச் சாத்திரிகளை-நோக்கியிந்தச்
சல்லிக்குச் சிட்சையென்ன சொல்லுமென்றார். 227

வேதநூ லறிந்தவர்கள்-மனுநீதி
விவகார மறிந்தெனக் குவகாரமாய்ச்
சாதனைசெய் திருடனையே-காலுங்கையும்
தறிப்பது மனுநீதி குறிப்பதென்றார். 228

குறித்ததைத் துரையறிந்து-களவுசெய்
கொலைகாரப் பொட்டிமகன் தலைபிழைத்தான்
சுறுக்குடன் காலுங்கையுந் தறித்தப்பால்
துரத்துமென் றோருத்தர முரைத்தனரே. 229



ஐயன்கு மாரத்தளவாய்-அரண்மனை
அடையாளம் வேணுமென்று புடையிருந்த
கையம்பு தனையெடுத்துத்-தலையாரி
கையிற்கொ டுத்தாரேதோ பையச்சொல்லியே. 230

மறுத்தோருத் தரஞ்சொல்லாமல்-அரமனை
வாசலுக்கப் பாற்கொணர்ந்து பூசல்விளைத்தார்
பொறுத்தோரி ரவுவிழித்தாற்-சாளிகைப்
பொன்கட்டுஞ் செல்லக்கையைப் பின்கட்டுகட்டி 231

மணக்கோல முனக்கிதென்றே-எருக்கலை
மாலைக முத்திலொரு காலைதறித்துப்
பிணைத்தகொ டுவைக்காளைபோல்-என்னைமுன்னும்
பின்னுந்தள்ளிக் கன்னங்கன்ன மென்னத்
தகர்த்துக் 232

கடைத்தெரு தனிற்கொணர்ந்து-பொரியுண்டை
கடலைய வல்பயறு விடலையுடன்
எடுப்பெடுத் தெனக்குத்தந்து -பாளையம்
இரையத்தி டுதிடென முரசறைந்து. 233

தெருக்களெல் லாங்கடந்து-கேட்டவர்க்குச்
சேதிசொல் லிச்சினத்து வைதுறுக்கியே
விருக்கென்று டல்பதறவே-கோட்டைவாசல்
வெளியிற்றி ரும்பியொற்றைப் புளிகடந்தே. 234

இடருற்றென் போலத்திருடுங்-கள்ளருக்கென்
நீட்டிமுனை போலக்கழு நாட்டிநிற்குந்
திடருக்கப் புறமிருத்தி-அம்பட்டச்
சிலையானை யழைப்பித்தார் தலையாரியள். 235

பரிகாரிச் சிலையான்வந்து-காலுங்கையும்
பறிக்கும்பொ ருத்தறிந்து குறித்துக்கொண்டு
கருவிக திக்கத்தீட்டி-மாறுகாலுங்
கையும்வாங் கிவைத்தார் மெய்பதறவே. 236

தாளுங்க ரமுந்துணித்து-வைத்தவுடன்
தளர்ச்சியுற் றாக்கினைக் களத்துக்குளே
தோளுந்தொ டையும்பறந்து-மூர்ச்சைவந்து
சோர்ந்தும திமயங்கிச் சாய்ந்துவிட்டேன். 237

திருப்பதி மலைதனிலே-பெருமாளைத்
தெண்டனிட்ட டிதொழுது தொண்டருடனே
இருப்பதுக் கிசையாமல்-தலத்தைவிட்
டிழிந்தபா வம்நம்மை வளைந்ததென்றே. 238

புழுதியிற் கிடந்துருண்டு-அழுதழுது
புலம்பித்து ரும்புகுத்தி நிலம்பரண்டிக்
கழுதைபோற் காலுதைத்தே-ஊழ்விதி
கடக்கரி தென்றுநான் கிடக்கையிலே. 239

செறிந்தந்தப் பாளையத்திலுஞ்-சந்தத்
திருக்காட்டுப் பள்ளியிலு மிருக்கின்றபேர்
அறிந்தும றியார்கள்போல்-ஏதுக்கிந்த
ஆக்கினை வந்ததென்று கேட்பாரும் 240

பெரியவர் போலவந்து-பாளையத்திற்
பிச்சையெடுத் துத்திரிந்த துச்சனனென்று
பரியாசஞ் சொல்வாரும்-வீணிலிந்தப்
பாவமு னக்கேனென்று நோவாரும். 241

உருவழிந் தறிவிழந்து-நான்கிடந்த
ஒருநாளும் பத்துநாட் டிருநாள்போல்
வருவாரும் போவாரும்-என்னைக்கண்டு
மலைக்குஞ்ச னங்களுக்கு மிலக்கில்லையே. 242

### விருத்தம்

நலந்திகழ்பல் வளங்களுமிக் கோங்கிடச்சொல்
வளஞ்சேரு நல்லூர் மேய
பொலந்தருதிண் மணிப்புயத்த னநந்தபற்ப
நாபனெதிர்ப் பட்டென் புண்ணும்
அலந்தலையு மாற்றுவித்தா னச்செயலு
மவனுரைத்த வழியே சென்று
சிலம்பனையான் செந்தூரிற் சேவித்துச்
சிறந்ததுவுஞ் செப்பு வேனே. 243

### சிந்து

தனித்துப் பரதவித்து-நான்கிடந்து
சாளையப் படுமந்த வேளையிலே



கனித்துவ ரிதழ்மடவார் -மதவேள்சங்
கரமூர்த்தி பெற்றெடுத்த வரபாலன். 244

திருநதிக் குலதிலகன்-சோலைதொறுஞ்
செல்லூர்வ ளஞ்செறிந்த நல்லூரான்
துரைகள்ச மத்தானத்திற்-கீர்த்திகொண்ட
சுப்பிரதீ பனநந்த பற்பநாபன். 245

சிறக்குங்கு மாரத்தளவாய்-கொலுவினில்
திருவடி தேசத்தின் பருவஞ்சொல்லி
நிறக்குஞ்சி விகையேறி-மனுமுறை
நீதிமக ராசனந்தப் பாதையில்வந்தான். 246

குருதியின் முழுகிக்கொண்டு-நான்கிடந்த
குறிப்பைக்கண் டேசிவிகை நிறுத்திக்கொண்டே
ஒருவர்து ணையில்லாமற்-கிடந்தவென்
ஊரேது பேரேது சீரேதென்றான். 247

மகந்துதி ருப்பதியினான்-முன்னிருந்த
வாழ்வுமிப் போநடந்த தாழ்வுஞ்சொன்னேன்.
இகழ்ந்தொன்றுங் கூறாமலே-எண்ணெய்க்கும்
எலுமிச்சம் பழத்துக்கும் விலைகொடுத்தே. 248

ஆருமற்ற பாவியிவனைப்-பரிகரித்
தனுப்பென்று சமுகத்திற் றனித்தழைத்துக்
காரியத் துடன்பேசிப்-பரிகாரி
கைக்குளொரு சாளிகைப்பொன் ரொக்கங்
கொடுத்தே. 249

அலமலித்திரங்காதே-காயத்தை
ஆற்றிக்கொண் டேதிருச்செந் தூர்க்குவந்தாற்
கலபம யிற்குமரவேள்-திருவனுன்
கையுங்காலு மென்றுசொல்லி மெய்யுரைத்துப்250

புரவலர் தொழுஞ்சரணன்-சததளப்
பொற்பாவை சேரநந்த பற்பநாபன்
அரமனைக் கெழுந்தருளிச்-சென்றதற்பின்
அனைவோரு மெனைக்கண்டு மனதிரங்கி. 251

எண்ணைகொ திக்கக்காய்ச்சிப்-பதமறிந்
தெலுமிச்சம் பழங்கொண்டு வலுமிச்சமாய்ப்

புண்கருக வொத்தனமிட்டுக்-காலுங்கையும்
பொட்டுக்கம்பு போற்சுருங்கக் கட்டுமமைத்து. 252

மெய்யிற்பு ழுதிதுடைத்து-முகத்தினில்
வேர்வையுந் தீர்த்திரணப் பார்வைபார்த்து
நெய்யிற்பொ ரிக்கறியுடன்-பத்தியமாய்
நேருஞ்சம் பாவரிசிச் சோறுந்தந்தே. 253

ஆறேழு நாளைக்குளே-காயத்தை
ஆற்றியென் னுடம்பையுந் தேற்றிவிட்டார்
நூறாறு மிஞ்சினதெல்லாங்-கணக்கிட்டு
நொடிக்குளொ டுக்கிக்கொண்டேன்
முடிப்புக் கட்டிப் 254

பொதிவைத்துப் பிச்சையெடுத்துப்-பட்டசளம்
போதுந்த லைமுறைக்கும் போதுமென்றோர்
குதிரைசம் பாதித்துக்கொண்டே-னோர்பயலைக்
கூட்டிக்கொண் டேன்முகூர்த்தங் கேட்டுக்
கொண்டேன். 255

அயனதெட் சணதிசைக்குள்-கதிர்வாரம்
அத்தநா ளிரவுற்ற சத்தமியிற்
பயணமென் றெழுந்திருந்தேன்-திருக்காட்டுப்
பள்ளிவிட்டுத் திருச்சிராப் பள்ளியில்வந்தேன். 256

திருவானைக் காவுங்கண்டேன்-காவேரிச்
செலத்திற்கு ளித்தரங்கர் தலத்தில்வந்தேன்
பெருமானைத் தொழுதிறைஞ்சும்-வயிணவப்
பெரியோரைத் தெரிசித்து வரிசைபெற்றேன். 257

உறையூர் வழிநடந்தேன்-அரமனை
ஓலையஞ்சற் காரரன்ன சாலைதோறுங்
குறைதீரப் பசியாறி-நடந்தெங்கள்
குலக்கள்ளர் வளர்சோலை மலைக்குள்வந்தேன். 258

பழமுதிர் சோலைதொழுது-முச்சங்கப்
பாடலு வந்தசொக்கர் கூடலுங்கண்டேன்
கிழமுதிர் வடிவங்கொண்டே-குறத்தியைக்
கெஞ்சிய தெய்வமேயுன் தஞ்சமென்று 259



திருப்பரங் கிரியில்வந்தேன்-அதினுள்ள
செய்கையுஞ் சரவணப் பொய்கையுங்கண்டேன்
பொருப்பர சிறகரிந்தோன்-பெற்றெடுத்த
புண்ணியம் போல்வந்த பெண்ணமுதை 260

மணஞ்செய்த கோலங்கண்டேன் -அங்கிருந்த
வடிவேற் கடவுளை யடிதொழுதேன்
குணஞ்செய்து மனங்குளிர்ந்து-திருப்பரங்
குன்றுகடந் தொருமித்துச் சென்றுநடந்தேன். 261

நடந்துவ ழியைத்தொலைத்துச்-சோலைதொறும்
நத்தூருஞ் சீவில்லி புத்தூர்கண்டேன்
அடர்ந்தவச் சாலைவழியே-வந்துகயத்
தாறுங்குற் றாலச்சிற் றாறுங்கண்டேன். 262

திருநெல்வே லியில்வந்தேன்-பசுங்கழைச்
செடிவாழ் வோடநந்த வடிவாள்தன்
மருமலர்ப் பதந்தொழுதேன்-அனுதினம்
மறைபயில் சிந்துபூந் துறையுங்கண்டேன். 263

விரிபுனல் பொருநைகண்டேன்-கோட்டையுடன்
விளங்குபா ளையங்கண் டுளங்குளிர்ந்தேன்
குருமணிச் சிகரிவளர்-முத்தாலங்
குறிச்சியில் வந்தொருநாள் தரித்திருந்தேன். 264

சந்தசல சாமியருளால்-எந்நாளுந்
தவறாத வாழ்வுபெற்ற கவிராயன்
கந்தசா மியைக்கண்டேன் -அவன்சொன்ன
கவித்வஞ் செவிபருகி மகத்வம் பெற்றேன். 265

சீமா னுபசரித்து-வயிற்றுக்குஞ்
செவிக்கும்வி ருந்துதந்த சவுக்யங்கொண்டு
கோமான் திருச்செந்திலான்-உம்பளக்கற்
குளமுங்க ளஞ்சியநெற் களமுங்கண்டேன். 266

சீர்கொண்ட சீவைகுண்டத்தூர்-வழிவந்து
சிகரிசூழ் ஆழ்வார்திரு நகரிகண்டேன்
பேர்கொண்ட திருக்கோளூர்-தென்திருப்
பேரையுங் கடந்துநல் லூரையுங்கண்டேன். 267

சந்திர கலையைப்போலக்-குளிர்ந்திட்ட
சண்முகச் சாலையைக்கண் டுண்மகிழ்ந்தேன்
செந்திலம் பலமுங்கண்டேன்-வேற்படைச்
செட்டிதன் பணிவிடைச் செட்டியைக்கண்டேன். 268

அங்கைமுகில் நிகர்கொடையான்-மஞ்சவாள்
அனுப்பர்கு லத்துரையக் கினிப்பரியான்
எங்கள்வட்ட ராமேந்திரன்-நாலா
யிரமுடை யார்குளத்திற் பரவிச்செய்த 269

வேலவன் பாலமேறி-இடம்வலம்
விலகாம லேநடந்தேன் நிலமகட்கு
மாலைபோ லேநிறைந்த -புனல்கொண்ட
வள்ளிவாய்க் கால்கடந்து மெள்ளநடந்தேன். 270

ஆலைப்ப ழனநெருங்கும்-புனற்றலை
அணைமடத் தினில்வந்து பனைமரத்தைக்
காலுக்குட் பொருத்திக்கொண்டு-கிந்திக்கிந்திக்
கவரயர் மடம்வந்து தவையாற்றினேன். 271

மட்டவிழ் துணர்க்கடம்பன்-வேட்டைவெளி
வழியுமாண் டுகொண்டான் புளியுங்கண்டேன்
கொட்டகை வாசலுங்கண்டேன்-திருநாட்
கொண்டருளுஞ் செவ்வந்தி மண்டபங்கண்டேன். 272

தெருவிற்சிங் காரமுங்கண்டேன்-செங்கனகத்
தேருஞ்சி றந்தமகா மேரெனக்கண்டேன்
இருபிறப் பாளரெல்லாஞ் -சஞ்சரிக்கும்
இடமுந்தெ ருநிறைந்த மடமுங்கண்டேன். 273

பொய்யுங்க ளவுங்கொடுமை-யுங்கொலைசெய்
புன்மையும் விரும்பிநா னிம்மையிலே
செய்தபா வந்தீரக்-கடற்கரைச்
செந்தூர்த்த லத்துக்குள் வந்தேனே. 274

மூவரும் முனிவர்களும்-அட்டதிக்கு
முதல்வர் பராசரர் முதல்வர்களுந்
தேவருந் தொழுதிறைஞ்சுங்-கடற்கரைச்
செந்தூர்த்த லத்துக்குள் வந்தேனே. 275



வரைமுத்துங் கமுகின்முத்துங்-கதலியின்
மடல்முத்தும் வளைமுத்துங் கடலின்முத்துந்
திரைமுத்துஞ் சொரிந்துநிற்குஞ்-சந்தமலைச்
செந்தூர்த்த லத்துக்குள் வந்தேனே. 276

சோலையுஞ் சாலையுங்கண்டேன்-சாலையிற்
சொன்னவரந் தந்தவையன் சந்நிதிகண்டேன்
காலைக்கொ டுவிடங்கொண்ட-கட்செவியைக்
கண்டதுண்டங் கண்டமயின் மண்டபங்கண்டேன் 277

தாண்டும யின்மேல்வருங்-குமரற்குத்
தந்திகடி கொண்டிறந்த தையலைமுன்னாள்
தூண்டிய கரமுடைய-விநாயகன்
துணைமலர்ப் பதந்தொழு திணையிலதோர் 278

வில்வேடர் குலக்கொடிக்குங்-குஞ்சரிக்கும்
வேலைப்பி டித்தகையான் மாலையிட்டோன்
கல்யாணத் திருவாசல்-கண்ணாரக்
கண்டுடல் பூரித்துத் தெண்டனிட்டேன் 279

கள்ளவிழ் மலர்க்கடம்பன்-கோவிற்சி
கரமுமே லக்கோ புரமுங்கண்டேன்
வள்ளியம் பலமுங்கண்டேன்-சந்நிதி
வாசலிற் சண்முகவி லாசமுங்கண்டேன். 280

மடற்கடம் பணிபுயத்தன்-உமைபெற்ற
வரசுதன் குருபர னரசுசெய்யுங்
கடற்கரைச் சினகரத்தைக்-கண்ணாரக்
கண்டுடல் பூரித்துத் தெண்டனிட்டேன். 281

சனகர்ச னற்குமாரர்-சனாதனர்
சனந்தர்மு தன்முனிவர் தினந்துதிக்குங்
கனகதெக் கணவாசல்-கண்ணாரக்
கண்டுடல் பூரித்துத் தெண்டனிட்டேன். 282

புனற்கடல் கரைப்புரமும்-ஈழத்திற்
புத்தளமட் டுந் தெரியுங் கொத்தளமுங்
கனத்தம ணற்புரிசையுங்-கண்ணாரக்
கண்டுடல் பூரித்துத் தெண்டனிட்டேன். 283

மதிக்கதிர் போற்குளிர்ந்து-செந்தூரில்
வண்மைபெ றும்புகழ்போல் வெண்மைபெற்றுக்
கதித்தம ணித்திரள்களும்-கண்ணாரக்
கண்டுடல் பூரித்துத் தெண்டனிட்டேன். 284

முதுதமிழ் வழுதிமகள்-வாடிய
முகத்தைக்கண் டழகிய முகத்தைத்தந்த
குதிரைமு கத்தீர்த்தத்தால்-நமக்கந்தக்
குதிரைமு கத்தில்வந்த வினைதீர்க்கும் 285

வதனா ரம்பமெனவே-குணதிசை
வாசலிற் கடலாடி நேசத்துடன்
கதிதரு காசியிலும்-மிக்கான
கந்தபுட் கரணியில் வந்துபடிந்தே 286

அயிரா வததீர்த்தந்-தன்னிலும்வந்
தாடிக்கொண் டேன்சுகிர்தந் தேடிக்கொண்டேன்
உயர்சந்த வரையைக்கண்டேன்-ஆறெழுத்தை
உச்சரித்துக் கிரிப்பிர தட்சணம்வந்தேன். 287

வளங்கொள்தி ருச்செந்தூரில்-குருபரன்
வாழ்ந்திடுங் கோயில்வலஞ் சூழ்ந்துவந்தேன்
விளங்குதட் சணவாசல்-தன்னினின்று
வெள்ளிப்ப டியிறங்கி யுள்ளேசென்றேன். 288

வசந்தமண் டபத்திற்சென்றேன்-ஐயன்சுக்ர
வாரக்கொ லுவிருக்கு நேரமென்றார்
புசங்குவ டெனத்திளைப்ப-விம்மியுடல்
பூரித்து நின்றேயொரு பாரிசத்தில் 289

கமலா சனன்வணங்கப்-பாதத்திற்
காத்திருந்து திருமால் தோத்திரஞ்செய்ய
இமையோர் வட்டஞ்சாய்ப்பக்-கந்தருவர்
இயக்கர்சித் தர்விசிறி யசைத்துநிற்பச் 290

சந்திரன்வெண் குடைநிழற்றக்-கதிரவன்
தங்கவட்டம் பொற்பரிசை செங்கையிற்பற்றப்
பைந்தரு நிழல்தன்னில்வாழ்-மகபதி
பாலன வெண்கவரிக் காலசைப்பத் 291



தனதன டைப்பம்பிடிக்சு-வருணன்
தாங்குகா ளாஞ்சிகொண்டு பாங்குநிற்க
அனலியு மருத்துவரும்-பொற்சரிகை
யாடைவி ரித்துப்பா வாடைவீச 292

அதிர்த்தபொற் கேடயங்கொண்டு-தென்றிசை
யாளுந்த ருமனுடை வாளெடுக்கத்
துதிக்கைநி ருதிதனுவுந்-தூணியுஞ்
சுமந்துபோர்க் கோலஞ் சமைந்துநிற்க 293

நாரதர் தும்புருவுடன்-வீணையின்
நாதச்சு ருதியிற்சங் கீதம்பாட
வீரவா ணாசூரன்-மெய்ப்பரதம்
விளங்கக்க ரங்கொடுமத் தளங்கொட்டவே. 294

தேவரம் பையர்நடிக்க-முகவீணை
தித்திசதி கூடுதொனி யொத்துமுழங்க
மூவரு ரைத்ததமிழும்-பரியாக
முந்தநரி கொண்டுவந்த மந்த்ரிதமிழும் 295

கீரனி சைத்தமிழுடன்-அருண
கிரிசொன்ன திருப்புகழ் தெரிதமிழுஞ்
சீர்தளை பதச்சுவடு-சொற்சுவடு
சிறந்தவித் தைப்ரசங்க நிறைந்துநிற்க. 296

முச்சுதந் தரர்களெல்லாம்-அன்பொடு
முன்னும்பின்னுந் துன்னிவெகு நன்னயத்துடன்
மெச்சுமறை யுபநிடதம்-விதிமுறை
விளம்பிடு துதியொலி கிளம்பிடவே. 297

வானவர் முனிவரெல்லாம்-அவரவர்
வரம்புதப் பாமனிற்கப் பிரம்புகொண்டு
சேனைத்தி ரளொதுக்கியே-திருமுன்பு
செயவீர வாகுகட் டியமுரைக்கச் 298

சீரியற் றிறல்வீரர்-எண்மருஞ்
சிலைத்திறல் வீரர்க ளிலக்கர்களும்
பாரிடைத் தளத்துடனே-நூற்றெட்டுப்
படைத்தலை வருந்தொழு திடத்தினிற்கத் 299

தேவதுந் துமியதிரத்-திண்டிமம்
திமிலைக னகதப்பு முருடுபம்பை
தாவுதி ரைப்புணரிபோன்-முழங்குந்த
டாரித வின்முரசு பேரிகையுடன் 300

சல்லரி துடியிடக்கை-காகளந்
தாரைநா கசுரம் பூரிகைமுதற்
செல்லுரு மெனத்தொனிக்கப்-பானுகோபன்
செங்கையிற்பி டித்திசைத்த சங்குமுழங்கத் 301

தேனும்பா லும்போலவே-இதமிக்க
தெய்வக்கு லமகளும் வள்ளிக்கொடியும்
மானும்பி டியும்போலவே -மணிப்புய
வரையரு கினிலிருந் தரசுசெய்ய. 302

அருணனு தையமெனவே-மவுலிகள்
ஆறுந்தி ருமுகங்க ளாறுமிலங்கத்
தருணம திப்பிளவுபோல்-நுதல்தொறுஞ்
சாத்துந்தி ரிபுண்டரக் கீத்துவிளங்கக் 303

கருமணிச் சிலையனைய-புருவந்தொறுங்
கருணைசொ ரிந்திடுபன் னிருவிழியுங்
குருமணித் தொங்கைபதித்த-பொன்மகர
குண்டலமி லங்குபன்னி ரண்டுகுழையுஞ் 304

சிவந்தக னிவாய்தொறும்-பவளத்திற்
சிறுமுத்தெ னநிரைத்த குறுநகையும்
தவழ்ந்தபு னலருவிபோன்-மார்பின்முத்துத்
தாழ்வடமு மாபரணக் கோவைகளும் 305

ஈராறு கரதலமுங்-கரங்களில்
எங்கணுங்கி டந்திலங்கு கங்கணமுஞ்
சூராதி பத்யமுடியத்-தொடுத்தசெஞ்
சுடர்க்கதிர் வேலுமற்றப் படைக்கலமும் 306

ஆடைக்கி சைந்தமருங்கும்-மருங்கினில்
அரைஞாணு நவமணி அரைவடமுங்
கூடக்கி டந்துதுவளச்-சரணத்திற்
குரவுக டம்புபரி புரமிலங்கச் 307



சிம்புட்கு ருளையெனவே-தாங்கிய
சிங்கத்தினி லமைத்த தங்கத்தவிசில்
உம்பர்க்க ருள்குமரவேள்-கொலுத்திரு
ஓலக்கஞ் செய்திருந்த கோலத்தைக்கண்டேன். 308

வேத்திரம் பிடித்துக்கொண்டு-முன்புநின்ற
வீரவா குவைக்கண்டு நேரேசென்றேன்
தோத்திரஞ் செய்துகும்பிட்டேன்-பனைமரச்
சுமையாற்ற வுனக்கிது சமையமென்றார். 309

கட்டியச் செயவீரன்-என்னைக்கண்டு
கண்காட்டிக் குளிர்ந்தமு கங்காட்டினான்
கெட்டியாய்ச் சமுகத்திலே-காலைமெள்ளக்
கிந்திக்கிந்திக் கொண்டுசென்று சந்தித்தேனே. 310

சைவக்கு மாத்துடனே-நெருங்கிய
சதுமறை வேதியர் துதிமுழங்குந்
தெய்வக்கொ லுவினிற்சென்றேன்-முருகனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 311

தானாப திக்குவீரன்-கொண்டுவந்த
தகடேறி நடத்துஞ்சண் முகராயனைச்
சேனாப தித்தலைவனைக்-குமரனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 312

கங்கைத ருகுமரனைச்-சரவணத்திற்
கார்த்திகைப்பெண் முலையுண்ட மூர்த்திதன்னைச்
செங்கைவ டிவேலனைக்-குருபரனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 313

புத்தியுனக் கீதெனவே-பிரமனைப்
புடைத்தோனை யுலகம் படைத்தோனைச்
சித்திரம யில்வீரனைக்-கடற்கரைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 314

காவற்க டவுண்முதலோர்-வணங்கிடு
கருணைக்க டலனைப்பன் னிருபுயனைச்
சேவற்கொ டிவீரனைக்-குடநாட்டுச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 315

விருப்பமங் கீகரித்து-வழங்கும்வி
சாகனைத் தெய்வானை பாகனைநான்
திருப்பரங் கிரியானைக்-குகனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 316

சூரலை வாய்மலைக்க-வேற்படை
தொடுத்தோனைத் தேவர்சிறை விடுத்தோனைச்
சீரலை வாயுகந்த-கடவுளைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 317

தருவாய் கனியெனவே-வந்தவுடன்
தந்தைதா யாசைபழ நீதானெனத்
திருவாவி நன்குடிவாழ்-முதல்வனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 318

கருவே ரறத்துணித்தே-அடியவர்
கன்மவி னைதவிர்க்கு நின்மலனைத்
திருவே ரகத்தினில்வாழ்-சேவகனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 319

குறுமுனிக் கருள்புரிந்த -குழகனைக்
குன்றுதோ றாடியெங்கு நின்றோனைச்
சிறுகண்மும் மதக்களிற்றின்-துணைவனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 320

பருத்தமு லைக்குறத்திசேர்-கணவனைப்
பழமுதிர் சோலைமலைக் கிழவோனைத்
திருத்தணி மலைபுரக்கு-மொருவனைச்
செந்திற்ப ழம்பொருளைச் சந்தித்தேனே. 321

சந்தித்து விழிகுளிர்ந்து-நவமணித்
தண்டைப்ப தத்தைமுன்னே தெண்டனிட்டுச்
சிந்தித்தென் குறைபகர்ந்து-தியானித்துத்
தினைப்போது வணங்கினேன் மனப்பூர்வமாய்ப்322

பரவசத் துடன்வணங்கி-நித்திரைவந்து
படுத்தவர் போற்கிடந்தே னடுச்சபையில்
சரணிலே சரண்புகுந்தேன்-முருகனென்
தன்மானி தனைக்கண்டு சன்மானித்துத் 323



துச்சனஞ் செய்துதிரிந்து-வந்துநம்மைத்
தொழுந்திரு டாவினி யெழுந்திருடா
தற்செய லாகவளரக்-காலுங்கையுந்
தந்தோமென் றுகனவில் வந்தோமென்றார்.324

தெரிசனங் கண்டுவிழித்தேன்-காலுங்கையுந்
திருந்திமுன் போலவளர்ந் திருந்ததினாற்
கிரிதனில் வேல்விடுத்தோன்-சமுகத்திற்
கிடந்தேன் நானெழுந்து நடந்தேனே. 325

நடந்தவ திசயங்கண்டு-கொண்டாட
நாமோத ரம்பிரமன் தாமோதரன்
தொடர்ந்தெங்குந் தேடினாலுங்-காணரிய
சோதிப்பெ ருமையையா னேதுசொல்வேன்.326

கையுங்கா லும்வளர்த்தே-யெனைவளர்த்த
கத்தனைத் திருச்செந்தி லெந்தைதனைத்
தெய்வயா னைத்தாயை-மான்பெற்ற
தேனைத்தொ ழுதிறைஞ்சி ஞானம்பெற்றேன். 327

கலியுகந் தனிலெனக்குச்-செந்தூரிற்
காலுங்கை யும்வளர்ந்த மாலிமைகண்டு
வலியவந் துபசரித்துத்-தலத்தார்
வரிசைகொ டுத்தெனைக்கண் டதிசயித்து. 328

வண்மைகொண் டாதரித்துக்-காவியால்
வட்டமொன்று மட்டமொன்று கட்டளையிட்டுச்
சண்முகன் கைங்கிரியத்-திருப்பணிவி
சாரிப்போன் என்றெனக்கோர் பேருமிட்டார்.329

பணிவிடை மறவாமற்-கொலுத்திருப்
பணிமுற்றும் பொன்னினவ மணியிற்செய்து
துணிவுட னேசெந்தூரிலே-கிளைவாழ்ந்து
சூழ்ந்துசி றந்திருக்க வாழ்ந்தேனே. 330.

ஆறுமு கங்கள்வாழி-செங்கையிற்பொன்
அயில்வாழி சேவற்கொடி மயில்வாழி
பூருவவு பேந்திரன்பெற்ற-தெய்வானைப்
பொன்னும்பொன் மான்பெற்ற மின்னும்வாழி. 331

வீரவா காதியர்வாழி-இலட்சத்தெட்டு
　　வீரர்ப டைத்தலைவ ராரும்வாழி
பாரிடம் முற்றும்வாழி-திருச்செந்திற்
　　பதிவாழி சண்முகன்சந் நிதிவாழி. 332.

வேலாயு தன்கருணைசேர்-தலத்தார்
　　மிக்கதா னீகர்கரு ணிககர்வாழி
மாலோன்ம ருகனான-குருபரன்
　　வாழிநீ டூழிதமிழ் வாழிவாழி. 333.

**திருச்செந்தூர் நொண்டி நாடகம் முற்றிற்று**



# தணிகாசலப் பஞ்சரத்தினம்

சீர்புகழும் சென்னைபுரி திருவல்லிக் கேணிநகர்
　　செங்குந்தர் வீதிவாழும்
　சிவனருள் பாலனே சிவசுப்ரமணியனே
　　சிவகாமி தவப்புதல்வனே
கார்புகழும் போரூரில் சூரர்குலம் வேரறக்
　　கண்டித்த கதிர்வேலனே
　கனகமயி லேறிவரும் தெய்வானை பாகனே
　　கன்னி வள்ளி நாயகனே
பார்புகழும் உன்அன்பர் உளங்களித் திடவந்து
　　பன்மைவரந் தந்த பரனே
　ப ்கயன் சிறைமீட்டு வைத்ததொரு பாகனே
　　பழனிமலை வடிவேலனே
தார்புகழும் மாயனிட தங்கையுட மைந்தனே
　　சனகன்மகட் பதிமருகனே
　தகதகென மயிலேறி திருநடன மாடிவரும்
　　தணிகாச லக்கடவுளே. 1

சித்திரவி நோதமுடன் திகழான சென்னியும்
　　சிறப்பான பன்னிருகையும்
　திருமுடியில் மகுடமும் சுட்டியும் பட்டமும்
　　திருநீற்றுக் காப்பு மழகும்
இரத்தின கடுக்கனும் புசகீர்த்தி பளபளென
　　ரவிதைகண்டிகை மார்பினில்
　இரஜிததிரு மேனியும் முச்சிதப் பூணூலும்
　　இலட்சண முகத்தி னழகும்
நெற்றியில் திலதமும் நிகக்கன வடிவேலும்
　　நிறைந்த வொட்டி யாணமழகும்
　நிகரான தண்டையும் நீலமயில் சேர்வையும்
　　நின்பெருமை சொல்ல எளிதோ

அங்கம் கலங்கியே நொந்துயான் தவிக்கும் வேளை
அப்பனே முன்பு வருவாய்
ஆறுமுக மானதிரு நீறுவொளி யானவருள்
ஆறுமுக மான குருவே. 2

ஏதுமறியேன் ஒன்று இணக்கமறியேன் சற்றும்
இணையடிகள் போற்ற அறியேன்
எத்தேச காலமும் பக்தர்களைப் பூசித்து
இணக்கத்துடன் தொழுதுமறியேன்
நீதியறியேன் சுத்த நிட்டையறியேன் சற்றும்
நிலைகண்டு புகழஅறியேன்
நெடுநாளாய் உன்கோயில் வலமாக வந்துநான்
நின்று பூசித்துமறியேன்
வேத மறியேன் நூல்விளக்க மறியேன் பூரண
வேதாந்த முடிவுமறியேன்
வினைசெய்த பாவிக்குத் துணையாக நீவந்து
வேண்டின வரந்தருகுவாய்
ஆதிவடிவே ராச யோகவடிவே நித்திய
அருளமுத மான வடிவே
ஆறுமுக மானதிரு நீறுவொளி யானவருள்
ஆறுமுக மான குருவே. 3

ஏனோதான் நான்செய்த பாவவிதி கர்மமோ
எளியனிட நோன்பு பலனோ
எண்ணாமல் முன்னோரைப் பேசின கர்மமோ
எளியோரைப் பழித்த விதமோ
தானாக பூமியில் வழக்கோரஞ் செய்தேனோ
சத்ராதி கோப முறையோ
தாரணியில் கவிபாடு புலவரைத் தடுத்தனோ
தாய்க்கு என்பழி செய்தேனோ
.................................................
மங்கையர்கள் தாபமிதுவோ
பாராமல் முன்செய்த பாவத்தை நீக்கியே
மைந்தர்க்கு வரந்தருகுவாய்
ஆனாலும் எங்கள்முன் வருகுவாய் மயிலேறும்
ஐயனே கதிர்வேலவா
ஆறுமுக மானதிரு நீறுவொளி யானவருள்
ஆறுமுக மான குருவே. 4



நஞ்சுண்ட பரமகுரு வானதொரு தெய்வமே
நாதனே குமரர் குருவே
நாயகா உனைவிட வேறுதுணை இல்லைஎனை
யாதரிப் பவரு மில்லை
பஞ்சையாம் நானென்ன பாவங்கள் செய்தனோ
பரதவித் திடவு நீதான்
பாரா திருப்பதும் தர்மமோ உந்தனைப்
பார்த்தவர்கள் ஏசார்களோ
கொஞ்சமென் றென்னைநீ விட்டு விட்டாலும்
குழந்தை நான் விடுவ தில்லை
கோபமோ என்மீதில் தாபமோ என்செய்வேன்
கொத்தடிமை கொண்ட முருகா
தஞ்சமென் றேயுனைக் கெஞ்சியே வருந்திடத்
தற்காத் தருள்புரிகுவாய்
தகதகென மயிலேறி திருநடன மாடிவருந்
தணிகாச லக்கடவுளே. 5

**தணிகாசலப் பஞ்ச ரத்தினம் முற்றிற்று**

# ஆறுமுகசுவாமி பஞ்சரத்தினம்

திருவளரும் சென்னைபுரி தெய்வப் பிரகாசனே
சிவகாமி தவப்புதல்வனே
சிங்கார வேலனே கதிர்காமத்தையனே
தெய்வானை குணநேயனே
மருவுமலரணிகின்ற வள்ளிக் குகந்தநல்
வையாபுரித் தலைவ[illegible]
மயிலேறும் வீரனே சூ[illegible]ம் மாரனே
மாயவன் நல்மருகனே
தருவிற் பழுத்தகனிக் காகவொரு நொடியிற்பூ
வலம்வந்த சம்மாரனே
சங்கரி கொடியிட தலத்தினா லுதித்திடும்
சரவண குருகந்தனே
அருமையுடன் வருகுவாய் மயிலேறும் ஐயனே
கதிர்காம முத்தையனே
ஆறுமுக மானதிரு நீறுவொளி யானவருள்
ஆறுமுக மான குருவே. 1

சங்கரன் தனக்குமிக உபதேசம் சொல்லியே
சகலருக் கமுத மீந்தாய்
சாட்சாதி வேடர்மகள் வள்ளியின் கொல்லையில்
தனிவேங்கை மரமு மானாய்
எங்கும்புக ழாகவே அசுரரைச் சம்மரித்து
இந்திரனுக் குதவி செய்தாய்
ஏகாந்த மாகவே தென்பழனி புரியினில்
இடர்தீர்க்க வந்த முருகா
மங்கள கரமான தணிகைதிருப் போரூரில்
வாழ்மயிலந் தனில மர்ந்தாய்
மனுநீதி தவறாத கோடானு கோடிபேர்
வணங்கினோர்க் குதவி செய்தாய்



தத்தி[illegible]ரனைத் துளைத்துநீ அமர்செய்த
தயாபர மான துரையே
தகதகென மயிலேறி திருநடனம் ஆடிவரும்
தணிகாச லக்கடவுளே. 2

ஓராறு முகமாட ஈராறு புயமாட
ஓங்குவடி வேலு மாட
உச்சிதக் குண்டலமும் கச்சித முடியாட
ஒளியான சுட்டி யாட
பாராட தண்டையும் பாதச் சிலம்பாடப்
பணிந்திடும் பக்த ராடப்
பன்னிரு கரமாடப் பணிந்தபூ ஷணமாட
பவளவெண் குடைக ளாடத்
தோராத மயிலாடக் கோழித் துவசமாடத்
துலங்குநீர்க் [illegible]வி யாட
தொண்டர்கள் [illegible]தலான சண்டிகேஸ்வர ராட
தொந்தநவ வீர ராட
தாராத தவமுனிவர் தானாட நீயாடி
தமியனேன் முன்பு வருவாய்
தகதகென மயிலேறி திருநடன மாடிவரும்
தணிகாச லக்கடவுளே. 3

தந்தைதாய் தெய்வமும் நீயேகதி யல்லாமல்
தற்காக்க ஒருவ ரில்லை
தயிரியம் சொல்லவும் தாபமது தீர்க்கவும்
தரணியில் எவரு மில்லை
சந்ததமும் நால்வேதம் உன்னையே புகழ்ந்து
சரணாகதி யென்ற வர்க்கு
சாலோக சாமீப சாரூப மேலான
சாயுச்சியந் தந்த குருவே
வந்தனம் செயுமுனது அன்பர்க் கிரங்கிநீ
வண்மையுடன் வரமளிப்பாய்
வள்ளி தெய்வானையுடன் வாழுமயி லேறியே
வரவேண்டு மெந்த னருகே
தந்திர மிகுந்ததிரு மாயனிட மருகனே
தற்பரா னந்த பரனே
தகதகென மயிலேறி திருநடன மாடிவரும்
தணிகாச லக்கடவுளே. 4

வேலும் அசைந்தாட வீரகிண் கிணியாட
வெண்டையங் குலுங்கி யாட
விதமான காலினிற் தண்டைச் சிலம்பாட
வேதாந்த குடைக ளாட
நாலுமறைகள் பாடக் கோழித் துவசமாட
நாதாந்தப் பொருள்க ளாதி
நாகரீகமான வீரகெண்டாமணி
நடனமிடு மயில்க ளாட
பாலர்கள் காவடிகள் கொண்டு புகழ்ந்தாட
பத்தர்கள் நடன மாட
பாங்கான காவிநீர் உடையாட சித்தர்கள்
பணிந்து நிர்த்தனங்க ளாட
ஆலத்தை உண்டவன் புத்திரனே சமரபுரி
ஐயனார் வருக வருக
ஆறுமுக மானதிரு நீறுவொளி யானவருள்
ஆறுமுக மான குருவே. 5

**ஆறுமுகசுவாமி பஞ்சரத்தினம் முற்றிற்று**



உ

# மருதமலைச் சந்தப் பதிகம்

**ஸ்ரீமத் கந்தசாமிசுவாமி**

**காப்பு**

**நேரிசை வெண்பா**

மஞ்சு தவழு மருதா சலக்குகன்பான்
மிஞ்சு நலம்பெறுதல் வேண்டுமென்ற-னெஞ்சுறைந்து
வான்றோன் றமுதனைய வண்கவிகள் பெய்யுமெழிற்
றான்றோன்றி நாயகன்பொற் றாள்.

**நூல்**

**தனதான தத்தத்த தனதானா**

விரையார்சி வத்தகஞ்ச மலர்மீதி ருக்கை கொண்ட
வியனான்மு கத்தனங்கை வரைமாணா
விதியேப லத்ததென்று பெருவாதி யற்றுகின்ற
விபரீத ருட்சுழன்று மடியாதே
கரைதீர்ம றைக்குலங்க ளறியாதொ ளித்திலங்கு
கவினாரு னற்பதங்க ளகலாதே
கருதோகை பெற்றதொண்டர் வதிசேக ரத்தடைந்து
களிகூர்ந லத்தையென்று தருவாயோ
திரைசேரு டற்பொருந்து முதியோனெ னத்தளர்ந்த
திருமேனி யைக்கொடொன்றும் வலியேதோய்
சிலைவேடர் பெற்றமங்கை தருதேனி டைக்கலந்த
தினைமாவி லிச்சைமிஞ்சி நுகர்வோனே
மரைநேரு ணர்ச்சிகொண்டு திரிவேனெ னைப்பொருந்து
மயலோடி டச்சிவந்த குருவாவாய்
மழைநேர்ம யிற்குலங்க டினமாடி டச்சிறந்த
மருதாச லத்தமர்ந்த பெருமாளே. (1)

**தனதான தந்தத்த** **தனதானா**

நினைவார்த நெஞ்சகத்தி லுவமான மொன்றுமற்ற
நிறைபூர ணங்கொளுற்ற சுகமேசேர்
நிமலாக ரம்பொறுத்த வுனைநாடு கின்றசுத்த
நெறிகாண வுஞ்செய்திட்டும் விலகாதே
முனைவேல்க ரம்பிடித்த துரையேய மூன்றெரிக்கு
முதுவேனி லொன்றலுற்ற புழுவேபோன்
முழுமாயை யின்றிறத்தி லுழல்வாதை கண்டிருத்தன்
முறையோவு னன்புளச்ச மதிதானோ
முனைவோர்க ணந்துதிக்கு மரசான கும்பனொத்த
முதியோரு ணர்ந்துவக்கு மிருதாளா
முருகாவெ னுஞ்சொல்சற்று மறவாம லன்பினித்த
மொழிவாள்க ரந்தழைக்க வருள்வோனே
மனைமாத ரென்றதுக்க வலையூடு ளம்பதித்து
மடியாந லங்கொளச்செய் குருநாதா
வழுவாமெ யன்புபெற்ற பெரியோரி னந்துதிக்கு
மருதாச லம்பொறுத்த பெருமாளே. (2)

**தனதான தத்தத்த** **தனதானா**

மடவார்க ணத்தின்மத்தி தனிலேயு யர்ச்சிமிக்க
மலயாச லத்திலுற்ற சிறுகான்மேன்
வருதீமை யைக்கொடுட்ட மதவேள்செ லுத்துபுட்ப
மழைமார்பி னைத்துளைக்கு மதனாலே
விடமேறி மிக்கயர்ச்சி யுறுவோரெ னக்களைத்து
மெலிவேனெ னைக்கடைக்க ணிடைநாடா
விரையார்ம லர்ப்பதத்தை முடிமீதி னிற்கவித்து
விரிவான சிற்சுகத்தை யருள்வாயே
கடமானை யொத்தமைக்க ணுடையாண்ம னத்திலுற்ற
கனவூட லைத்தவிர்த்து நயமேதோய்
கவிவாண னைக்களிக்க வருளீசர் நெற்றிபெற்ற
கனலான கட்புலத்தில் வருவோனே
வடமோடி ணைத்தபற்பல் கிளைநீடு துற்குணத்தென்
மனமீது முற்றவொப்பில் குருநாதா
வருவார்க ளிச்சைமுற்று மறவேகொ டுக்கவொப்பின்
மருதாச லத்திலுற்ற பெருமாளே. (3)



**தனதான தந்ததந்த** **தனதானா**

குணநீடு மின்றுலங்கு பவளாச லம்புரைந்த
குருமேனி கொண்டுவந்து தயவோடே
குறையாவை யுந்தவிர்ந்த பரிபூர ணம்புகுந்து
குடியாந லம்புகன்று மறியாதே
கணமாயி னும்பொருந்தி நிலையாத புன்புலன்கள்
கரணாதியின்க ணொன்றி யிழிவேதோய்
கடைவாழ்வை நம்பிநொந்து தொலைவேனை
யன்பர்துன்று
கதிசேர்கு ணந்துலங்க வருளீவாய்
பணமாயி ரங்கொள்கின்ற வணைமீத னந்தல்கொண்ட
பகவானு ளம்பொருந்து மருகோனே
பரண்மீத மைந்தகுன்றர் தவமாதை யன்புகொண்டு
பணிசீர்வி ளம்பி னன்கு மகிழ்வோனே
மணவாரி சம்புரைந்த வடியோடெ னன்பகன்ற
மனமீதி லும்பிறங்கு குருநாதா
வளநீடும் விண்புரங்கொண் மடவார்ந டஞ்சிறந்த
மருதாச லம்புரந்த பெருமாளே. (4)

**தனதான தத்ததானன** **தனதானா**

அலைவேலை சுற்றுபார்மிசை யுளதான பொய்க்கனாநிக
ரழிவாழ்வை நித்தமாமெனு நினைவோரா
யசுரேசர் வெட்குமாறுள பழிபாவ முற்றுமேபுரி
யநியாய முற்றதீயர்செய் வினையாலே
தலையான மிக்கமாதவ நெறிசேருநற்குணாலர்க
டளர்வாகி நித்தம்வாடவும் விடலாமோ
தனிவேல்க ரத்திலேகொடு முணரார்க ளொத்துநீயுறல்
சரியோவி ரக்கமோர்சிறி திலையேயோ
மலைதோறு நித்தமாடல்செய் பதநாடு பத்திமாதவர்
மனமேவு மிச்சையாவையு மெளிதீவாய்
மருவார்பு ரத்தைநீறெழ நகையாடு நித்தனாரது
வலமார்செ விக்கணோமுரை பகர்வோனே
மலையேறி கர்த்தவாணவ விருளோடி டற்கெனாதுகன்
மனவால யத்துளேவதி குருநாதா
மதனாக மத்திலேதின முழல்வாரு மெச்சுசீர்மலி
மருதாச லத்தின்மேவிய பெருமாளே. (5)

**தனனதன தானதன தனனதன தானதன**
**தனதான தத்ததன தனதானதத்ததன தனதானா**

தரணியிலொர் பான்மதிய மளவும்வயி றூடுகொடு
தருதாயி னைத்தனது மனையாளெ னத்தினமு
மருவியுள மோகைபெறு மளவினுநி லாமலிது
வழுவாமெ னப்புகல லிலனாகி யுற்றமிகு
தகைமருவு தாதையையு மடியும்வண மேகொலதி
சலசாக ரத்தைநிக ருறுபாத கத்தனுமுய் வுறுமாறே
சரதசிவ ஞானவநு பவமருவி னோர்களணை
தகுசீல முத்தியிடை புகுமாற ளித்தருள்செய்
பரசிவன்மு னாளின்முகி லளவியக லாலினடி
பயின்மாத வப்பயன தெனவேய மூற்கணிடை
தனையனென வேகுலவி யருமறையி னாதிபெறு
தனியோமொழிப் பொருளையுபதேசம் வைத்தகுரு பரனாநீ
பரவியல்கொ டாதையினு மகனறிவி னீடிடுதல்
படிமீதி னிற்குலவு முயிர்யாவி னுக்குமினி
தெனுநன்மறை வாய்மைபெற வெவர்களையுமேனிலையி
லிசைவாகி டச்செயறி குறியாயெ வர்க்குமிழி
படிறுமலி தீயனெனை யமரர்களு மாவல்பெறு
பலவான சித்திசெய்து முடிவான முத்திபுக விடவேநீள்
பருவமதி மானுமுக மலருமிகு தேசுடைய
பகைவேர றுக்குமுயர் வடிவேலு மக்கமொடு
தவளமுழு நீறணியு மெழின்மலிகௌ பீனமொளிர்
தடிநீடு கைத்தலமு நகைவாயு மொப்பரிய
பதுமமலர் போலுமிரு கழலடியு மேவுமுயர்
பவளாச லத்தைநிகர் திருமேனியைக் கொடெதிர்வருவாயே
கரவணுவி லாதமன முடையனுவல் பாவின்வழி
கடுவாய்கொள் சர்ப்பவடி வுளபாய்சு ருட்டியவ
னதுபிறகு போகவுமு ளிசைவுறுவி சாலமுள
வருணீர்மை யைக்கொள்சினை முகினேருடற்கடவுள்
கமலமலர் போலுமிரு விழியில்வரு மாதரிரு
கனகாம லத்தைநிகர் தனமார்பு றத்தழுவுமுருகோனே
கனியமுத நாணுமெழு சுரமகதி வீணைவதி
கரநார தப்பெரியன் முனைநாளி யற்றுமொரு
மகமதனில் யாவர்களு முளம்வெருவி யோடும்வண
மறமோடு தித்துவரு தகர்மீதி லுற்றொர்நொடி



கழிவதன்மு னேழுபுவி களையும்வல மாயமரர்
களிவேலையுட் புகல்செய் தருள்சேவ
கத்தலைமை யுடையோனே
மரணமுட னேசெனனம் வருவழியி தாகுமென
மனமாய்வ தற்றுவன மிருகாதி யொத்தழியு
முடலையொரு நாளெனவுண் மலியுமபி மானமுட
னுணவோடு டுக்கைபெறும் விதமேநி னைத்துலகின்
மறுமையிலு மேழ்நிரய மடையும்வண மேமுயலு
மதியீன முற்றவெனை யடியானெ னக்கொளுயர் குருநாதா
மதுரவின மேழுசுர மறைபுகல வேரிதரு
வனசாச னத்திலகு கலைமாத ருட்கைபெறு
மகிமைமலி சீரியர்த மிதயமிசை யேபெருகு
வளமார்க வித்தொகைக ளெனவேக லிப்பொடெழு
மதுரமலி வாரிநிறை சுனைவளநி லாவுமுயர்
மருதாச லத்திலவிர் தருமா லயத்தில்வளர் பெருமாளே.(6)

**தனதத்தன தானனதானன தனதானா**

அனமொத்தியல் சீர்நடையார்தரு மயலாலே
யழலிற்புழு வாமெனநாடொறு முழலாதே
கனசற்குண நீடியசீலர்கள் குழுவூடே
களிபெற்றெது நாளினும்யானமர் தரவாள்வாய்
கனகத்திரு நாடுளதேவர்க டுணைவோனே
கடமுற்றவிர் வேடமினாண்மகிழ் மணவாளா
வனசப்பத மோடெனுண்மேவிய குருநாதா
மருதக்கிரி மேல்விளையாடிடு பெருமாளே. (7)

**தனத்தனனத் தனத்தனனத் தனதானா**

தெருத்தலையிற் றுகிற்சரியத்
தனத்தைவெளிப் படுத்திமிகச்
சிரித்துவசப் படுத்திநயக் குயில்போலே
திருட்டுமொழிப் பசப்பொடரைக்
கணப்பிரிவைச் சகிப்பதறத்
திகைத்துரிமைக் குணத்தரையொத் தவர்பாலோர்
பொருட்டொகைபற் றறக்கைவரப்
பறித்தவரைச் சினத்துடனப்
புறப்படெனத் துரத்துமவர்க் குருகாதே

புலத்தையொருப் படுத்தியுனற்
பதத்தையுளத் திருத்தியதிற்
புகப்பெறுசிற் சுகத்தையுறப் பெறுவேனோ
திருப்பொலிநற் சிவச்சமயத்
திறத்தர்விழிக் கெதிர்ப்படின்முத்
தினத்துணவற் றவத்துடல்வற் றிடுதீதார்
திகைப்புமனக் குருட்டமணர்க்
கழுத்தலைபுக் கிறக்கவருட்
செயத்துடனற் புதத்தமிழ்மிக் கறைவோனே
யருத்தகையிற் றுருத்தகையிற்
றெனத்தெளியப் படுத்தெனகத்
தவத்தையறுத் தருட்டருசற் குருநாதா
வகத்தெளிவுற் றுடற்பிணியற்
றிடச்செயுமப் புதிக்குநலத்
தருச்சுனவெற் பினிற்குமரப் பெருமாளே. (8)

**தனனதன தானதந்த தனதானா**

கருமைமுகி லேபிளந்து மிசைமலர்கு லாவுகின்ற
கவினிலவு சோலையென்ற குழன்மானார்
கலவியெனு மாயவஞ்ச விருண்மலிவி சாலமுந்து
கடலினிடை யேவிழுந்து முழுகாதே
பெருமிதமு லாவுமுன்ற னிருபதச ரோருகங்கள்
பிறிவதில தாகியொன்று நிலையேதோய்
பெரியர்பத தூளியென்றன் முடிமிசையி லேயணிந்து
பிறவிமய லோடவென்று களியேனோ
மருமலர்க ளேநிறைந்த பொழில்குயின ளாவுகின்ற
மலைமுடிக டோறிலங்கு மிருதாளா
மகிதலமெ லாமளந்த பதுமமலர் நேர்பதங்கொண்
மழையுறழ்மெய் மாயனன்பு மருகோனே
மருவுமட மாதர்தங்க ளுருவைமிக வேவிழைந்து
வருணனைசொ லாதுவந்த குருநாதா
மகிமைமிகு தேனுவந்து தினமுலவு சீர்மிகுந்த
மருதமலை மீதுநின்ற பெருமாளே. (9)

**தனனதன தானதத்த தனதானா**

அகமலரின் மீதுநித்த முனதடிவி டாதுபற்று
மமலநிலை யேபொறுத்த பெரியோர்போ



லடியனையு மேன்மைபெற்ற குணமருவு மாறுவைத்து
னடிமலரி லாகுமுத்தி யுறுமாறே
புகவிடினு மேதமிக்க கொடியனென நாகம்வைத்த
புவியினர்க ளேசவைத்து நரகூடே
புரளவிடு காலுமொப்பி லுனையலது வேறொருத்தர்
புகலுளர்கொ லோவெனக்கு மொழிவாயே
ககனநதி யார்கடுக்கை யரவைமுடி மீதுவைத்த
கனல்விழிகொ ளீசர்பெற்ற குமரேசா
கரியநிற மால்படைத்த வரவுருவ மாறிடச்செய்
கணபதிகொ ளோகைமெத்து துணைவோனே
மகரமுல வாழியொத்த கொடியவினை யேனுமொப்பின்
மலரடிக ணாடவைத்த குருநாதா
மகிமைபல வாயிரத்தை யுடையதனை யேநிகர்த்த
மருதமலை மீதிலுற்ற பெருமாளே. (10)

**தனதனதத்த் தனந்ததந்தன தனதானா**

ககனமதெட்டித் தொடுஞ்சிரம்பெறு
பொழில்கள்வளப்பத் தொடும்பிறங்கிய
கவினுறுவெற்புத் தொறும்படர்ந்துயர் சுவையேதோய்
கடலமுதத்தைப் புரைந்தசெந்தமி
ழுதனிலுவப்பைத் தருஞ்சுகம்பெறு
கவிமழையொப்பப் பொழிந்திடும்படி விழைவேனா
னகல்புவியிற்சொப் பனம்புரைந்திடு
நிலையில்வளத்திச் சைகொண்டுழன்றிடு
மசடர்பழிக்கக் குலைந்துசந்தத மெலியாதே
யலைகடலைக்கைக் கடங்கிடுஞ்சிறு
மிளகினையொப்பப் புரிந்தருந்திடு
மவனிணையப்பெற் றுளங்குளிர்ந்திட வருள்வாயே
மகபதிசொர்க்கத் தமைந்திடுந்துணர்
புவியரசற்குக் கொணர்ந்துதந்திடு
மகிமைகொள்பச்சைச் சுகந்துலங்கிய புயவேளே
வழுதியுடற்கட் பொருந்திவஞ்சகர்
மயிலிறகைச்சுட் டிடுஞ்சுரம்பினொர்
வடிவினரைக்குட் பிறங்கியன்றறல் புரிவோனே
மகவுயர்வொப்பற் றிடும்பெருங்கதி
தருமெனநத்திச் சுழன்றிடும்புவி
மயலையறுத்திட் டுளம்பொருந்திய குருநாதா

வருமினனெய்ப்புத் தணிந்திடும்படி
கவரியிரட்டற் புதம்பெறும்பொழின்
மருதவரைக்கட் சிறந்தொர்தண்டணிபெருமாளே.(11)

**தனதான தத்ததனதன தனதானா**

நரிநாயை யொப்பவநுதின முயிராயி ரத்தைவதைசெய்த
நவையார்பி ணத்தைநுகர்தரு தொழிலேசேர்
நரர்போலு ருக்கொணிசிசரர் குறையான தற்றிவுலகினி
னமையார்நி கர்ப்பரெனவுன திருதாளே
விரிவான பத்திகொடுதினம் வழிபாடி யற்றுபெரியவர்
மெலிவோடி யற்றும்வகையினை யறியாதே
விவிதாகு லத்திலுலைவதை யறியாய்கொல் சித்தமிசையொரு
விளையாட லொத்தநினைவுகொ டுளையேயோ
கிரிநேர்க றுத்தவுடல்பெறு கொடியோர்கள் யுத்தகளமிசை
கெடவீர சத்திகடவிய திடவீரா
கிளிநாதன் முற்சொல்கவிபகர் வழுவாத பத்தியடியவர்
கிளையோர்க ளுக்குமதிநல மிடுவோனே
மரிவான முத்திபெறும்வழி யிதுவேயெ னச்சொல்குறியொடென்
மனவால யத்திலுறைதரு குருநாதா
மழைமால்க வித்துநெடுகிய திருமானி கர்த்துநிலைபெறு
மருதாச லத்தின்மருவிய பெருமாளே. (12)

### நூற்பயன்

**நேரிசை வெண்பா**

மருதமலைச் செவ்வேள் வனசமலர்த் தாளிற்
பொருவருசந் தத்ததாற் புகல்பா—வொருபதுட
னோரிரண்டும் போற்றிடுவார்க் குள்ளசித்தி முத்தியென்மெய்ச்
சீரிரண்டு மெய்துந் திறம்.

**மருதமலைச் சந்தப் பதிகம் முற்றிற்று**



உ

# குமரகுரு பதிகம்

## மாம்பழக் கவிச்சிங்க நாவலர்

### மகாகணபதி துதி

**நேரிசை வெண்பா**

சிற்றுணர்வாற் குற்றமென்ன செய்துளே னேனுமவை
முற்றுமினி நீபொறுத்தென் முன்னிற்பாய்-கற்றுயர்ந்தோர்
புந்திதனில் தோன்றிப் பொழியும் கருணைமதத்
தந்திமுகப் பிள்ளாய் சரண்.

**இரட்டையாசிரிய விருத்தம்**

பூங்கதிர் விரிக்குமதி தாங்குசிக ரப்பெரிய
பொன்மலையில் இம்மென விழும்
புனல்நதி கறுத்தநிற இனமணி கொழித்தசெயல்
போற்கவுள் மதத் தருவியின்
பாங்கர்வரி வண்டின்கு ழாங்கள் சுதிகொண்டிசை
பகர்ந்து புர ளும்புகர்முகப்
பஞ்சகர குலநளின செஞ்சரண மவுனகண
பதிசகோ தர வேலவா
மாங்குயிலை வென்றமொழி யோங்குகன கும்பமுலை
மாழையொண் கட்பவள வாய்
மஞ்சரி நெடுங்குழற் குஞ்சரி மகிழ்ந்துநித
மருவு மங்கள நாயகா
தேங்கமழ் தருங்கங்கை வேணியற் கினியபொருள்
செப்புமெஞ் ஞான வடிவே
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே.

பற்பல கதிர்த்திரள் எனப்பரு மணிச்சுடர்
பரப்புமகு டத்தி னழகும்
பத்தர்மகி ழுக்கருணை வைத்தினிது பார்க்கின்ற
பத்மநய னத்தி னழகும்
உற்பன மறைப்பொருளை நற்றமிழ் முனிக்குமுன்
உணர்த்துசெவ் வாயி னழகும்
ஒழுகமிர்த நயகிரண முழுமதியு மனநாணும்
ஓராறு வதன வழகும்
பொற்பருவ தத்தினை நிகர்த்துவளர் பன்னிரு
புயத்தி னழகும் துலங்கிப்
பொங்குவெண் ணீற்றினழ குங்கண் தமியேன்
புகழ்ந்து தொழ வரமுதவுவாய்
சிற்பர சதானந்த நிட்கள நிராலம்ப
திவ்ய சுக பரிபூரணா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 2

வாசமலர் வகைசூடி நேசமுடன் இசைபாடி
வளர்கொங்கை யதனை மூடி
வஞ்சனை நயம்பேசி விஞ்சுகள பம்பூசி
வளையணி கரங்கள் வீசி
ஆசைமுக மதுகோட்டி மோசவரி விழிகாட்டி
அற்பவின் பத்தை ஊட்டி
அடைவாக சுககந்த பொடிதூவி வெகுசொந்தம்
அப்பொழுது செய்யு மந்த
வேசையர்த மயல்போக்கி மாசுடைய பிணிநீக்கி
மேவுநின் கருணை தேக்கி
மெய்யறிவு தந்தென்னை யாளுதற் கிதுநல்ல
வேளையுனை யே நம்பினேன்
தேசுதிகழ்சரவணத டாகத்து தித்தருள்வி
சித்ரப்ர ணவ சொரூபா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 3

நெடியசக் கரவரையும் இடியவெற் புகள்பலவு
நெரியநித் திலவரிசை நீர்
நிறைதிரைக் கடல்சிதற முறைவிடுத் திரவிமதி
நினைவுமற் றுளமருள வே



படிபொறுத் திடுமரவு விடமுயிர்த் துளறியுடல்
பதைபதைத் துழல மரநீள்
பறவையொத் திடவலய முறுதிசைக் கடகரிகள்
பரதவித் தலறி விழமேல்
உடுவுமிற் றுதிரமகிழ் அடியர் விக்கினமொழிய
உயர்முகிற் படலம தெலாம்
உடைபடக் கனபரத நடனமிட் டிகலிவிரை
வொடுசமர்க் களம தனிலே
சிடுசிடுத் திடுமவுணர் படைதிடுக்கிட வுபய
சிறையடித் தினிய புகழ்சேர்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 4

கறுத்திடு விடத்தொடும் அழற்சிகை பரப்பிய
கடைக்கனல் உதித்த தெனவே
கனப்பொரு களத்திடை யுழக்கிமுடு கிப்பரர்
களைச் சதுர் மருப்புகளினால்
வெறுத்தவர் திடுக்கிட உரத்திடு பதத்தினில்
மிதித்துடல் குழைத்து நனிபோர்
விளைத்தடரும் உக்ரதவ ளக்கட களிற்றிறை
விடுத்திடு யுகப்புய லெலாம்
இறுத்த தொறுவக்குல நிரைத்திரள் பயப்பட
இடித்து வருடித்திடு மநாள்
இடக்கொடு முடிப்பரு வதத்தினை மலர்க்கையில்
எடுத்த வலவற்கு மருகா
சிறுத்திடு மனத்துயர் அகற்றிநய சற்குண
திடத்தினை எனக்குதவு வாய்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 5

பரவுமிசை வரிவண்டு விரைகமழு மதுவுண்டு
பயிலுமென் மலர்கொண்டு நின்
பங்கய பதங்களில் அணிந்தினிய செந்தமிழ்
பகர்ந்துனை வலம் புரிந்து
சரவணப வாபரா பரவடிவ மேசரா
சரமான கரு ணாகரா
சதுர்வேத பூரணா முதுஞான காரணா
சமரகே தன வாரணா

அரகர குகாநீதி வரதன்மருகா சோதி
ஆதியே என வோதியே
அனுதினமு மெனதுதுரு மனசையொரு வழிநிறுவி
அடியேன் துதிப் பதற்குத்
தெருளது கொடுத்துவெம் பருவரல் கெடுத்துளம்
தேற்றிவினை மாற்றி யாள்வாய்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 6

மாறாத பேராசை வேரோடி நீள்பாச
வளமதில் முளைத் தெழுந்து
வளர்பெண்டு பிள்ளைகளெ னுங்கவர் விரித்தறிவு
வண்ட ழைகளைச் சொரிந்து
வேறான சுற்றமாம் பறவைக் குழாங்கட்கு
மேவு மிடமாகி நின்று
வெய்ய காமதிமலர் விரவியுறு பாவநறை
வீசிமத மாங்கனி பழுத்து
ஆறாத கவலைப்ர சண்டவெங் காற்றினால்
அலையுமிவ் வாழ்வா மர
மதுகூற் றெனுந்தச்ச னார்கைப் படாமுனுன
தடியிணை கொடுத்தென்னை யாள்
சேறாடு குங்குமக் களபமணி பூண்முலைத்
தெய்வகுஞ்சரி மணாளா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 7

அறனது புரிந்தென்ன மறைமொழி தெரிந்தென்ன
அணிபுகழ் விரிந்தென்னநூ
றாகமம் கற்றென்ன யோகமும் பெற்றென்ன
அரியபிணி யற்றென்ன சீர்
உறுதவ முடித்தென்ன முறைபல படித்தென்ன
உனதருளை யடையாத வர்க்
குறுதியிலை யிம்மையினு மறுமையினு மன்னுபலன்
ஒன்றுமிலை யாதலா லென்
வறுமைகுற்றம் தீர்த்து நிறையருட் கண்பார்த்து
மனசைத் திருத்தி நல்ல
வழிகாட்டி யென்னைநீ யாளுதற் கிதுசமய
மவுன சரவண பவகுகா



திறலவுணர் படையன்று முறியமுனி வொடுசென்று
செருவினில் முடுக்கி வென்று
செயமிகுத் துலவுதிரு மயிலவயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 8

என்னென்ன விதமாக முன்னின்று சொல்லிமுறை
யிட்டபோ தினு மேழைமேல்
எள்ளளவு கிருபையு மிலாததே துன்மனம்
இரும்போ திரண்ட கல்லோ
அன்னையே சிறுமதலை தன்முகம் பாராமல்
அகலத் துரத்தி விட்டால்
ஆதரிப்பவர்க ளெவர் பூதலத் தினிலினிய
அமுதகவி மாலை சூட்டி
உன்னையே தொழுமடிமை தன்னை நீ நழுவவிடில்
உன்னை யல்லாமல் வேறோர்
உதவியுண் டோபல உணர்த்தலென் னேயெனை
உவந்தாள்வ துனது கடனால்
தென்னர்கோன் கன்மச்சுரங் கூனிரண்டையும்
தீர்த்தருள்செய் கார்த்தி கேயா
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 9

ஆரணனு மாகி நெடுநாரணனு மாகியுயர்
அமரர் புகழ் அரனுமாகி
ஆதியாய் நீதியாய்ப் பாதியாய் ஒன்றாய்
அனாதிப் பரஞ் சோதியாய்த்
தாரணி சலங்கனல கோரவளி விண்ணெனச்
சாற்றுமைம் பூதங் களாய்ச்
சத்தியாய்ச் சித்தியாய் நித்தியானந்த வெளி
தானாகி மோன மாகிக்
காரணக் கருவாகி யருவாகி யுருவாய்க்
கனிந்தபே ரருளு.மாகிக்
கதியாகி விதியாகி மதியாகி யெங்குங்
கலந்த வேதாந்த வாழ்வே
சீரணி யுலாசபரி பூரண மனோகரா
சிறியேனை அடிமை கொள்வாய்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 10

சாதிபல பேதமுறை யாகிவெகு தூரம் சமீபமாய்
அணுவி லணு வாய்த்
தற்பரமு மாகி வளருற்பனமு மாகியறு
சமயங் களுக்கு மெட்டா
நாதமயமாகி யழியாத பேரின்ப சுக
ஞான ப்ர காசமாகி
நாலான வேதத்தின் மேலான பொருளாகி
நட்பி னொடு பகையுமாகி
மாதவமு மாகிமனு நீதிபல னாகிமும்
மலபாச விருள கற்ற
வருமணி விளக்காகி விரிகிரண மதியிரவி
வடிவாகி நின்ற முதலே
சீதமல ரனையநின் பாதநித மறவாத
சிறியேனை அடிமை கொள்வாய்
செயமிகுத் துலவுதிரு மயில்வயப் பரியில்வரு
சிவகிரிக் குமர குருவே. 11

குமரகுரு பதிகம் முற்றிற்று



## இரத்தினகிரிப் பாலமுருகன்

# உயிர்முதற் போற்றிப் பதிகம்

## வி. அண்ணாமலை முதலியார்

அண்டங்கள் அனைத்துமாய் நின்றாய் போற்றி
ஆறுருவம் ஓருருவம் ஆனாய் போற்றி
எண்திசையும் ஏத்துகின்ற இளையாய் போற்றி
ஏரகத்தே உறைகின்ற எம்மான் போற்றி
பண்களிலே இசைக்கின்ற பண்பா போற்றி
பாவலர்தம் நெஞ்சிலுறு பாலா போற்றி
நண்ணரிய இரத்னகிரி நாதா போற்றி
நாடுவினை நசித்திடுவாய் போற்றி போற்றி. 1

ஆனந்த மூர்த்தியாம் அமுதே போற்றி
அணையாரை ஒறுக்குமழற் பிழம்பே போற்றி
தானவனாம் சூரனையும் தடிந்தாய் போற்றி
தாரணியில் உயிர்க்கெல்லாம் தாயே போற்றி
கானவர்தம் கன்னிதனை உகந்தாய் போற்றி
கார்நிறத்துக் கண்டனருள் கந்தா போற்றி
தேனிசைக்கும் இரத்னகிரிச் சேயே போற்றி
தேவாதி தேவனே போற்றி போற்றி. 2

இந்திரனின் இடும்பைகளைந் திட்டாய் போற்றி
இந்திரியச் செயல்தன்னை ஈர்ப்பாய் போற்றி
சந்ததமும் நினைப்பவரைச் சார்வாய் போற்றி
சச்சிதா னந்தநற் பொருளே போற்றி
பந்தவினை பற்றறுக்கும் பரனே போற்றி
பதமலரை நெஞ்சகத்தே பதிப்பாய் போற்றி
செந்தமிழ்சேர் இரத்னகிரிச் செல்வா போற்றி
சேயானே செவ்வேளே போற்றி போற்றி. 3

ஈசனருட் கண்ணுதித்த இறைவா போற்றி
என்னுளத்தின் இருளோட்டும் சுடரே போற்றி
பாசத்தைப் பறிக்கின்ற பதியே போற்றி
பாவியேன் உள்ளத்தே பயில்வாய் போற்றி
நேசத்தால் உன்றாளை நேர்வாய் போற்றி
நெஞ்சமதில் நெகிழ்கின்ற நினைவே போற்றி

வாசமலர் சூழிரத்ன கிரியாய் போற்றி
மாசறுக்கும் மாமயிலாய் போற்றி போற்றி. 4

உள்குவார் உள்ளமதில் உறைவாய் போற்றி
உள்காதார் உணர்வினுக்கே எட்டாய் போற்றி
கள்ளமனத் தூறதனைக் களைவாய் போற்றி
காரிருளாம் ஆணவத்தைக் காய்வாய் போற்றி
புள்ளேறும் திருமாலின் மருகா போற்றி
புவனங்கள் போற்றுகின்ற புனிதா போற்றி
வள்ளிதனை உகந்தேற்ற வேலா போற்றி
வளர்இரத்ன கிரியானே போற்றி போற்றி. 5

ஊர்பேரும் குணங்குறிகள் அற்றாய் போற்றி
உலகெங்கும் உணர்ந்தோதற் கரியாய் போற்றி
கார்நிகர்த்த கருணைபொழி கந்தா போற்றி
கடையவனை அஞ்சலெனக் காப்பாய் போற்றி
பேராயி ரம்பெறுமெம் பெம்மான் போற்றி
பேதையேன் பிறப்பறுக்கும் பிரானே போற்றி
கார்பொழியும் இரத்னகிரிக் கடம்பா போற்றி
காரிருளைக் கான்றிடுவாய் போற்றி போற்றி.6

எஞ்சிவனார்க் குணர்த்துமே ரகத்தாய் போற்றி
இகல்மிகுசூர் தடிந்தசெந் தூரா போற்றி
பஞ்சடியாள் ஏற்றபரங் குன்றா போற்றி
பழம்நாடிச் செல்பழனிப் பதியாய் போற்றி
மஞ்சுசூழ் பழமுதிர்ப் பொழிலாய் போற்றி
மாகமார் திருத்தணிகை மலையாய் போற்றி
நெஞ்சுதவழ் இரத்னகிரி நிமலா போற்றி
நேடிவந்தோர்க் கருள்குகனே போற்றி போற்றி.7

ஏதிலனை எதிர்த்தவொரு முகனே போற்றி
எழில்மாதர் மணந்தவொரு முகத்தாய் போற்றி
நாதனுக்கே உணர்த்துமொரு முகனே போற்றி
நற்றொண்டர் நயக்குமொரு முகத்தாய் போற்றி
வேதாக மம்செய்த முகனே போற்றி
வெவ்வினையை விலக்குமொரு முகத்தாய் போற்றி
வேதமுதற் காணரிய வெற்பா போற்றி
வேண்டினேன் நின்றாளைப் போற்றி போற்றி.8



ஐந்துமறைத் தாறுமுகம் அளித்தாய் போற்றி
அமர்வென்ற ஆறிரண்டு தோளாய் போற்றி
செந்திருவைச் சேர்ந்தவிரு கரத்தாய் போற்றி
செய்யவேல் தாங்குமொரு கரத்தாய் போற்றி
மைந்துடைய மார்பிலொரு கரத்தாய் போற்றி
வந்தவர்க்கு வழங்குமொரு கரத்தாய் போற்றி
பந்தமதைப் பற்றறுக்கும் கிரியாய் போற்றி
பாவியென்றன் மனத்துறைவாய் போற்றி போற்றி.9

ஒண்மணியங் குசம்சேரும் கரத்தாய் போற்றி
ஒண்வாமத் துற்றவொரு கரத்தாய் போற்றி
வண்ணமிகு குறங்கிலொரு கரத்தாய் போற்றி
வாளொடுகே டகஞ்சேரும் கரத்தாய் போற்றி
பண்பினரைப் பரிந்தெடுக்கும் கரத்தாய் போற்றி
பார்வதியும் பரிந்தணைக்க வந்தாய் போற்றி
நண்ணரிய இரத்னகிரி நாதா போற்றி
நாடுமெனை நண்ணிடுவாய் போற்றி போற்றி.10

ஓங்காரத் துள்ளிருக்கும் ஒளியே போற்றி
உயிர்களின்பால் உள்ளுணர்த்தும் உணர்வே போற்றி
பாங்கினொடு பொருள்களெல்லாம் ஆனாய் போற்றி
பாவகத்தால் உடனாய பரனே போற்றி
நீங்காதென் உள்ளத்தே நின்றாய் போற்றி
நின்மலனே குறைவில்லா நிறைவே போற்றி
தீங்கறுக்கும் இரத்னகிரிச் சேயே போற்றி
தீந்தமிழ்நற் கடவுளே போற்றி போற்றி. 11

ஔவைதனக் குணர்த்திட்ட அரசே போற்றி
அருணகிரித் திருப்புகழில் அமர்ந்தாய் போற்றி
தெவ்வர்களைச் செறுத்திட்ட தேவே போற்றி
தீந்தமிழ்நற் கீரனருள் செய்தாய் போற்றி
எவ்வெவரும் ஏத்துகின்ற எழிலாய் போற்றி
எழிற்குரு பரன்பாட வைத்தாய் போற்றி
தவ்வலிலா அருள்ரத்ன கிரியாய் போற்றி
தமியேனை ஆட்கொள்வாய் போற்றி போற்றி.12

இரத்தினகிரிப் பாலமுருகன் பதிகம் முற்றிற்று

உ

# திருமலை முருகன் பள்ளு

## பெரியவன் கவிராயர்

### காப்பு

#### கலித்துறை

குடவா ரணச்செங்கை யம்மான் மருகன் குகன்குமரன்
திடவா ரணக்கொடிச் செவ்வேள் திருமலைச் சேவகன்சீர்
படவா ரணம்பகர் வாயானைப் பாடிய பள்ளிசைக்கே
கடவா ரணமுகக் கட்டிவி நாயகன் காப்பென்றுமே.

## கடவுள் வணக்கம்

### விநாயகர்

#### சிந்து

பார்தந்த பன்னிரு கரப்பிரமன்
போர்தந்த கன்னல்விற் புயச்சிரமன்
பரித்தருள் ஆரணச் சரவணத்தான்
திருச்சர வணத்தான்
பேர்தந்தெனை யினங்கரு மலையான்
பிணைதந்தபெண் புணர்திரு மலையான்
பீடுயர் தமிழ்ப்பள் ளிசைச்சிறியேன்
பாடவந் துதவும்:
சீர்தந்திலர் முனம்வந்து தோன்றான்
ஏர்தந்திடும் நயனங்கள் மூன்றான்
செவிசேர் சுளகெனப் படைத்தான்
குடவயி றழகெனப் புடைத்தான்
வார்தந்ததோர் தவளக்கொம் புடையான்
வலபையென்றொரு பவளக்கொம் புடையான்
மதத்தாரைகள் பொழிகவுட் கரிமுகன்
பதத்தா மரையே. 1



#### குற்றால நாதர்

ஆவினன்குடி திருப்பரங் கிரியும்என்
நாவினுங்குடி யிருப்பென இருப்பவன்
அலையிட்ட துரும்பாய்மெலி அமரரை
நிலையிட்ட பெருமான்
நாவலன்சிர புரக்கவு ணியன்குல
காவலன்புகழ் குறும்பல வுறைவோன்
நம்மை யிங்காண் டருள்குழல் வாய்மொழி
யம்மை பங்காளன்
கோவலன்படு கேவலந் தவிர்ந்திடுங்
கோமலரணி பூமல ரெனுந்தமிழ்க்
கும்ப சம்பவன் பணிதிரி கூடாசல
நம்பன் அம்பதமே
தேவி யஞ்சிட வேங்கைய னாகிய
காவி யஞ்சுனைக் காங்கெயன் திருமலைச்
செவ்வேளிசை பள்ளிசை காத்திடும்
எவ்வேளை யுமே. 2

#### திருமால் முதலியோர்

கூந்தலம்பிடி காந்தனைக் கள்வனைக்
குருநாதனை யருமா தவர்க்கொரு
கோனாகிய நிதியைவிண் ணவர்பணி
சேனா பதியைச்
சேந்தனை வள்ளி காந்தனை மேனைக்குத்
திருப்பேரனைத் திருமலை வீரனைத்
திசைத்த லந்தனில் வழுத்திடு மினியபள்
ளிசைத்தமிழ் புரப்பார்
பாந்தளிற்றுயில் நாதனும் அவனுந்திப்
பூந்தடத்துறை வேதனும் அவன்அனை
பாரியுத்தமி காளியும் வாணியும்
வீரபத் திரனும்
காந்தளங் கரத்தெழு நாரியரும் மின்
னேந்திய பன்னிரு சூரியரும் மைக்
கடல்மீளியும் சாத்தனுங் கற்பகக்
கா வாளியுமே. 3

### அவையடக்கம்

#### சந்தவிருத்தம்

அயிலேறிய கரத்தனை எனையவன்
அடியானென வளர்த்திடும் ஒருவனை
அழகாலுயர் குறக்கொடி கணவனை
— அமர்மீதே

மயிலேறிய சமர்த்தனை அயனொடு
சிவனார்பணி குருக்களை உயர்திரு
மலைவேலனை வழுத்துபள் ளிசையெனும்
— முறையாலே

வியனோசைகள் எழுத்தசை அடிதொடை
தடுமாறினும் வழுப்பல புணரினும்
வினைவேறுற இலக்கணம் வழுவினும்
— அறியேன்நான்

இயலோடிசை படித்திடு புலவர்கள்
வழுவாமென மறுக்கிலர் பதரொடும்
இனிதாகநெல் விலைப்படு மெனும்வகை
— அறிவாரே. 4

## நூல்

### மூத்த பள்ளி வரவு

#### கலிப்பா

சித்தசனன் மைத்துனவேள் தெய்வவள்ளி காதலனாங்
கத்தனெனை யாண்டருளுங் காவித் திருமலையான்
கொத்தடிமைப் பள்ளர் குலவிளக்காங் கும்பமுலை
முத்தநகைச் செங்கனிவாய் மூத்தபள்ளி தோன்றினளே. 5

#### சிந்து

குழல்மணங் கமழ்நறுமலர்த் தோப்போ
பளப ளென்றபித் தளைவளைக் காப்போ
குருக்க ணத்திறுமாப்போ முறுவல்செய்
முருக்கிதழ்ச் சேப்போ



மழலையம் பசுங்கிளிமொழிப் பேச்சோ
அழகொழுகிய மஞ்சணைப் பூச்சோ
வண்ணக் கொங்கைகண் டிடைகுடி போச்சோ
என்னக்கை வீச்சோ
பழியெதிர் கொண்ட பொங்க லாய்ப்போ
இளையபள் ளியைப் பார்க்குங்க லாய்ப்போ
பள்ளத்தி யிவ ளல்லவே இளைஞர்கள்
உள்ளத்தி எனவே
முழவெனும்புயக் குழகன்நந் திருமலை
முத்தையன் பண்ணைக் குடும்பனுக் கன்புள்ள
முதற்குடியாள் பண்பையிற் பள்ளத்தி
முனந்தோன் றினளே. 6

### இளைய பள்ளி வரவு

#### கலிப்பா

வள்ளிகண வன்காவி வாவித் திருமலைவாழ்
அள்ளிலைவேல் எந்தைபண்ணைக் கன்பாங் குடும்பனுக்கே
தெள்ளியமோ கங்கொடுக்குந் தென்னா ரியநாட்டுப்
பள்ளிஇளை யாளழகைப் பார்த்தாற் பசிபோமே. 7

#### சிந்து

தொண்டிக்கள் ளுண்ட சண்டையுஞ் செருக்கும்
கெண்டைக் கண்துயில் கொண்டையுஞ் சொருக்கும்
துலுக்குடன் முலை குலுக்கிய நடையும்
தலைப்பணி யுடையும்
தண்டிப் பெண்களுக் கிவள்துரைப் பெண்ணெனும்
கன்றிக் கென்றிடும் மொழியிசைப் பண்ணெனும்
சமத்தி கட்கடைச் சிமிட்டுமற் றெவரையும்
அட்டிடும் மட்டும்
கண்டச் சங்கிலி வடத்தொடு குடத்தனம்
மிண்டிக் கொண்டிசைந் தசைவது மதர்த்தெழு
கதக்களிற் றினைச்செழுங் கமுகிடைச் சேர்த்திடுங்
காட்சியும் இலங்க
எண்டிக் கும்பணி திருமலைக் காங்கெயன்
பண்பைப் பண்ணைக்கு வாய்த்திடும் பள்ளனுக்
கினிய நன்னகர்ப் பள்ளத்தியெனும்
இளையாள் தோன்றினளே. 8

### பள்ளன் வரவு

#### எண்சீர் ஆசிரிய விருத்தம்

முருகவிழுங் குழல்மடவார் ஆறு பேர்கள்
முலைத்தலையிற் பீரொழுகிச் சுரக்கும் பாலைப்
பருகுதிரு மலைக்குமர நாதன் பண்ணைப்
பண்ணைவளம் பயிரேற்றித் தொழும்பு செய்யும்
பெருகுதன மூத்தபள்ளி இளையாள் என்னும்
பிடியானை யிரண்டும்இரு மருங்கு சூழத்
திருகுசின மதயானை போலு லாவிச்
செய்யதிரு மலைக்குடும்பன் தோன்றி னானே. 9

#### சிந்து

பச்சைநிசார் தொட்டுக் கருங்
கச்சைகட்டிப் பின்னே நாலப்
படுக்குங் கொடுக்கும் விட்டுப்
பக்கந் தன்னிலே
உச்சிதமாய் வாங்கு சேர்த்துக்
குச்சுவிட்ட பொன்னுரு மால்
ஒய்யாரமாய்க் கட்டித்தடி
கையாற் சுழற்றி
மிச்சமாய்க் கொட்டுமண் வெட்டி
வச்ரமணித் தோளில் வைத்து
வீசுகெந்தப் பொடி பூசி
மீசை முறுக்கிச்
செச்சையணி ஆறு முகச்
சேவகன்பேர் பெற்ற வெற்றித்
திருமலைக் குடும்பன் வந்து
தோன்றி னானே. 10

### பள்ளன் தன் பெருமை கூறுதல்

காவி யொன்று மூல மின்றி
வாவி யினுட் கண்டு தொழார்
கையை மண்வெட் டிக்குப் போடுங்
கையாய்ப் பிடிப்பேன்
ஆவ லாய்முத் தையன் கோயில்
மேவி வலம் வாரார் காலை



அட்ட காச மாய்ஏர்க் காலாய்க்
கட்டி யுழுவேன்
நாவி னாற்பன் னிரு செங்கைக்
கோவை வழுத் தாத பேர்கள்
நாக்கை யுழுங் கொண்டிக் கொழு
ஆக்கிக் கொள்ளுவேன்
சேவகன்செங் காவி மலைத்
தேவநா யகன்பேர் பெற்ற
திடம்பெருகு திருமலைக்
குடும்பனும் நானே. 11

### பள்ளியர் குடிப்பிறப்புக் கூறுதல்

#### கலிப்பா

கடிக்கமலத் தாட்டுணையான் காவிவெற்பை வாழ்த்திமதன்
முடிக்கரசாய்த் தோன்றுகின்ற மூத்தாள் இளையாளும்
அடிக்கனங்கொண் டோங்குமுலை யாரவெற்பாற் சின்னஇடைக்
கொடிக்கலக்கண் செய்வார் குடிப்பிறப்புக் கூறுவரே. 12

### மூத்த பள்ளி

#### சிந்து

மன்னுமூ விரண்டுமுகப்
பன்னிரண்டுகைக் குமரன்
வடிவுடைய திருமலையிற்
குடிபுகுந்த நாள்
பன்னிடுமுக் காலப்பூசை
இன்னமும் நடக்க வைத்த
பண்ணைப் பள்ளர் கோத்திரத்திற்
பெண்ணடிமை நான்
கொன்னுனைவேற் கண்ணி வள்ளி
யம்மையை முனம் வளர்த்த
குறவர் எங்கள் பாலர் காது
குத்தி வளர்ப்பார்
செந்நெல் வயல் சூழும் பண்பை
நன்னகர் அறம் வளர்த்த
தேவி வட வாரி நாட்டுப்
பள்ளியும் நானே. 13

### இளைய பள்ளி

முந்துபுடார்ச் சுன புரத்
தெந்தை குற்றாலர் தருவோர்
  மூன்றெனுங் குறும் பலாவுந்
  தோன்றிய நாளிற்
பைந்தமிழ் நன்னகர் தன்னிற்
சொந்தமாக வைத்த பண்ணைப்
  பள்ளர் எங்கள் தாய்வழியும்
  தந்தை வழியும்
இந்தத்திரு மலைப் பள்ளன்
வந்தென்னைச் சரடு செய்தே
  இரண்டுடல் உயிரொன் றென்றான்
  இன்றை வரைக்கும்
சிந்தனையில் லாமற் பண்பைக்
கந்தர் பண்ணைச் சேரிவாழுஞ்
  செய்யதென் னாரி நாட்டுப்
  பள்ளியும் நானே. 14

### நாட்டு வளம்

#### கலிப்பா

துன்னுமலை நாடுமந்தச் சோணாடுங் கீழ்படவே
பன்னுதமி ழாலுயர்ந்த பாண்டிவள நன்னாட்டில்
நன்னருறுந் தென்னாரி நாடும்வட வாரிநன்னா(டு)
என்னும் இருநாட் டினியவளஞ் சொல்வேனே. 15

### மூத்த பள்ளி

#### சிந்து

மலரி லாரளி இந்துளம் பாடும்
  மடையி டங்கணி வந்துளம் ஆடும்
சலச வாவியிற் செங்கயல் பாயும்
  தரள மீன்றவெண் சங்கயல் மேயும்
குலமின் னார்மழை பெய்யெனப் பெய்யும்
  குடங்கை ஏற்பவர் செய்யெனச் செய்யும்
புலவர் போற்றுந் திருமலைச் சேவகன்
  புகழ்வட வாரி நாடெங்கள் நாடே. 16



### இளைய பள்ளி

வளருங் காவில் முகில்தொகை ஏறும்-பொன்
  மாட மெங்கும் அகிற்புகை நாறும்
குளிரும் மஞ்ஞையுங் கொண்டலுங் காக்கும்-செங்
  கோல்முறை மன்னர் மண்டலங் காக்கும்
இளமின் னார்பொன் னரங்கில் நடிக்கும்-முத்
  தேந்தி வாவித் தரங்கம் வெடிக்கும்
அளியுலாங் கொன்றை சூடுங் குற்றாலத்-தென்
  ஐயன்தென் னாரி நாடெங்கள் நாடே. 17

### நாட்டு வளம்

### மூத்த பள்ளி

களம ராலை கொழித்துத் தறிக்கும்
  கழைமுத் தெங்கும் வெடித்துத் தெறிக்கும்
விளரி நாதம் பிரமரம் பாடும்-கை
  வில்லின் கல்விச் சிரமரம் பாடும்
வளர்கு மாரர்கள் கல்வி படிக்கும்
  மனையில் ஆரணச் செல்வி நடிக்கும்
அளவி லாண்மைத் திருமலை முத்தையன்
  அருள்வட வாரி நாடெங்கள் நாடே. 18

### இளைய பள்ளி

அமுதம் போலமின் னார்வள்ளை பாடும்
  அதுகண் டேகுயிற் பிள்ளைகள் கோடும்
குமுத மாமுகை பாம்பென ஆடும்
  குருகும் பேடுந்தண் சேம்பினி லோடும்
கமநி லாநித் திலங்கைக்குக் காட்டும்
  கதிர்நி லாவிண் ணெலாம்முக்கிக் காட்டும்
உமைம ணாளன்குற் றாலநன் னாயகன்
  ஓங்குந்தென் னாரி·நாடெங்கள் நாடே. 19

### குயில்

#### கலிப்பா

கயிலைமலை யானீன்ற காவிமலை யான்அயிலை
மயிலையுடை யானடிமை வாய்த்தபண்ணைப் பள்ளியர்கள்

குயிலைமனங் கொண்டாடிக் கூவுகநீ என்றுசொல்லும்
பயிலைமதன் கேட்டயர்ந்தாற் பள்ளருக்கங்
கென்னாமே. 20

## குயில்

### குயிற் சிந்து

எம்மலையும் பரவுதிரி கூடமலை மலயமுனி
இறைஞ்சவரு திருமலை இரண்டும்-குயிலே
கைம்மலையன் றுரித்தான்பொன் மலைவெள்ளி
மலையெனஎக்
காலமுஞ்சீர் பெற்றிருக்கக் கூவாய் குயிலே. 21

பண்பைவளம் பதியுமந்தப் பதிமேவு பல்குடியும்
பரிசனமும் அரசனமும் பாரும்-குயிலே
அன்புபெறு நகரீசர் சன்னிதியும் திருமலைமுத்
தையனும்நன் றாயிருக்கக் கூவாய் குயிலே. 22

மான்மேலை நாளீன்ற வள்ளிநா யகிகணவன்
மன்னுதிரு மலையான் சன்னிதியும்-குயிலே
மேன்மேலுந் திருப்பணியும் திருப்பணிசெய் அடியவரும்
மிகவூழி வாழியெனக் கூவாய் குயிலே. 23

கோதைகுழல் வாய்மொழியுங் குறும்பலவும்
பெரும்பலனைக்
கொடுத்தெம்மைக் காத்தகுற் றால
நாதர்திருச் சன்னிதியும் வடவருவி கொழிக்கும்சித்ரா
நதித்துறையும் வாழவே கூவாய் குயிலே. 24

முனிவர்பணி செழுங்காவித் திருமலைமுத் தையன்மகிழ்
முகிழ்த்தமிகு வளந்தழைக்கக் கூவாய் குயிலே
இனியதிறல் அடியவரும் அடியவர்கள் செயுந்தொழிலும்
இயல்புடன்சீ ருந்தழைக்கக் கூவாய் குயிலே. 25

நீதிபரன் சின்னணைஞ்ச பெருமாளுச் சிதவானும்
நீணிதியுங் கருவூலப் பொருளும்-குயிலே
கோதிலாச் செங்கோலும் ஆதினமுஞ் சந்தானக்
குமரர்களுந் தழைக்கவே கூவாய் குயிலே. 26



### பள்ளியர் கும்மி யடித்தல்

திங்கள்மும் மாரிபெய்து வன்பிணிகள் அணுகாமல்
தென்பாண்டி நாட்டிலுள்ள சனமும்-குயிலே
அங்கண்நல் லடியவரும் கவிஞோரும் வேதியரும்
அறநெறியுந் தழைக்கவே கூவாய் குயிலே. 27

### பள்ளியர் கும்மி யடித்தல்

#### கலிப்பா

உளறியடிக் குங்கேழ லொன்றைவதைத் தரிந்துமஞ்சட்
கிளறி யடிக்கடியே கிண்டிவெந்த கறியுடனே
அளறி யடித் தேவெறிகொள் ளரக்கையுண்ட
பள்ளியர்வாய்
குளறியடிப் பார்கூடிக் கும்மி யடிப்பாரே. 28

#### கும்மி

கும்மியடி பெண்ணே கும்மியடி-இரு
கொங்கைகளுங் காப்புங் குலுங்கத்
தெம்முனை வேலனைக் கொண் டாடிச்
சேர்ந்து கும்மி யடியுங்கடி. 29

பள்ளியரே வட்டம் போடுங்கடி-ஐயன்
பன்னிரு தோள்வெற்றி பாடுங்கடி
கள்ளை எடுத்துக் குடியுங்கடி - கூடிக்
கட்டாய்க் கும்மி யடியுங்கடி. 30

தெய்வக் குறும்பலா விருப்போருந்
தேவி குழல்மொழி பங்காளர்
சைவத் தலைவரைச் சித்ரசபைச்
சங்கர லிங்கத்தை வாழ்த்திக் கொண்டே. 31

வானர சாள்இந்த்ரன் தேவிக்குத்-திரு
மங்கிலி யப்பிச்சை யிட்டானைத்
தானவர்க் காய்அயில் தொட்டானைச்
சண்முக மூர்த்தியை வாழ்த்திக் கொண்டே. 32

### பள்ளியர் கும்மி யடித்தல்

சிறுக்கி அழகி யுதட்டுக்குள்ளே
சிரிக்கும் வெறியிடு செம்மிமகன்

கறுப்ப னவளை யணைத்துதட்டைக்
கவ்விச் சுழன்று விழுவதுபார். 33

வாகாக் கொண்டை முடியுங்கடி-முலை
மாராப்பைக் கட்டி யிறுக்குங்கடி
ஆகா வழிம்புத் திருமலைப் பள்ளன்
அண்டாமற் கற்கொண் டெறியுங்கடி. 34

காரானை பாக னென்னுங் காள
கண்டே சுரத்து மணிகண்டனும்
ஓரானை யூர்தி மருமகனும்
உற்ற துணைநமக் குண்டு பெண்காள். 35

குறிப்புட னேநக ரீசரையும்
கோதை அறம்வளர் தேவியையும்
சிறப்புட னேநீர் எல்லோரும்
சிந்தனையாக் கும்மி பாடுங்கடி. 36

மாது நரபெலி கொண்டமகா
மாயி மலரடி சென்னிவைத்துச்
சாதக மாகவே எல்லோருந்
தழைக்கக் கும்மி யடியுங்கடி. 37

செங்காவி வாவி புடைசூழும்
செய்ய திருமலை வேலவற்கு
மங்காத செல்வமெப் போதுந் தழைத்திட
வாழ்த்திக் கும்மி யடியுங்கடி. 38

வண்ண வாவித்திரு மாமலையில்
வாழ்கும ரேசர் திருவருளால்
பண்ணையுட னேருஞ் சீருந் தழைத்திடப்
பாடிக் கும்மி யடியுங்கடி. 39

## தெய்வம் போற்றுதல்

### கலிப்பா

தண்ணாருங் காவிச் சயிலச் சடானனன்வேள்
கண்ணா றிரண்டுடைய கந்தர்பண்ணைப் பள்ளரெல்லாம்
விண்ணார் மழைவரவு வேண்டியிரு கைகூப்பி
உண்ணா விரதமிருந் துற்றதெய்வம் போற்றினரே. 40



### சிந்து

வரந்தரு வீரே - மழைபெய்ய
வரந்தரு வீரே - சதவித
மகநா யகரே - மழைபெய்ய
வரந்தரு வீரே
கரந்தசெஞ் சடையார் - அருள்திருக்
காவிவெற் புடையார் - பண்ணைஎக்
காலமுந் தழைக்க - மழைபெய்யக்
கருணை செய்வீரே. 41

சிவபூ சுரரே - வணங்கிய
நகரீ சுரரே - உலகுய்யத்
திறம்வளர்த் தவளே - பண்பையில்
அறம் வளர்த் தவளே
புவனா பதியே - நன்னகர்ச்
சிவனார் நிதியே - அருட்க்ருபை
பொழியாய் விழியே - அயிலெனுங்
குழல்வாய் மொழியே. 42

பணியுண்ட கோவே - துயில்கூர்
இலைகொண்ட தேவே - பரவும்உம்
பருக்கதி பதியே - திருமலைத்
திருக்கண பதியே
அணிகொண்டு போரே - செயுந்திறல்
மணிகண்ட னாரே - மொழிக்கனி
யலைக்கன்னல் நேரே - சொலுந்திரு
மலைக்கன்னி மாரே. 43

ஆலிக்குங் கூளிப் - பெரும்படைச்
சூலக்கங் காளி - கொடுங்கொலை
யடும்பகைக் கடும்போர் - செயுமவர்க்
கிடும்புசெய் இடும்பா
தாலிக்கு வேலி - கொடுத்துவிண்
பாலிக்குங் காவித் - திருமலைச்
சண்முக னாரே - பனிமலைப்
பெண்மக னாரே. 44

கனிதவ னாரே - பெறவல்ல
கரியவ னாரே - துணைசெய்யக்

கண்டது நீயே - நரபெலி
கொண்டருள் தாயே
தனுமகத் துவரே - கல்விமுற்
றெனுமகத் தியரே - விறலுடைத்
தைரிய னாரே - சூலக்கை
வைரவ னாரே. 45

கண்ட சொப்பனமோ - விண்மொழி
விண்ட வுற்பனமோ - கறுப்பன்முன்
கடைந்தசெப் பெனவே - தேங்காய்
உடைந்த சித் திரமோ
தண்டினர் மிண்டன் - மதப்புலி
சங்கிலி வீரன் - பலிகொள்ளும்
சமயப் பண் பறிந்தே - மதுகுமு
குமெனப் பொங் கியதோ. 46

தொண்டிக்கள் ளரக்கும் - பனங்கள்ளும்
பண்டியிற் பெரிய - குடந்தனில்
தொடர்பெற அடைத்தே - கறிசோ(று)
அடைவுடன் படைத்தே
எண்டலம் புரக்கும் - நரபெலி
கொண்டவள் முனமே - குரவையிட்(டு)
இங்கித மாக - நாமிடும்
பொங்கல் பொங் கியதோ. 47

கொண்டைச் செஞ்சாவல் - குறுமறி
கண்டித்துப் பலியும் - கொடுத்தபட்
கூட்டமுங் கடுத்தே - உமைகளி
யாட்டமுங் கொடுத்தே
மண்டலந் தனிலே - சோபன
நந்திரு மலையான் - அருளால்
வயமுறப் பெய்யும் - மழையினிப்
பயமிலை நமக்கே. 48

## மழைக் குறி

### கலிப்பா

வந்தித்தா டிப்பாடி மாசில்லாப் பூசையிட்டுச்
சிந்தித்தால் ஆருக்குந் தெய்வ மிரங்காதோ



பந்தித்தா ளோங்குபண்ணைப் பள்ளர்கருத் தின்படியே
சந்தித்தா காயமழை தன்குறியுங் காட்டியதே. 49

### சிந்து

கொங்கு மின்னல் ஈழ மின்னல்
எங்கும் மின்னுது - கருங்
குயிலொளிக்க மஞ்சள்நிற
வெயிலெ றிக்குது
கங்கந் திரண் டேயொலிக்கு
தங்கண் விசும்பில் - வரக்
கண்டோம் வெள்ளைப் பூச்சியுங்
கும்பீடு நாச்சியும்
மங்களமாய்த் திங்கள் தோறும்
எங்கும்மும் மாரி - பெய்ய
வட்டமாக மொட்டைச் சித்தா
வெட்டுது புல்லை
எங்கள்திரு மலைக்கந்தர்
பொங்கரு ளினால் - பொய்யா
தின்று நாளைப் பெய்யும் மழை
நன்று பள்ளரே. 50

## பள்ளர் திரண்டு வருதல்

மாரி பெய்யுங் கால்அணைகள்
ஏரி பதனஞ் - செய்ய
வட்டக் கூடை வெட்டரிவாள்
கொட்டுங் கைக் கொண்டே
சீரியநம் பண்ணைக் காரன்
காரியக் காரன் - மெச்சச்
சிங்கனுஞ் சங்கனும் புங்க
னுங்க லிங்க னும்
வீரனுங் குறுக் கிட்டானும்
வெங்கல வனுந் - திரு
வெட்டியுங் கொட்டியுங் கட்டை
வெள்ளைக்கண்ண னுஞ்
சூரனுந் தம்பிக் கில்லானும்
மொண்ணை மாடனும் - நெட்டைச்
சூரியனு மாகக் கூடி
வாரும் பள்ள ரே. 51

### கலிப்பா

இம்மலையே கயிலைமலை எனமருவுந் திருமலைவாழ்
செம்மலைநான் மலைவகலச் செங்கைகுவித் துய்வேனோ
தும்மலையும் இருமலையும் தொடர்வினையாற் கருமலையும்
விம்மலையும் பொருமலையும் விளைத்தசென்ம
மெடுப்பேனே. 52

## மழை வெள்ள வரவு

### சிந்து

சாதியி லுய ராதவர் குலத்
தலைவி தேவகி ஈன்றிடும்
தலைமக னுருக் கொண்டுபோய் - நெடுஞ்
சலதி மேய்ந்தவன் தம்பிபோற்
பூத ரந்தனை நாடி யேவரு
சீத மேகம் அன்னவன்
பொன்னின் மானைத் தொடர்ந்து வில்லொடு
புறப்பட் டாலெனப் புறப்பட்டே
சோதி மின்னொளி துள்ளவே - சிலை
மீது வளைத்திட் டாங்கவன்
தூவும் அம்பென அம்பு தொடுத்துத்
தாவும் மானது சாய்ந்திடும்
போது கதறி வெடித்த ஓசையைப்
போல இடித்து முழக்கியே
பொம்மெ னத் திரு மலையிற் சுரந்து
பொழிந்து குறிஞ்சி பரந்ததே. 53

### கலித்துறை - நெஞ்சறிவுறுத்தல்

மனமே உனக்கிது மாத்திர மேயுண்மை மந்திரவுற்
பனமே எவருக்குஞ் சோபன மேநன்மை பத்திகொண்டு
தினமே திருமலை அய்யனென் றாலது செந்தனமே
அனமே பரபத மேவினை நோய்க்கும் அவுழ்சதமே. 54

## ஐந்திணை - குறிஞ்சி

### சிந்து

பரந்து குறிஞ்சிக் காவையும் - அதில்
விரிந்த குறிஞ்சிப் பூவையும்



பணைத்த குஞ்சரக் கோட்டையும் - கரு
வணைத்த அஞ்சுகப் பேட்டையும்
நிரந்த ரந்தொடர் அணியையும் - நறை
சொரிந்த ரும்படர் கணியையும்
நெருங்கி முரல்ஐ வனத்தையும் - தினை
சுருங்கு குரல்கொய் புனத்தையும்
இருந்த தொண்டகப் பறையையும் - இடை
திரிந்த குண்டகத் தறையையும்
இருவி யம்புனத் தண்டையும் - சொரி
அருவி யஞ்சுனை நண்டையும்
விரைந்து திரைக்கை நீட்டி இழுத்துப்
பொருந்து குரைக்கை காட்டி வேள்
வேலைத் தண்டைக் காலைத் தொழுதப்
பாலைப் பாலை புகுந்ததே. 55

### கலித்துறை

மனம்போம் வழிசென்று பொய்யைமெய் யாக
மகிழ்ந்ததைஉற்
பனம்போல் நினைத்தென்றும் வீண்நாள் கழித்திட்ட
பாவிக்கின்னம்
இனம்போய் வருவது சற்றறி யேன்இந்த
ஏழுலகுந்
தினம்போற்றுங் காவித் திருமலை யாஉன்
செயல்இதுவே. 56

## பாலை

### சிந்து

புகுந்து நீத்த மரவமும் - பணை
மிகுந்து பூத்த குரவமும்
புல்வாய்க் குழுவுந் துயில்கொளுஞ் - சில
வல்வாய்க் கழுகும் முயல்களும்
முகந்து பிடிக்குஞ் சிலையரும் - இடை
நெகிழ்ந்து துடிக்கும் முலையரும்
முன்னாய்த் திரியும் பட்டியும் - சில
செந்நாய்த் திரளுங் குட்டியும்
பகுந்த மருப்புக் கலைகளும் - சினை
வகுந்த இருப்பை நிலைகளும்

பழமை தோன்றும் பாலையும் - மறக்
கிழவர் ஊன்று கோலையும்
தொகுந்தி ரைக்கரம் பரப்பி மலைக்கச்
சுருட்டி யிழுத்திட் டுரப்பியே
தூலத் திண்படை வாலைப் பெண்பதந்
தொடர்ந்து முல்லையில் நடந்ததே. 57

**கலித்துறை - மாலைமிரத்தல்**

நெருக்கு மராவுண்ட வெண்மதி யூற்று நிலாத்தழல்மெய்
கருக்கு மராவுங் கனிவாய்ப்பெண் பேதையைக் காமனம்பால்
உருக்கு மராமலர்த் தாமநல் காய்விண் ணுலகுதொழும்
திருக்கும ராமுரு காதிரு மாமலைச் சேவகனே. 58

**முல்லை**

**சிந்து**

நடந்த முல்லையி னிடத்திலே - கிடை
கிடந்த கொல்லையந் தடத்திலே
நறிய குல்லையைப் பறிக்குமாம் - கமழ்
வெறிகொள் முல்லையை முறிக்குமாம்
அடர்ந்த மூலியின் கணத்தையும் - முதற்
கடைந்த ஆவினல் லினத்தையும்
அடுப்பிடு மடைப் பாலையும் - அவர்
இடுக்கிய கடைக் கோலையும்
இடந்தனில் அசைத்தெடுக்குமாம் - தயிர்க்
குடந்தனை யொசித் துடைக்குமாம்
ஏவை நேரிட ஓடுமாம் - மரப்
பூவை வேரொடுஞ் சாடுமாம்
படர்ந்திடுந் திரு வடத்தனைப் - புவி
கடந்திடும் ஒரு தடத்தனைப்
பரவு மாம் புனல் அரவமா மெனப்
பலன்கொள் மருதங் கலந்ததே. 59

**கலித்துறை**

போய்த்தானை நாழிகை சேவித்த பேரந்தப் பொய்மருதஞ்



சாய்த்தானைக் கற்பகக் காவானைப் போற்செல்வந் தாமெய்துவார்
பேய்த்தானை யோடும் பொருந்தா னவர்தம் பெருங்கிரியை
மாய்த்தானை வள்ளிக்கு வாய்த்தானைக் காவி மலையனையே. 60

**மருதம்**

**சிந்து**

மருத வனத்தில் ஓடுமாம் - கதிர்
தருத வனத்தை மூடுமாம்
வாழைக் குலையைத் தள்ளுமாம் - நெடுந்
தாழைக் குலையில் துள்ளுமாம்
கருது குளங்கள் நிரப்புமாம் - அவைக்
குரிய வளங்கள் பரப்புமாம்
காவிடங் கரை புரட்டுமாம் - சில
மாவிடங் கரை யுருட்டுமாம்
சருவி யனத்தை வெருட்டுமாம் - கரை
மருவி யநத்தை திரட்டுமாம்
சகலி திகைக்கச் சாடுமாம் - புன
லிகலை வகுக்கக் கூடுமாம்
செருவின் வன்பகை மாற்றியே - அரி
மருகன் முன்குடி யேற்றியே
தெய்வத் தலத்திந் திரனைப் பரவி
நெய்தல் நிலத்தில் அடைந்ததே. 61

**கலித்துறை**

செந்தீ வரத்தியல் பாய்வருந் தீவினை தீர்த்தருள
வெந்தீ வரத்தில் எனதுமுன் னேகையில் வேலுங்கொண்டே
வந்தீ வரத்தி மகளார் வருடு மலர்ப்பதத்தை
இந்தீ வரத்திரு மாமலை மேவிய என்னையரே. 62

**நெய்தல்**

**சிந்து**

அடைந்த நெய்தலம் பூவையும் - இடை
மிடைந்த கைதையங் காவையும்

அளத்தி யர்உப்புப் பேட்டையும் - கரை
வலைச்சி யர்துப்பு வீட்டையும்
படர்ந்த புன்னையும் ஞாழலும் - கெடிக்
குடம்பை துன்னிய சூழலும்
பரவர் உணக்குஞ் சம்பையும் - அவர்
குரவர் வணக்கு கொம்பையும்
இடந்தி கழ்உவ ரோடையும் - கடல்
குடைந்தி டும்அவர் ஆடையும்
எடுத்தி டும் வலை தோணியும் - அவர்
படுத்தி டுந் தல காணியும்
தொடர்ந்தலைக் கரம் வீசியே - இழுத்(து)
அடர்ந்த லைக்கடல் ஈசனைத்
தொழுது வணங்கி யிணங்கி யக்கடல்
அகடு கிழியப் புகுந்ததே. 63

**கலிப்பா**

கந்தனே காவிமலைக் காங்கெயா அம்மையுமை
மைந்தனே மாயோன் மருகனே யென்றுசொல்வேன்
எந்தநே ரமும்பவத்துக் கிணங்கனே யாகிஉண்மை
யந்தநேர் பெற்றிடநா னல்லனே யானேனே. 64

## ஆற்று வெள்ளம்

**சிந்து**

மன்னும் அனுமப் பெயர்ப டைத்திடும்
நன்ன திப் புனல் மீனெலாம்
மதுரை யாற்றினில் அமணர் விட்டபொய்
யதுரை யேடெனச் சாயவே
இன்ன திப்புனல் புகுந்த கடலில்
துன்னி எதிர்க்கும் மீனெலாம்
எமது ஞான போனகர் விடும்
ஏடெ னக் குதித் தேறவே
சென்னி ஆறுடைக் குமர நாயகன்
முன்னம் அவுணர் மடியவே
சீறி ஏவிடும் அம்பெ னக் கதி
மீறி யோடிய வாரிநீர்
அன்ன வயலுங் குளமும் நிரப்பித்
தென்னன் முனம்அங் கயற்கண் ணாள்



அன்ப னார்விடும் புரவிபோல் வரும்
அழகு பாரும் பள்ளீரே. 65

**மீன் வகை**

சுறவு மசறி கொளுவை யுளுவை
தூடை திருக்கை விரிசிறாச்
சூரை மயிலை யயிரை மணலி
பாரை மகர முள்ளிறால்
குறவை முறல்வெங் கணைக ருங்கணி
குறளி செங்கணி திமிங்கிலம்
கோளை சாளை தேளி மூளி
குதிப்புத் திமிலை பஞ்சிலை
பறவை கெளிறு மலங்கு கலவாய்
பருத்த காரை யாரல்மீன்
பன்றி வாளை யாற்று வாளை
புரக்கு மைந்திணை நிரக்கவே
நறவு கமழுங் குவளைக் குன்றுறை
நாயகன் மயில் வேகம்போல்
நடக்கும் அனும நன்ன திப் புனல்
முழக்கம் பாரும் பள்ளீரே. 66

## பொருள் வகை

**சிந்து — வேறு**

சங்கரன் செட்டி பருத்தியும் - கட்டை
ரெங்கயன் பட்ட விருத்தியும்
தட்டான் மிளகன் படுகையும் - குறுக்
கிட்டா னழகன் கடுகையும்
கங்கன் கட்டிய நெல்லையும் - வலைப்
புங்கன் வெட்டிய வல்லையும்
கண்டன் முத்திரிக் கல்லையும் - மொட்டைக்
கொண்டன் கத்திரிக் கொல்லையும்
சிங்கக் கோன்பட்டி யாட்டையும் - வெள்ளை
அங்கக் கோன்குட்டிக் கூட்டையும்
சேணியர் மடச் சாலையும் - இலை
வாணியர் கொடிக் காலையும்
வெங்கல னிட்ட தோப்பையும் - பறைச்
சங்கிலி நட்ட கேப்பையும்

மேட்டினிற் செங்கல் மாலையும் - தொடுத்
தாட்டிய சங்கன் ஆலையும். 67

அல்லி பீற்றல் வீட்டையும் - தெற்றுப்
பல்லி நூற்ற ராட்டையும்
அளையிற் படுக்கும் பாம்பையும் - பொய்கை
இடையில் அடுக்குஞ் சேம்பையும்
செல்லி வளர்க்கும் கோழியும் - குறி
சொல்லி யுழக்கும் நாழியும்
தேவி வடிச்ச பானையும் - மூளி
ஆவி பிடிச்ச மீனையும்
வல்லி யரைக்கும் மணையையும் - ஈரங்
கொல்லி வெளுக்கும் துணியையும்
வெண்டி மச்சினி பொட்டியும் - அவள்
நண்ட விச்சிடு சட்டியும்
வல்லை சுருட்டி வாரி மறித்தவ்
வெல்லை பரந்து பகிரதன்
வரந தியெனும் அனும நன்னதி
வருதல் பாரும் பள்ளீரே. 68

**பண்ணைக்காரன் வரவு**

**கலிப்பா**

அண்ணைப் படையான்முத் தையன் திருமலையான்
பண்ணைப் பருவம் பலகாலும் பார்க்கவல்ல
மொண்ணைப்பண்ணை யானிரண்டு முட்டிதட்டுங்
காலிழுக்கும்
சண்ணைநடை யோடுந் தடியோடும் வந்தானே. 69

**சிந்து**

வெட்டையாய் மினுமினுத்த
தட்டைத் தலையும் - செம்பட்டை
மீசையும் பச் சோந்திக் கரை
வாசி நடையும்
முட்டிக் காலுஞ் சில்லொலுங்கு
விட்டுப் போகாப் பொட்டைக் கண்ணும்
மூளிக் காது மாய் வளர்ந்த
நாளிப் போழ்வாயும்



ஒட்டகம் இவரால் நல்ல
கட்டழகு பெற்ற தென்றால்
ஒன்றை யொன்றைச் சொல்வதென்ன
நன்றி தென்னவே
வட்ட வாவிக் காவித்திரு
மாமலைக் கந்தர் பண்ணைக்கு
வாய்த்த பண்ணைக் காரர் வந்து
தோன்றி னாரே. 70

**பள்ளர் வணங்குதல்**

**சிந்து - வேறு**

சுண்டல்முகப் பொட்டைக் கண்ணைக்
கும்பிடுகிறோம் - சாடி
சொல்லத் துடிக்கும் போழ்வாயைக்
கும்பிடுகிறோம்
தெண்டுபோ லாட்டுந் தலையைக்
கும்பிடுகிறோம் - இஞ்சி
தின்றகுரங் கொத்தவரைக்
கும்பிடுகிறோம்
குண்டுசட்டி வயிற்றாரைக்
கும்பிடுகிறோம் - பருங்
கோழியும் அவலும் வைத்துக்
கும்பிடுகிறோம்
பண்டைப்பழிப் புள்ளவரைக்
கும்பிடுகிறோம் - பண்பைப்
பண்ணைக் கார நயினாரே
கும்பிடுகிறோம். 71

**பண்ணைக்காரன் செயல்**

**சிந்து - வேறு**

பள்ள னெங்கே மூத்த பள்ளி
கள்ளி என்பாராம் - சின்னப்
பள்ளி விசுவாசி சுத்த
வெள்ளை என்பாராம்
மெள்ளக் கடைக் கண்ணாற் பள்ளி
துள்ளு குட்டி கொங்கையுங் — கை

வீச்சையுஞ் சாய்த்துப் பார்த்தேங்கி
மூச்செறி வாராம்
புள்ளி யணைஞ் சான் கொழுந்தி
தள்ளி நிற்பா யென்பாராம் - பெறாள்
பூலி யோ வா சாலி யனு
கூலி என்பாராம்
கள்ள ருந்தி னாற்போற் சீறித்
துள்ளிக் கொள்வாராம் - கோழை
கக்கும் பண்ணைக் காரர் கொன்னை
விக்கல் வாயாரே. 72

**கலிவிருத்தம்**

கொடுப்பரோ கதிவினைக் குழியில் வீழ்ந்திடா(து)
எடுப்பரோ பிறக்கவும் இறந்து போகவும்
விடுப்பரோ அந்திய வேளைக் காலனைத்
தடுப்பரோ காவிப்பூஞ் சைல நாதரே. 73

**பண்ணைக்காரன் கூறுதல்**

**சிந்து**

சேலளையும் வளவயலில் ஏர்நடத்துங் காலம்
செறிந்தகுளங் காலணைகள் சீர்படுத்துங் காலம்
சாலிவிதை தொளிகலக்கிப் பாவுதெளி காலம்
சனங்கள் அதி காலமெழுந் தாளேவுங் காலம். 74

காற்புரவுங் குளப்புரவும் பயிரேற்றுங் காலம்
கரும்பரம்பைப் பருவம்பார்த் திதம்புரியுங் காலம்
நாற்புவியில் இரண்டுசெய்யுஞ் சீர்படுத்துங் காலம்
நமக்கிரண்டு செயுங்குடும்பன் முளைத்தகலி காலம். 75

தனியரக்குக் குடியுமவன் தனக்கிரண்டு குடியும்
தனிக்குறும்பும் என்னிலவன் நமக்குவளை வானோ
அனமிருக்கும் வயற்பண்பைப் பதிமூத்த பள்ளி
அல்லவழிப் பள்ளன்வரச் சொல்லடி நீயே. 76

**அறுசீர் விருத்தம்**

நாம்பால் இருக்க வேம்பருந்தி
நடப்பால் வதைக்குஞ் சஞ்சிதநோய்



சோம்பால் மெலிந்தோம் நமரங்காள்
தொழும்பா லுயலாம் தொழவாரீர்
காம்பா லெனுந்தோள் அதரநறுங்
கரும்பார் அமுதக் களபமுலைத்
தீம்பால் அயின்றான் திருமலையே
தென்பாற் கயிலை மலையாமே. 77

**மூத்தபள்ளி முறையிடுதல்**

**சிந்து**

எனைவந்து கேட்டீர் - நம்புவி
தனிலிந்த நாட்டீ - ரலவோ
எள்ளுமப் படியே - நீர்தரும்
பள்ளுமப் படியே
மனமஞ்சி நடவான் - எவருக்கும்
வினயஞ்செய் திடுவான் - பணங்கொண்டு
வசியங்கள் பிடிப்பான் - பொல்லாச்
சதியன்கள் குடிப்பான்
குனிசிலை வணக்கம் - எனஇவன்
இனிமைசெய் யிணக்கம் - உறவென்று
குறித்தீர் முறையோ - நாள்தொறும்
பொறுத்தீர் பொறையோ
தினமுஞ்செய் மதமே - அவன் செய்தீ
மனமுஞ்சம் மதமே - உமக்கெனிற்
சீறுவ தெனையோ - விடுமென்ன
கூறுவ தினியே. 78

வெறுப்புக் கண்டேங்கி - மாமிக்கோர்
கறுப்புக் கண்டாங்கி - கொடுத்தவள்
விருந்திட்ட கறிசோ(று) - உண்டவள்
மருந்திட்ட தறியான்
சிறப்புடன் நாளும் - பால்மெத்தக்
கறப்பினும் வாழும் - வீட்டினைத்
தினம் பொறுப் பாரோ - ஆங்கது
தனைச் செறுப் பாரோ
புறப்பட்டுத் திரிந்தான் - விதைநெல்லைத்
திறப்பிட்டுச் சொரிந்தான் - என்னுடன்

போட்டிக்குத் தொடுத்தான் - மச்சினி
கோட்டிக்குக் கொடுத்தான்
குறப்பையல் பாம்பன் - உறவுகொண்(டு)
அறப்பயில் வீம்பன் - அவனொடுங்
குரண்டைகள் பிடிப்பான் கேளா
முரண்டன்காண் ஆண்டே. 79

துடுக்குறு பேச்சோ - துப்பட்டி
இடுக்குகை வீச்சோ - அவகுணச்
சுயபுத்தி மிண்டோ - ஒரு சற்றும்
பயபத்தி யுண்டோ
அடுக்கவும் ஆமோ - அவளைக்கைப்
பிடிக்கவும் போமோ - வரிசைக்கே
ஆடியு மிட்டீர் - கனபகை
தேடியும் விட்டீர்
கடக்கவுங் கேட்டீர் - இவனையோ
அடக்கவும் மாட்டீர் - நம்பண்ணைக்
காரியம் பாரீர் - அவன்செய்யும்
வீரியந் தீரீர்
படிற்றுரை யலவே - நாளஞ்சு
பிடித்திடுஞ் சொலவே - கேளும்போய்
பள்ளத்தி இளையாள் - சொல்லுவள்
உள்ளத்தை ஆண்டே. 80

**அறுசீர் விருத்தம்**

ஓலை எழுத்தை யழிப்பர்தலை
யோட்டி லெழுத்தினை யாரழிப்பார்
வேலை எனக்குப் பிறந்திறக்க
வேலை யுனக்குப் படைத்திடவோ
கோலை யுரத்தில் அடித்தேவல்
கொள்வார்க் கன்றிச் செய்வார்க்கென்
வாலை யொருத்தி பெற்றதிரு
மகனே காவி மலையானே. 81

**இளைய பள்ளியைக் கேட்டல்**

**சிந்து**

மன்னுபுகழ் நன்னகரப் பள்ளி - உன்னுடைய
மணவாளக் குடும்ப னெங்கே கள்ளி



புன்னகையும் மாய்மாலப் பேச்சும் - மனக்களவும்
போட்டுவிடு கூட்டமிட வேண்டாம்:

**அவள் கூறுதல்**

என்னுடைய நயினாரே கேளீர் - ஆண்டவர்தம்
இனியபேர் பெற்றபண்ணைக் குடும்பன்
கன்னங்கறே ரெனுமிருட்டில் எழுந்தே - சேல்பாயுங்
கால்வாயிற் போனான்காண் ஆண்டே. 82

போனபள்ளன் வரவுநான் காணேன் - நேற்றிரவு
புளிச்சகஞ்சி இவ்வளவுங் குடித்தான்
ஈனமிரக் கஞ்சிறிதும் இல்லாள் - மூத்தவள்கை
எடுத்ததெய்வந் தடுத்ததடை யறியேன்
ஆனாலும் நானடியாள் தேடிப் - போகவெனில்
ஆழங்கால் ஆளிறங்கா நீச்சே
சோனைமழைக் காலிருட்டும் ஆச்சே - பாவிமனந்
துடித்துப்பர தவிக்கிறேன் ஆண்டே. 83

**பள்ளி கூறுதல்**

இரைத்துவரும் அனுமநதிப் பெருக்கில்-துடிதுடித்தங்(கு)
எண்ணாமற் போயிறங்கி னானோ
மரைப்பிணவை நிறுத்துதலை யணையிற்-பாசிபற்றும்
வழுவழுக்கில் சறுக்கிவிழுந் தனனோ
தரைத்தலத்தைக் கிழிக்கும்புன லுடைப்பில்-குதிரைவிட்ட
தறிமிதித்துச் சறுக்கிவிழுந் தனனோ
அரைப்பொழுதும் பசிபொறுக்க மாட்டான்-இன்னமுங்கள்
அடிமைவரக் காண்கிலேன்நான் ஆண்டே. 84

கிடையாத நற்கனவு கண்டேன்-முருங்கையடிக்
கெவுளிசொன்ன குறிக்கும்நன்மை யுண்டே
உடையாளென் நாத்திதும்மல் பொன்னே-இடும்பனுக்கோர்
உருமாலை நேர்ந்துருகிச் சொன்னேன்
கடைபோகக் குற்றாலர் காப்பார்-நம்முடைய
காவிமலைத் தெய்வமுண்டு கண்டீர்
சடையாமல் வீட்டிலே போம்போம்-பொழுதடையுஞ்
சமயமிங்கு வாரும்நயி னாரே. 85

### அறுசீர் விருத்தம்

விடங்கள் மாற்றிட மயிலுண்டு வேலுண்டு
வினைப்பகை தனைத்தீர்க்கச்
சடங்க ளெய்திடா தாண்டிடத் திருத்தண்டைத்
தாட்டுணை நமக்குண்டே
இடங்கள் தோறும்வே யீன்றமுத் திளநிலா
எறித்திடுஞ் செழுங்காவித்
தடங்கள் மேவிய திருமலை வலம்வரச்
சடுதியில் வருவீரே. 86

### பண்ணைக்காரன் கோபித்தல்

#### சிந்து

கட்டாக நன்னகர்ப் பள்ளத்தி இவ்வாறு
கூறியே - நிற்கக்
கண்டிடுங் கிந்துக் கால்பண்ணைக் காரன்மெத்தச்
சீறியே
தொட்டால்வி டாதென்கை நாங்குக் கம்புகொல்லும்
பேயடி - உண்ட
சோற்றுக்கு ரெண்டுசெய் தாலது வேசுடுந்
தீயடி
கொட்டாம லேபிள்ளைப் பூச்சியும் ஆயினேன்
நானடி - காட்டிற்
கூழை நரியைக் குளிப்பாட்ட வல்லாய்நீ
தானடி
தட்டா னுறவுபோல் வந்துற வாடின
பள்ளத்தி - இந்தத்
தஞ்சாவூர்ச் சாலமெங் கேபடித் தாய்முழுக்
கள்ளத்தி. 87

பேச்சிநம் பண்பையிற் பள்ளிக்குக் கூற்றுவ
னானநீ - ஐயன்
பேர்பெற்ற பள்ளனைப் பெயர்க்கும் ருத்திராக்கப்
பூனைநீ
வாச்சிக் கல்லாது மரக்கணுத் தீரா(து)
இடும்பிச்சி - பொல்லா
வண்ட முறியனு மானாய் இளைய
குடும்பிச்சி. 88



வாயிற் பகட்டுஞ் சவலச் சமத்தும்
நடக்குமோ - பிற
வாப்பிள்ளை யைநிண வாக்கட்டி லேற்றில்
கிடக்குமோ
தீயிற் பயிரிட்டாற் காய்கதி ராய்வந்து
காணுமோ - உன்றன்
சின்னப் பேச்செல்லாம் விடுவிடு பொல்லாப்பு
வேணுமோ. 89

கொச்சைப் பட்சாதிக் கடியன்றிச் செம்மை
அடுக்குமோ - கெஞ்சிக்
கொண்டு மயிலை யொருதூவல் கேட்டாற்
கொடுக்குமோ
பச்சைப் புளியாக்கித் தின்னவேண் டாம்வண்டக்
குள்ளத்தி - உன்றன்
பள்ளனை இக்கணம் கூப்பிடு நன்னகர்ப்
பள்ளத்தி. 90

### பள்ளன் வெளிவருதல்

இவ்வண்ண மேபண்ணைக் காரனுஞ் சிக்கெனப்
பண்ணினான் - இனி
ரெண்டில் லொன்றுகண் டாலன்றிப் போகானென்
றெண்ணினான்
கைவண்ணக் கம்பு மறுதாறு மாய்வந்து
சொல்லுவான் - பண்ணைக்
காரனைக் கும்பிட்டுப் பள்ளனும் பேச்சினால்
வெல்லுவான். 91

#### கலித்துறை

நானுனைப் போற்றவும் நீயெனைக் காக்கவும் நாயடியேன்
தானுனைப் போலு மொருமுத லோநன்மை தந்துபுரப்
பானுநை வாயெனச் செய்வானும் நீயுன்கைப் பம்பரம்நான்
வேனுனைக் கண்ணுமை மைந்தாஇந் தீவர
வெற்பண்ணலே. 92

### பள்ளன் கூறுதல்

#### சிந்து

பண்ணைக் காரன்முன் வந்த குடும்பன்
பணிந்திடாக் கள்ளப்பள் ளல்லவே நான்

கண்ணை மூடிக்கொண் டெண்ணாமல் இப்படிக்
காடு மேடும் பகரக் கணக்கோ
அண்ண லார்திரு மாமலை மேவுமுத்
தையர் பண்ணைக் கிருப்புஞ் செலவும்
திண்ண மாய்அடி யேன்சொல்லக் கேளும்
சினத்தை விட்டு விடும்பண்ணை யாண்டே. 93

மாட்டு வகை

நந்தக் கோன்மகன் மைத்துன னான
நரைக்கிழ வன்குற் றாலக்கோன் தந்த
தொந்திக் காளை குளங்குட்டம் நாடிச்செய்
தோப்புக் கடைகள் வாஞ்சித்து மேவும்
முந்தவே சந்து போனமால் காளை
முடப்படக் கூடக் காலொடு தூங்கும்
அந்தக் காரிக் கருங்காளை காணலாம்
அச்சங்க ரன்கோயிற் போனக்கால் ஆண்டே. 94

செய்ய செம்மறைக் காளையை வேலப்பன்
செட்டி யார்அடித் தோட்டி யடைத்தார்
வைய முய்ந்திட மீண்டுந் தனக்கு
மயிலை வேணுமென் றேபற்றிக் கொண்டார்
பொய்யிதோ மெய்யிற் சூடுண்ட காளை
பொலியிற் போமதை இன்னமுங் காணேன்
அய்யர் தூக்குமுடக் கால்நக ரீசர்
ஆங்கோர் காளையைக் கைக்கொண்டார் ஆண்டே. 95

நெல் வகை

ஆடற் சீரகச் சம்பாவை ஆரூரில்
அல்லியங் கோதை பங்கெனக் கொண்டாள்
ஈடில் லாக்கருஞ் சூரைமுத்தையர்
இரண்டு புள்ளுக்கும் பங்கிட்டுப் போட்டார்
சாடி யேவிளை குற்றாலன் தன்னைத்
தரணி பீடத் தவக்கொடிக் கீந்தார்
தேடி யேவல்ல ரங்கனை ராமனுஞ்
சிந்திப் போட்டனன் போர்க்கழைத் தாண்டே. 96

நீண்ட பைங்குழ லாளை மதகெற்று
நேற்றை வெள்ளத்திற் சாய்ந்தது கண்டீர்



பூண்ட வல்வித்தை யெல்லாஞ் சடானனப்
புண்ணி யன்னடி யார்கள்கைக் கொண்டார்
வேண்டிடுஞ் சொல்லை யஞ்சுபங் கிட்டிந்த
மேதி னிப்புல வோர்கள்கைக் கொண்டார்
தீண்டியே அந்தக் கோசலை ராகவன்
சீதா போகங்கை யாடினான் ஆண்டே. 97

திருவ ரங்கனை முன்னம் வினதை
சிறுவன் தோட்சுமை யாய்க்கொண்டு போனான்
மருவு சீர்மணல் வாரியைக் காவி
மலையனார் சத்திக் குண்ணக் கொடுத்தும்
அரிய நாய னெனக்கொண் டதிக்கி
ராதி யுங்கைக் கொண்டது முண்டே
கருதியே முத்து வெள்ளையை யாதவர்
கன்னி பாலனுக் கீந்தனர் ஆண்டே. 98

ஏர்க்கால் வகை

எண்ணுந் தூணின் மருமா னுகந்தனை
ஈரி ரண்டுதுண் டாக முறித்தான்
கண்ணி லேகுழை யான்கலப் பையைக்
கருதி யேதலைக் கீழ்வைத்துக் கொண்டான்
மண்ணில் நீடு கொழுவைமுன் கைக்கொண்டு
வாரி வேலையில் வாணர்கள் விற்றார்
அண்ண லேவள்ளைக் கையுமி ரண்டுதுண்
டான செய்தி அறிவீரே ஆண்டே. 99

அழிவி லாத வடத்தை மொழிச்சி
யலிய தாக விசயனுக் கீந்தாள்
வழுவி லாவய மேழியை அம்பர
மன்னுந் தேர்க்குத் தரணிகைக் கொண்டான்
தெளிய நல்கு முளைக்கோலை முன்னந்
தெரிந்து சன்னாசித் தேவர்கள் கொண்டார்
நழுவும் பேச்சை விடும்விடும் வேலுடை
நாயனா ருண்டு நம்பண்ணை யாண்டே. 100

கலித்துறை

பெண்ணானை காந்தனைப் பேரானை
தம்பியைப் பெய்முகிலூர்

விண்ணானை யானைச் சடானன
மூர்த்தியை வீணர்தம்பால்
நண்ணானைக் காவித் திருமலை
யானைமுந் நான்குதிருக்
கண்ணானை என்னிரு கண்ணிற்கண்
டேன்வினை கண்டிலனே. 101

**பண்ணைக்காரன் எண்ணுதல்**

**சிந்து**

கற்பனை யாயிந்த விண்ணாண வார்த்தை
எண்ணாமலே - பள்ளன்
கட்டுமட்டாய்ச் சொல்லத் தட்டைத்தலைப்பண்ணைக்
காரனார்
சற்பனை செய்யும் இவன்தப்பிப் போவது
போவனே - இந்தச்
சங்காத்தி என்கைத் தடியடிக் கேவசம்
ஆவனே. 102

அச்சமே கீழ்ச்சாதிக் காசாரம் என்பர்கள்
ஆருமே - நானும்
அவ்வார்த்தை தன்னைப் புதுப்பிக்கி றேனின்று
பாருமே
கச்சக்காய்ப் போசனம் கத்தூரி யானது
போலவே - இந்தக்
கள்ளனைச் சேரிக் குடும்பாக வைத்தனர்
ஏலவே. 103

பூனைபோய் இப்பாற் புலியாய்ச் செய்தான்பரி
காசமே - இப்
புலியா லுருவிவிட் டாலோ வரும்வரும்
மோசமே
ஆனையைக் கொப்பத் தடைத்தாப் போலின்றைக்
கடைக்கிறேன் - பட்டால்
அன்றி யறியான் மரத்திட் டிவன்கால்
ஒடிக்கிறேன். 104

**பள்ளனைக் குட்டையிலடித்தல்**

என்றிவை யெண்ணிய பண்ணையான் தச்சனைக்
கூப்பிட்டே - பள்ளன்
ஏங்கிடக் குட்டை யடித்தனன் சிக்கெனவொர்
ஆப்பிட்டே
அன்றந்தப் பள்ளனும் பண்ணைக்கா ரன்தன்னைச்
சீறியே - என்னை
ஆகா வழியாய் மரத்தடித் தீர்வம்பு
தூறியே. 105



**பள்ளன் கூறுதல்**

பண்பையிற் பள்ளி பணக்காரி தான்வண்டத்
தூவையே - நீரும்
பார்த்தாற் பசுப்போல் இருக்கிறீர் கைக்கூலிப்
பாவையே
பொன்பணங் கள்குடிப் பள்ளச்ச னங்கள்கை
யாடுமோ - கேட்ட
போதுமக் கேகடன் கொண்டுகப் பங்கட்டக்
கூடுமோ. 106

வறுத்தவ லொன்றைக் கொறிக்கிறீர் நீர்விசு
வாசியோ - சொல்ல
மாட்டா திருப்பதெல் லாம்பயப் பட்டுவாய்
கூசியோ
இறுத்திறுத் துப்பார்த்து வன்மிக்கி றீர்என்னைக்
கொல்லவோ - நரி
ஈடாடி முன்னம் எதிர்த்தா லதுசிங்கம்
அல்லவோ. 107

**இளைய பள்ளி வருதல்**

கும்பிட்டேன் குட்டை கழற்றி விடுமென்று
கெஞ்சியே - பள்ளன்
கூறிடக் கூறிடப் பண்ணையான் கோபங்கள்
மிஞ்சியே
வம்பிட்ட வார்த்தைகள் பேசி யவன்மனை
ஏகின்றான் - பள்ளன்
வாஞ்சிக்குஞ் சின்னக் குடும்பிச்சி யார்வந்து
நோகின்றாள். 108

**கலித்துறை - வண்டுவிடு தூது**

கைக்கு வளைக்குலங் காணாள்
அரைக்குக் கலைமறந்தாள்

இக்கு வளைக்கு மொருவனுக்
கேங்கினள் என்றருளச்
சிக்கு வளைக்குடம் பற்றியுண்
டான்மெய்த் திருமருகன்
மைக்கு வளைக்குன் றுடையான்முன்
போய்ச்சொலும் வண்டினமே. 109

**பள்ளனைக் கண்டு வருந்தல்**

**சிந்து**

கண்ணகைபோல் மண்ணுலகில்
பெண்ணுருவாய் வந்தபண்பைப்
பள்ளி - சரடுசெய்த
கணவனுக்குச் சாடி சொல்லிக்
கண்ணிற் கண்டாள் இக்கோலங்
கள்ளி

தண்ணகையால் உயிர்வதைக்கும்
கொல்லிமலைப் பாவைகுணம்
படித்தாள் - சண்டாளி
தடந்தோளி லிருந்துசெவி
தனைக்கடித்தாள் நெஞ்சிற்கொண்டை
முடித்தாள். 110

நேற்றிரவு கொடியகனாத்
தோற்றியது பலித்ததுபார்
குடும்பா - கறுப்பனுக்கு
நேர்ந்துவைத்த உருமாலை
நீயெடுத்தாய் இணக்கமில்லா
இடும்பா
நாற்றிசையில் தூற்றும்பெண்டிர்
கூற்றெனவே துரத்தாமற்
போனாய் - முழுதும்நம்பி
நச்சுமரந் தன்னைநட்டாய்
நாலுபேர் சிரிக்கஇடைப்
பட்டாய். 111

காரியக்கா ரன்திருட்டுக்
காரன்வம்புக் காரன்பண்ணைக்



காரன் - சுடுகெண்டைக்காய்க்
கரைக்குளத்தை வெட்டவல்லான்
கைக்கூலிக் கிணங்கும்வலுக்
காரன்
வீரியக்காள் மூத்தபள்ளி
செவிக்கடியால் இவ்வண்ணமே
கண்டான் - உன்னைக்கண்டே
வெயர்த்துடலும் பதைபதைக்க
விருதாவில் இப்பாவங்
கொண்டான். 112

**பள்ளன் ஆறுதல் கூறுதல்**

நாமிருவர் படுந்துயரை
ஆறுமுகத் தெய்வமறி
யாதோ - வீட்டினிற்போ
நன்னகரப் பள்ளிபகை
நாள்விரோதச் செயல்க
ளேதோ

ஈமிதித்து முடமாமோ
இன்றுசிறை விடுவன்கட்டு
மட்டாய்க் - கறுப்பனுக்கும்
இடும்பனுக்கும் வேண்டிக்கொண்டே
இருபதுமுப் பதைநேர்ந்து
கட்டாய். 113

நீலிபண்பைப் பள்ளியிங்கே
வருவள்அந்த நாய்வாயிற்
கோலை - நீஎதிர்த்து
நீட்டிவிடிற் பகைகாரி
கோட்டிகொண்டே புகல்வள்ஒருக்
காலை
சோலிபண்ண வேண்டாம்போபோ
குதிரைதனைக் கும்பிட்டேறிக்
கொண்டே - சவுக்கதனால்
துரத்தியடிப் பவர்களைப்போல்
அடிக்கிறேன் மகிழ்ந்திடுநீ
கண்டே. 114

கோபங்கொண்டே பகையைவெல்லக்
கூடாது கால்நடுவே
குத்தித் - தைத்தமுள்ளைக்
கூரியமுள் கொண்டெடுப்பார்
அறியாரோ கேளாயென்
புத்தி
நீபந்தந்த தார்புனைந்த
திருமலையான் நாயன்நமக்
குண்டே - பலபடநீ
நினையாதே வீட்டினிற்போ
குற்றாலர் தமைநினைந்து
கொண்டே. 115

**கலித்துறை**

எழும்பால வித்தவ் வளவள
வேனும் இரக்கமில்லேன்
தொழும்பாளுக்காகச் சுமைமாற்ற
வந்து துணைசெய்வையோ
அழும்பாலன் ஆரெனக் கார்த்திகை
மாதர் அறுவர்கொங்கைச்
செழும்பால் அருத்த அருந்துஞ்செங்
காவிச் சிலைக்கந்தனே. 116

**மூத்த பள்ளி வருந்திக் கூறுதல்**

**சிந்து**

கசப்பு வாயில் இனித்திடு மோபண்பைக்
கன்னியார் மூத்த பள்ளிநான் வந்தேன்
பசப்பி வண்டக் குடிலஞ்செய் நன்னகர்ப்
பள்ளி மாப்பிள்ளை பண்ணைக் குடும்பா
வசப்ப டாவுன்னைக் குட்டை யடிக்க
மனந்த ரித்தனள் நன்னகர்ப் பள்ளி
நிசப்படத் தெய்வத் தாணையுன் னாணைஎன்
நெஞ்ச யர்ந்து துடிக்குது பள்ளா. 117

கள்ளி னாசையொன் றல்லாம லேபெண்கள்
காத லாசையும் ஆருக்கும் ஆகா(து)



உள்ள மீதிரண் டாசையுங் கொண்டிந்த
ஊருக் கும்நயி னாருக்கும் ஆகாய்
பள்ளர் சேரச் சிரிக்க உடம்பு
படைத்து நீபடும் பாடது தன்னை
விள்ள வாயற்றுப் பார்த்துப் பதைக்க
விதித்த ஊழ்வினை வெல்லவொண் ணாதே. 118

தாவு மீனுக்கு வாலையும் பாம்புக்குத்
தலையுங் காட்டிய வஞ்சகக் கள்வா
நாவி லேஒன்று நெஞ்சினி லேஒன்று
நாளுங் காட்டிஎன் நட்பும் மறந்தாய்
ஏவும் வார்த்தைக் கிணங்காமல் நாயனுக்(கு)
ஏரும் பூசலு மாகத் திரிந்தாய்
தேவ நாயகன் காவித் திருமலைத்
தெய்வஞ் செய்த செயலிது பள்ளா. 119

**சோறு தருதல்**

ஆறுமாத் தைக்கொரு நாளென் றாலுமுன்
அருமைக் குஞ்சையும் என்னையும் பாராய்
ஊறிநான் உள்ள சித்த முருகி
உனக்குச் சோறு பகையல வென்றே
சோறுநான் கொண்டுவந் தேனிதை யுண்ணச்
சொல்லக் கூசிப்பின் சொன்னேன் மனத்தில்
ஏறு மோமனங் கொள்ளாமற் சத்தி
எடுக்கினுஞ் சற்றுத் தின்னடா பள்ளா. 120

**பள்ளன் கூறுதல்**

தின்னவே சொன்ன பண்பையிற் பள்ளி
செருப்பு காலிற் கடித்தது போல
நன்னகர்ப் பள்ளி சொல்லைஎண் ணாதந்த
நாயை நீஎதி ராக்குவ தேதோ
முன்னமே கொண்டு தந்தாய் அவளை
மூப்பி வாய்ப்பெனக் கொண்டு திரிந்தேன்
இன்னம் வேணுமென் றால்வேணும் உன்கருத்
தெப்படி யப்படி என்க ருத்தே. 121

கெட்டதிற் போனது போகட்டும் நீஇனிக்
கீறுங் கீற்றொரு நாளுங் கடவேன்

கற்றது நீசொல்லிப் பண்ணையிற் காரியம்
காலஞ் செய்வது கோலஞ்செய் யாதே
மற்றதப் பண்ணையான் சண்ணைக் கடாவுக்கென்
வார்த்தை ஏறாது நீசென்று பேசிப்
பற்றிய தொழுமரக் காவலை நீபிணைப்
பட்டுக் கொண்டு விடுவிப்பாய் பள்ளி. 122

இணங்க வேநங் கறுப்பன் தனக்கும்
இடும்ப னுக்கும்நன் றாய்நேர்ந்து கொண்டு
வணங்கிற் காரியம் கைப்பல னாம்உன்
மனதின் வண்ணம் நடந்துகொள் வேன்நான்
பணங்கண் டாற்சொன்ன சொற்கட வான்அந்தப்
பண்ணை யானுக்குப் பத்தஞ்சு சொல்லிக்
குணங்கொண் டேஎன்னை ரட்சிகண் டாய்உன்னைக்
கும்பிட் டேன்காண் குடும்பிச்சி யாரே. 123

**கலித்துறை**

சைவ சிகாமணி கந்த சுவாமிபொற் றாள்எனக்குக்
கைவச மாகத் தருஞ்சே வகன்குந்தி காதலராம்
ஐவர் சகாயன் மருகன் திருமலை ஆறுமுகத்
தெய்வ சகாயமுண் டேவரு மோகொடுந் தீவினையே. 124

**மூத்த பள்ளி பண்ணைக்காரனை வேண்டல்**

**பல்லவி**

கோபந் தணிந் திரங்குவீர் - நயினாரே
கோபந் தணிந் திரங்குவீர்.

**அனுபல்லவி**

கோபந் தணிந்திரங்கிக் குடும்பனை விடும்விடும்
கொத்தடி யானுடன் இத்தனை யேன் (கோபம்)

**சரணம்**

1. அடித்திடும் மரத்தொடுங் கிடக்கவோர்தடுக்கோ
அடிக்கடி பனிக்குளிர் நடுக்கிடும் நடுக்கோ
பிடித்துண்ணக் கொடுப்பவர் ஒருத்தருமிலையே
பிழைப்பதெப் படிப்பள்ளன் வருத்தமோர்மலையே.

2. உழைத்திடும் அடிமையைக் கெடுத்திடும்சிறையே
உரத்தடித் தடித்தர வணைப்பது முறையே
மழைக்குப சரித்தெவர் பெயச்சொல்லு வாரே
மரத்தடித் திடுஞ்சிறை விடச்சொல்லுவீரே.(கோ)



3. எடுத்திடும் பிறவியின் குருட்டுடன் நீரே
இளநீரின் குழம்பிட வோநயி னாரே
குடித்திடும் வெறிப்பள்ளன் குணங்குணமாமோ
குணத்தினுக் கவிழ்சதங் கொடுத்திட லாமோ

4. வாளெடுத் தோங்கிப்பின் புறங்கொண்டு வீசி
மருட்டுவ தல்லது வர்மங்கள் பேசி
நாளினைச் செலவிடில் குறைநமக் கலவோ
நமக்குப சாரங்கள் நானின்று சொலவோ. (கோ)

5. உமக்கடி யான்சற்றுஞ் சலுகையைக் கண்டோ
ஒளித்தோடிப் போங்கள வெங்களுக்குண்டோ
சுமக்கிற எருதுக்குத் துள்ளவுங் கடனே
சுடச்சொல்லு வீர்கார்யங் கெடுப்பதுந் திடனே.

6. வம்பிநன் னகர்ப்பள்ளி பேச்சையுங் கேளான்
வயலுழும் வேலைக்கு மலைத்திடுந் தோளான்
நம்பிய குடும்பன்செய் பிழைபொறுப் பீரே
நான்பிணை நான்பிணை நான்நயி னாரே.
(கோபம்) 125

**பள்ளனை விடுவித்தல்**

**கலித்துறை**

மறையிட்ட வேதனை நக்கீர னைத்திரு
மாமலையான்
சிறையிட்டு விட்ட செயலல்ல வோசெப்ப
வேபண்ணையான்
முறையிட்ட மூத்தவள் முன்னிலை யாய்க்குட்டை
முன்னடித்துக்
குறையிட்ட வன்சிறை விட்டான்நம் பண்ணைக்
குடும்பனையே. 126

**பள்ளன் கூறுதல்**

**சிந்து**

தெய்வ நாயகன் திருமலை யாண்டவன்
செழும்பண்ணை நயினாரே
தேவ ரீர்மனக் கோபத்தோ டென்பயந்
தீர்ந்தது நயினாரே

கைவ சப்படச் செய்யுமு வேன்ஒரு
காரியம் நயினாரே
கள்ளி மூத்தபள்ளி பிணைதனைக் கும்பிட்டேன்
கழித்திடும் நயினாரே. 127

இருப்பு விலங்கிட்ட யானையைப் போர்க்களத்
தேவுவர் நயினாரே
எனைமரத் தடித்தீர் விடுத்திடிற் குறையாய்
எவர்சொல்வர் நயினாரே
விருப்புறும் இளையவள் சமர்த்திகைத் திறஞ்சொல்ல
வேணுமோ நயினாரே
வீட்டிலி ருந்துபழி மூட்டிடும் மூத்தவள்
வீவிகாண் நயினாரே. 128

சாதி முறைமைகள்ளுக் குடித்துரைப் போம்அதைச்
சகித்திடும் நயினாரே
தாமுண்ணுஞ் சோற்றில்நஞ் சதுகலப் பவர்ஒருத்
தருமில்லை நயினாரே
நீதி யுறநமது பண்ணையி லேர்வகை
நெல்வகை நயினாரே
நின்றசீ ரின்வகை யாவையும் பகர்வேன்
நெறியுடன் நயினாரே. 129

**கலித்துறை**

காவித் திருமலைச் சண்முக
நாயகன் கால்பிடித்துப்
பாவித் திருமலை யாமல்நெஞ்
சேவினை பற்றியநம
ஆவித் திருமலை யானிலம்
போலசைந் தஞ்சயமன்
கோவித் திருமலை ஐயையுண்
டாக்கிக்கைக் கொள்ளுமுன்னே. 130

**மாட்டு வகை**

**சிந்து**

கூழைவாலன் கூடுகொம்பன் குத்துக்குளம்பன்
மயிலை கரும்போரான் சுட்டிவெள்ளை



கொட்டைப்பாக்கன் செம்மறையன் வெண்தலையன்
குற்றாலன் வெள்ளிக் கண்ணன்மாலான்
மேழைக்காளை கருமறையன் சூடுதின்னி
வெள்ளைக்காலன் மட்டைக்கொம்பன் திருகுகொம்பன்
வெடிவாலன் வெறியன்ஆனைச் சொறியன்இவை
விரும்பிஏர் கட்டினேன் ஆண்டே. 131

**வித்து வகை**

புழுகுச்சம்பா மணல்வாரி சொரிகுரும்பை
புத்தன்வாரி சிறைமீட்டான் கருஞ்சூரை
பூம்பாளை குற்றாலன் பாற்கடுக்கன் - கற்
பூரப்பாளை காடைக்கழுத்தன் மலைமுண்டன்
மிளகுச்சம்பா திருவரங்கன் குறுவைக்கிள்ளை
முத்துவெள்ளை அதிக்கிராதி பனைமுகத்தன்
வித்தின்வகை இத்தனையுஞ் சித்திரமாய்க்
கட்டினேன் ஆண்டே. 132

**ஏர் வகை**

கலப்பை நுகமும்பூட்டுங் கயிறும்வள்ளைக்
கையும் உழக்கோலுங் கொழுவுடனே
கயமரமும் மண்வெட்டியும் வடமும்
இனிதாய் இயற்றி வைத்தேன்
நலத்தகும் திருமலையான் பண்பைப்பண்ணை
வயலி லின்றே சிறப்பாக
நாமெல்லோருங் கூடிச் சென்றே
நாளேரிட வாரும் நயினாரே. 133

**நாள் பார்த்தல்**

**கலிப்பா**

மாட்டின்வகை நெல்லின்வகை
மற்றுமுள்ள சீரின்வகை
காட்டியித மானபண்ணைக்
காரனுக்குச் சொன்னபள்ளன்
ஆட்டிலூர மேற்றும்வயல்
அன்பாய்நா ளேரிடும்நாள்
கேட்டியல்பாய்ச் சொல்லுமென்றங்
கீகரித்து நின்றானே. 134

### சிந்து

திங்கள் வார மின்றுமூல நட்சத்ரம்
செய்ய பஞ்சமிப் பக்கஞ்
சிங்கக் கரணஞ்சுப யோகமின் றைக்கென்னச்
செப்பி னார்கள் குடும்பா
அங்கண் மாநிலம் பரவுந் திருமலைமுத்
தையன் பண்ணைப் புரவில்
வெங்கண் ஆளையேவி நாளே ரிடவா - நல்ல
வேளை யீது குடும்பா. 135

### நற்சகுனமாதல்

### சிந்து

ஆக்கமாய்க் குடும்பன் விதையுங் கொண்டுவயல்
அணுகச் செல்லும் போதில்
ஆவின் பாற்குடமும் நிறைநீர்க் குடமுங்கொண்(டு)
அரிவையர் எதிர் தோன்றக்
காக்கை நாரை வலஞ்செய்யவே உபய
கருடன் வட்ட மிடவே
கண்ட குடும்பன் நாளேரிட்டு நாள்வித்துங்
களிப்புடன் பிடித்து வந்தான். 136

மீளும் போதினிற் காக்கை இடம்புகுத
வேத னொருவன் வரவே
வீரன் திருமலையில் வேலன் கருணையிது
வேறிலை யெனம கிழ்ந்தே
ஆளும் பண்ணையீர் சுபசோப னமுங்கொண்
டடிமை இங்கு வந்தேன்
ஆருங் காணவயல் நாற்றுப் பாவுதற்கு
வாரும் என் நயினாரே. 137

### பள்ளர் நாற்றுப் பாவச் செல்லுதல்

### கலிப்பா

பூவுலகில் மிக்காய்ப் புகழ்பண்பைப் பள்ளர்சந்தக்
காவுசெறிந் தோங்குநறுங் காவித் திருமலையான்
மேவும் அடி யார்உளத்தில் மேலாம் பரவருளைப்
பாவுதலொப் பாய்நாற்றுப் பாவவயல் புக்கனரே. 138



### சிந்து

பெருந்தொழிற் குடும்பன் - உழுதிடுங்
கருந்தொளி கலக்கி - விதையிட்ட
பெட்டியைச் சிரத்தே - வைத்ததைத்
தொட்டுட னெடுத்தே
திருந்தயில் வாழி - எனச்சொல்லிப்
பொருந்தும்நெல் விதைத்தான் - விதைத்தது
செய்த்தலை நிரம்ப - நிரந்தது
சித்திர முறவே. 139

### நாற்று வளர்தல்

திருமலைப் பெருமான் - நமக்காய்
இருநிலக் குருவாய் - வந்துப
தேசத்தை யளித்தே - அடும்பல
பாசத்தை ஒழித்தே
அருளது விளைக்கும் - போதினிற்
சிவமுளை முளைக்கும் - வகையென்ன
அங்குரித் தெழுந்தே - குருத்ததங்
கணிவயல் நாற்றே. 140

முதலது ஒன்றாய்த் - திருமலை
முத்தையன் பலவாய் - விரிந்திடும்
முறைமைய தெனவே - ஈரிலை
மூவிலை கொண்டே
பதரற விளையும் - பயிரது
முளையினில் தெரியும் - எனக்கண்டு
பள்ளனும் மகிழ - வளர்ந்தது
பாவிய நாற்றே. 141

### நாற்று பறித்தல்

### கலிப்பா

நாற்று வளர்ந்தே நடப்பருவம் வாருமெனத்
தோற்றும் படிகுடும்பன் சொன்ன மொழிக்கிசைந்தே
ஆற்றலுறும் பண்ணையான் அன்பாக நல்லடியார்
போற்றுகுகன் பண்பைப் புரவில்ஆள் ஏவினனே. 142

### சிந்து

குறித்த அக்ரம சூர னுடலை
அறுத்த விக்ரம வேலி னான்

குவளை வாவித் திருமலைக் குகன்
வளமைப் பண்ணைப் புரவிலே
மறித்த ஆடும் பசுவும் நிரக்க
நிறுத்துத் தரிசை யடித்தபின்
மறுத்து மறுத்து முச்சா லடித்து
மடித்து உழும்நான் குழவிலே
செறுத்த புனலை யுடைத்துக் குழப்பித்
திருந்த வலவ னடியையுந்
திருத்திப் பரம்பும் அடித்துக் குழைகள்
பதித்துச் சமைந்த தொளியிலே
பறித்த நாற்றை நாலு திசையுங்
குறித்து நோக்கிக் கும்பிட்டே
பழக்க மாய்நட வாரும் குரவை
முழக்க முழக்கும் பள்ளீரே. 143

### பள்ளியர் வகை

செந்தில் ஏரகந் திருப்ப ரங்கிரி
எந்தை காவித் திருமலைத்
தெய்வ நாயகன் பண்பைப் பண்ணைச்
செய்யில் நாற்றை நடுதற்கே
மந்தி முகத்து மாடியும் - அவள்
மருமகள் நெட்டைச் சூடியும்
மாலையும் மொண்டிச் சோலையுங் - குறு
வாச்சியும் சின்னப் பேச்சியும்
சந்தியும் பொத்தைக் குந்தியும் மொட்டைச்
சடைச்சியும் பிச்சி உடைச்சியும்
சல்லிப் பொயிலி வெயிலியுங் கட்டைச்
சாத்தி மூளிக் காத்தியும்
நந்தியும் முடச் சுந்தியுங் - கரு
நாக்கியுந் தொந்தி மூக்கியும்
நல்லியுந் தெற்றுப் பல்லியுங் கூட
நடுக வாரும் பள்ளீரே. 144

### அறுசீர் விருத்தம்

குடப்பால் முலைகள் குலுகுலுங்கக்
குழவி யிடுக்கிப் போவாராம்



படப்பால் தோற்பைத் தனம்புரளப்
பற்போம் வாய்மென் றுடன்செலுவார்
இடப்பாற் கரத்தை இடுப்பினில்வைத்(து)
எடுப்பாய்ப் பேசி இறுமாந்து
நடப்பார் சரசஞ் சொலிச்சிரிப்பார்
நாற்று நடப்போம் பள்ளியரே. 145

### நடுகை

### சிந்து

ஆடு மயிலும் நீடு மயிலும்
அமுத மயிலும் புலவர்கோன்
ஆனை மயிலுங் கான மயிலும்
ஆறு முகமு முடையவேள்
பாடுந் தலைமைப் புலமை நிலைமை
படைத்த மலயத் தகத்தியன்
பரவுங் காவித் திருமலைக் குகன்
பண்ணைப் புரவில் நடச்செய்தே
ஓடுங் கெண்டையைக் கூடன் கொழுந்தி
சூடி குனிந்து பிடிக்கிறாள்
உதட்டுச் சங்கிலி கொழுப்பைப் பார்அவள்
கவட்டுக் கீழ்நுழைந் துழக்கியே
மூடுந் தொடையின் அடியைத் தடவி
முட்டுங் கெண்டையைப் பிடியென்றே
முடுக்கு றான்அவள் துடிக்கி றாள்பயல்
முரண்டைப் பாரடி பள்ளீரே. 146

ஏர கந்திரு ஆவி னன்குடி
இலஞ்சிப் பள்ளி திருச்செந்தூர்
இடைக ழித்திருத் தணிப ரங்கிரி
இலகு சோலை மலையில்வாழ்
வீர கஞ்சுகன் கோர வஞ்சகச்
சூர்த டிந்துவிண் காத்தருள்
வேல வன்திரு மலைக்கு கன்பண்ணை
விளங்கும் புரவில் நடச்செய்தே
ஊர கந்தனில் இருக்கும் குடும்பர்
ஆருக்கும் இது பிடிக்குமோ

உடைச்சி கொழுந்தி சடைச்சி முலையில்
தெறித்த சேற்றைச் சுரண்டியே
தூர கந்தனில் பழுத்த பலவின்
சுளையைத் தின்னெனக் கொடுக்கிறான்
துடிக்கி றாள்அவள் உடுத்த சேலையை
அவிழ்க்கிறான் பாரும் பள்ளீரே. 147

அஞ்சு தலைகொண் டசுரர் மடிய
ஆறு தலைகொண் டேழுபார்
அளிக்கும் வேற்கை கொண்டெனை முற்றும்
அடிமை கொண்டருள் குமரவேள்
மஞ்சு தலைகொண் டேறும் இந்திரன்
மிஞ்சு தலைக்கொண் டமரரூர்
வாழ வைத்தருள் திரும லைக்குகன்
வழங்கும் புரவில் நடச்செய்தே
பஞ்சு வெட்டிதன் மகளைக் கறுத்த
குஞ்சு மாடன் கெஞ்சியே
பாக்கு வெற்றிலை தாவென் றான்அவள்
மூக்கைச் சுழித்து வாவென்றாள்
கொஞ்சி யடுத்து மடிக்குள் ஒருகை
மிஞ்ச விடுத்துத் தடவுறான்
குலுங்கக் குலுங்கச் சிரிக்குஞ் சிறுக்கி
குடிலம் பாரும் பள்ளீரே. 148

வெம்பும் அமரர் துயரக் கடலுக்(கு)
அம்பி யானச்ண் முகக்குகன்
விருது கோழியங் கொடியினான் வள
மருவும் ஆவினன் குடியினான்
நம்பி ராா்க்குப தேசஞ் செய்குக
நாதன் வேதத் திருமலை
நாயகன் பண்ணைப் புரவில் பழைய
நாற்றங் காலில் நடச்செய்தே
செம்பி திருட்டு மொழியிலே - அந்த
வம்பி மருட்டும் விழியிலே
திரண்டெ முந்தனக் குடத்திலே - அதிற்
புரண்ட சைந்தகல் வடத்திலே



கம்பி கட்டிய உடையிலே - இடைப்
பம்பும் நட்டணை நடையிலே
கையிலே கையிற் காப்பிலே முத்தன்
கலங்குறான் பாரும் பள்ளீரே. 149

வட்ட வேலையும் கிரவுஞ்ச மென்னும்
மலையும் மடிய வேல்விட்டோன்
வண்ண வாவித் திரும லைக்குகன்
பண்ணைப் புரவில் நடச்செய்தே.
மொட்டை இருளன் மட்டி வாய்ப்பயல்
நெட்டை யழகி முலையினை
முட்டிக் குடிக்கும் எருமைக் கன்றென
எட்டிப் பிடித்துச் சுவைக்கிறான்
சட்டை பண்ணாமற் செய்வ தாரெனப்
பட்ட முடையான் கிட்டப்போய்த்
தலையிலே எட்டிக் குட்டக் கண்டந்தச்
சண்டி குலுங்கச் சிரிக்கிறாள்
கட்டி வெல்லமும் பாலும் போலிவர்
இட்டம் ஆருக்குந் தெரியுமோ
காமன் சேட்டையை உலகி லேஎவர்
காண வல்லவர் பள்ளீரே. 150

கைவ லாளனைச் சூரனை வென்று
தெய்வ லோகத்தைக் காத்தருள்
கந்த மாதனப் பொருப்பினான்-அருள்
வந்த மானகத் திருப்பினான்
சைவ நாயகன் திருமலை யில்முத்
தையன் ஆறிரு தோளுடைச்
சரவ ணகுகன் பண்ணைப் புரவிற்
குரவை முழக்கி நடச்செய்தே
ஐவர்க் கிளையாள் சுமந்த நாற்றொடுஞ்
செய்வ ரப்பினில் விழுந்தவள்
ஆடை யவிழக் கண்ட சங்கிலி
மாடன் அடுக்க ஓடிப்போய்ப்
பைவள ரல்குல் கதுவைக் கண்டிது
பாம்படி பள்ளி பாம்புநான்
பார்வை பார்க்கிறேன் என்று தடவிப்
பார்க்கிறான் பாரும் பள்ளீரே. 151

மன்னைச் சூரனை இரண்டு படுத்தித்
தன்னைப் போல்தெய்வம் ஆக்கினோன்
வள்ளி நாயகன் திரும லைக்குகன்
வளமைப் புரவில் நடச்செய்தே
சின்னச் சிறுக்கி நன்னி தடித்த
வன்னக் குரும்பை முலையினைத்
திகைத்துப் பார்க்கும் பண்ணைக் காரன்
முகத்தைப் பார்த்து நகைத்திடும்
கன்னங் கறுத்த கறுப்பி யைஅவன்
தின்னச் சினங்கொண் டோடிப்போய்க்
கடுக வேநடச் சொல்லி யேதடிக்
கம்பினா லெட்டி யடிக்கிறான்
முன்னம் போயவள் பள்ளன் இருளன்
முந்தி யைப்பிடித் திழுக்கிறான்
முட்டாள் பயலே விலகு கைமிஞ்ச
விட்டால் மோசம் பள்ளீரே. 152

கட்டருந் தலைச் சதம் பத்தாள்
புத்திர னறுங் கத்தான்
கவுணி யர் குலந் தோற்றி மதுரை
அமண ரைக்கழு வேற்றினோன்
கடுத்து முத்தமிழ்க் கீர னைச்சிறை
யடைத்து விடுத்த குமரவேள்
காவி யஞ்சுனைத் திரும லைக்குகன்
கருஞ்செய்ப் புரவில் நடச்செய்தே
சுட்ட சள்ளையைக் கடித்தொரு குத்தி
முட்டிக் கள்ளையுங் குடித்தவன்
சுற்றிச் சுற்றிக் கக்குறான்-தலை
சுழன்று சுழன்று விழுகிறான்
துட்டங் கொண்டுவண் டுறுக்கிறான்-ஒரு
சட்டி நண்டையும் நொறுக்கிறான்
தொட்டு நாடியைச் சொறிகிறான்-ஒரு
கட்டியை எடுத் தெறிகிறான்
ஒட்டை வீசையைத் திருத்துறான்-நடும்
பள்ளியர் தம்மைத் துரத்துறான்
உடைச்சி முலையைக் கிள்ளுறான்-உடல்
உதட்டிலே முத்தங் கொள்ளுறான்



உருட்டி உருட்டி விழிக்கிறான்-உடல்
புரட்டிப் புரட்டி நெளிக்கிறான்
உள்ளங் கையைப் பிசைகிறான்-பச்
சோந்தி போலிருந் தசைகிறான்
அட்டை யிரண்டு பிணைக்கிறான்-மொட்டை
அழகி மடியில் திணிக்கிறான்
ஆலி முலையும் பூலி முலையும்
அளவு பிடித்துப் பார்க்கிறான்
ஆருக் கிணங்கும் வீரக் குடும்பன்
அறிவ ழிந்திடக் குடித்திடும்
அரக்குச் சேட்டையும் குரக்குச் சேட்டையில்
அதிகம் பாரடி பள்ளீரே. 153

**கலிப்பா**

சேவகனே காவித் திருமலையா அன்பருளப்
பாவகனே என்றுமனம் பாவிக்கப் பெற்றேனோ
சாவகனே ரிட்டகொடுஞ் சண்டாள வல்வினையால்
ஏவகனே ஆனேன் எடுத்தசென்மம் பொல்லாதே. 154

**பயிர் விளைதல்**

**சிந்து**

இன்னலம் பெறப் பள்ளி யரெலாம்
பண்பைப் புரவிலே
இதத்துடன் கூடிக் குரவை முழக்கிப்
பதித்த நாற் றெல்லாம்
பன்னிரு செங்கை ஆறு முகனைப்
பரவு வார் நிலை
படைத்துத் தேறுங் குடும்பம் போற்றலை
எடுத்துத்தே றியே
துன்னு கிளைகொண்டு குலவிப் பயிருமாய்
அரை திரண் டதில்
தொடர்ந்து கணுவைத் தெழுந்து கருக்கொண்
டடர்ந்து பொதியு மாய்
மன்னுங் கதிரை நீட்டிப் பாற்கொண்டே
பின்னுங் கற் புடைய
மாதர் போற்றலை வணங்கிச் சிவந்து
வாய்த்து விளைந் ததே. 155

### எண்சீர் விருத்தம்

கையகலு மனநிலச்சஞ் சிதக்கா டெற்றிக்
கருணைபெறுஞ் சிற்பரையேர் பூட்டிப் பூண்ட
மையகல அருட்கொழுவால் உழுதா னந்த
வாரிவிட்டுச் சிவவிதையை வித்தி நாளும்
ஐயனெங்கள் ஆறுமுகக் குருவந் தன்பால்
அனுபூதிப் ப்யிரிட்டின் பம்விளைத் தாற்போல்
செய்யில்நடும் நாற்றெல்லாம் கிளைகொண் டோங்கிச்
செம்பவளம் போல்விளைந்து சிறந்த தன்றே.156

### அறுவடை செய்தல்

#### சிந்து

செந்நெல் விளைந்த செய்தி பண்ணையான்
முன்ன முரைத் திட்ட
திருமலைப் பள்ளன் நாட்கதிர் கொண்டு
சிரத்துச் சுமந்து போயினான்
அன்ன மென்னடை வள்ளி நாயகன்
திரு மலைவாழ் முத்
தையன் சன்னிதிநின்
றனைவருங் கும்பிட்டே
இன்னம் பலம்பெற வயலில் மீண்டுபோய்க்
கூனி ரும்பு கை
எடுத்துக் கதிர்கொய் தரிகள் பரப்பித்
தொடுத்துச் சுமை யாய்
மன்னுங் களத்திற் கொணர்ந்து போர்வைத்தே
மற்றை நாள் அந்த
வளமைப் போரைச் சரித்துப் பகட்டின்
பிணையல் பிணைக்கின்றார். 157

பூட்டும் பிணையல்கள் பிடித்துவைக் கோல்களைந்(து)
ஒருமுகப் படப்
பொலியைக் கூட்டி முறத்தி னாற்பதர்
போக வீசியே
கோட்டைங் கரனை முனம்வைத்தே குடும்பன்
பாட்டக் கால்கொண்டு
குடங்கை கட்டி யளந்தம் பாரமாய்க்
குவித்துக் குறியிட்டார்



ஈட்ட மாயுழு தான குடிகட்கே
குடிச்சு தந்த்ரமும்
ஈந்து பிள்ளையா ரடியும் பேறும்
இனிது கைக்கொண்டான்
சீட்டும் எழுதிப் போட்டு முத்தையன்
வருடப் பூசைக்குச்
சிறந்த ஆயிரத் திரட்டி நெல்வகை
சேரில் கட்டினானே. 158

### மூத்த பள்ளி சண்டையிடல்

சேரிற் கட்டிய திருமலைக் குடும்பன்
உள்ள பேறும்
திருட்டுப் பேறும் இளையவள் பேர்க்கே
கொடுத்து மூத்தவள்
காரியக் காரி யாக இருந்துமே
பள்ளனார் வெறுங்
கையைக் காட்ட வெய்ய கோபக்
காரி சீறியே
ஆரும் அறியக் கொண்ட பள்ளனென்றே
நச்சு மரத்தைநான்
ஆணி வேர்விழு மட்டும் வளர்த்து
வீணி யானேனே
பாருமே வைப்புக் கூத்தி யானநன்
னகரப் பள்ளிக்குப்
பங்கிங் கேதென மூத்த பள்ளி
சண்டை பிடிக்கிறாள். 159

### பள்ளியர் ஏசல்

#### சிந்து

இ: வைப்புக் கூத்தி யாரடி தென்
பண்பையிற் பள்ளி-நீயுன்
வாய்நினைந்த சொற்சொல் லாதே
வம்பி நானடி

மூ: ஒப்புக் கொப்போ நன்னகரப்
பள்ளி திருட்டால்-உண்ட

ஊறு படைத் தாலெதிர்த்து
வீறு பண்ணாதே. 160

இ: பண்ணைக் கடாப் போற் பருத்த
பண்பையிற் பள்ளி-கொண்ட
பள்ளனுக்கு ரெண்டு செய்யும்
பரத்தை நீயடி

மூ: கண்ணைக் காட்டிக் காசு தண்டும்
நன்னகர்ப் பள்ளி-வண்டக்
காளியுனைப் போலு முண்டோ
கந்தலே போடி. 161

இ: கந்த லென்றாய் நீயோ நானோ
பண்பையிற் பள்ளி-உன்னைக்
கண்ட வழி போக லாமோ
குண்டணிக் கள்ளி

மூ: சொந்த மாகக் கொண்ட வனைச்
சொக்குப் பொடியால்-நீயுஞ்
சொன்னபடி ஆட்டி வைத்தாய்
நன்னகர்ப் பள்ளி. 162

இ: ஆட்டிப் பேசிக் கொண்ட பள்ளைப்
பண்பையிற் பள்ளி-குட்டை
அடித்தாய் சீலை பாம்பாய்ச் சுற்றிக்
கடித்தது போலே

மூ: மேட்டிக் காரி நன்னகரப்
பள்ளி நீயும்-குட்டை
விடுத்தாய் உன்னைப் போலப் பள்ளி
உலகத்தி லுண்டே. 163

இ: உண்ட பேர் வாழ்த் திட வேண்டாம்
நொந்த பேர் திட்டிட வேண்டாம்
உன்புத்தி துர்ப்புத்தி போமோ
பண்பையிற் பள்ளி

மூ: கண்ட பேர்முன் பல்லைக் காட்டி
நீட்டிப் பேசும்-வண்டக்



கன்னக் காரி உன்னைப் போலார்
நன்னகர்ப் பள்ளி. 164

இ: பள்ளர் பள்ளி யர்சி ரிக்கும்
பண்பையிற் பள்ளி-உன்னஞ்ஞைப்
பள்ள னஞ் சானைக் கேளு
கன்னியைக் கேளு

மூ: உள்ள தேடி நன்னகர்ப் பள்ளி
பள்ள னிருளன்-விளை
யொட்டு கையைக் கேளு பள்ளன்
பட்டடையைக் கேள். 165

இ: பட்டடை நெற்கள்ளி பண்பைப்
பள்ளி போடி-சந்திரனைப்
பார்த்து நாய் குரைக்கி லென்ன
பழுது வருமோ

மூ: அட்டி பேசும் நன்னகரப்
பள்ளி முதுகிற்-புண்
ணுடையான் போக்கல்லோ கூனி
மேனி மினுக்கும். 166

இ: மேனி மினுக் காய்த் திரியும்
பண்பைப் பள்ளத்தி-சும்மா
வீணில் மெல்லும் வாயில் அவல்
காணிலென் செய்யார்

மூ: ஊன மும்மா னமும் இல்லா
நன்னகாப் பள்ளி-உனறன்
ஓட்டை வாயை மூடெ திர்த்துப்
போட்டி பண்ணாதே. 167

இ: போட்டி பண்ண வேண்டா மென்ற
பண்பையிற் பள்ளி-கொல்லும்
புலியேடி நீயென் கண்ணுக்
கெலியடி கள்ளி

மூ: ஓட்டிப் பேசும் நன்னகரப்
பள்ளி தள்ளிப்போ-நீயும்

உன்நாயன் என்நாயன் என்றென்
முன்னம் பேசாதே. 168

இ: சாடி சொல்லும் பண்பைப் பள்ளி
உன்நாயன் போலே-நீயுன்
தகப்பன் சாமிக் குணமென்றன்
முகத்திற் காட்டாதே

மூ: போடிபோ நன்னகர்ப் பள்ளி
உன்நாயன் போலே-சீலை
போட்டா டாதே காப்புக் கையை
நீட்டிப் பேசாதே. 169

இ: பேச்சிபோ பண்பையிற் பள்ளி
உன்நாய னேய்க்குங்-குறப்
பெண்ணென் றென்னை எண்ண வேண்டாம்
எண்ணிப் பேசடி

மூ: ஆச்சடீ நன் னகர்ப் பள்ளி
தாரு காவனத்-துங்கள்
அண்ணல் கொள்ளச் சீலை போட்ட
பெண்ணென் றெண்ணாதே. 170

இ: ஆமடி பண்பையிற் பள்ளி
உன்நாய னோது விக்கும்
அண்ணாவியைக் குட்டுந் தொழில்
பண்ணாதே போடி

மூ: ஓமடி நன் னகர்ப் பள்ளி
மாமன் தலையை-முன்னாள்
உன்நாயன் அறுத்தகுணம்
என்முன் பண்ணாதே. 171

இ: மன்னிப் பேன் பண்பையிற் பள்ளி
உன்நாயன் முன்னாள்-ஏற
மயில்குஞ்சு பிடிக்குங் கள்ளப்
பயில் பண்ணாதே

மூ: என்னடி நன்னகர்ப் பள்ளி
உன்நாயன் ஆட்டை-முன்னம்



எடுத்து மாறன் அடிக்கப் பட்ட
குணத்தைக் காட்டாதே. 172

இ: கொள்ளித் தேளே பண்பையிற் பள்ளி
உன் நாய னைப்போற்-காட்டிற்
குறத்திக் காக வேங்கை யான
குடிலம் பண்ணாதே

மூ: கள்ளத்தி நன்னகர்ப் பள்ளி
உன்நாயன் போல-வேடன்
கண்ணைப் பிடுங்க அழுது நின்ற
களவு பேசாதே. 173

இ: கந்தலே பண்பையிற் பள்ளி
உன்நாயன் போல-நீயுங்
கடுத்துப் பேசும் பேச்சைச் சற்றே
எடுத்து விடடி

மூ: பந்தமுறப் பேசா தேநன்
னகரப் பள்ளததி-சாவும்
பஞ்சமே உன் நாய னைப்போல்
நஞ்சு தின்னடி. 174

இ: கேடி பண்பைப் பள்ளி வள்ளி
முன்னம் உன்நாயன்-செல்லுங்
கிழட்டுருவம் வந்தாற் புத்தி
மடித்துப் போமோடி

மூ: மோடியாய்த் தாருகா வனத்
துன்நாயன் கூட்டிப்போஞ்-சித்ர
மோகினி நீ யானால் தேடி
முடிந்து கொள்ளடி. 175

இ: கூறிடப் பண்பையிற் பள்ளி
உன்நாயன் பிடிக்கும்-நீருள்
கொக்கல்ல என் நாயன் வெள்ளிக்
குன்றம் நானடி

மூ: வீறுடன் நன்னகர்ப் பள்ளி
உன்னுடைய நாயன்-வலை

வீச்சிற் பட்ட மீனல்ல நான்
பூச்சை யாமடி. 176

இ: சண்டி பண்பைப் பள்ளி போடி
உன்னுடைய நாயன்-முலைத்
தாயர் ஆறு பேர்போல் தீயாய்
நீவழங் காதே

மூ: நண்டு தின்னும் நன்னகரப்
பள்ளி உன்நாயன்-மெல்ல
நகைக்கும் புகைத் தழல்போல் நீயும்
பகைத்தென் செய்வாய். 177

இ: கூதறைப் பண்பைப் பள்ளியுன்
நாயன் கள்ளமாய்-அம்மை
கொண்டைக் குள்வண் டாயிருந்த
குழல் காட் டாதே

மூ: ஏதடி நன்னகர்ப் பள்ளி
வண்டோ தரியை-உங்கள்
ஈசன் போய் மருவுங் கள்ளப்
பூசல் பண்ணாதே. 178

இ: பண்பைப் பள்ளி நீயு மொரு
செட்டி யடியாள்-தெய்வப்
பாண்டியன் அடியாள் நானும்
பயப்படு வேனோ

மூ: தின்பதற்குப் பிச்சை கொள்ளும்
ஆண்டி யடிமை-நீயும்
தெய்வ ராயன் அடிமை என்னைச்
சீறியென் செய்வாய். 179

இ: வாய்வீண் பேச வேண்டாம் பண்பைப்
பள்ளி உன்நாயன்-முன்னாள்
மலையை யரிந் தாற்போல் மூக்கும்
முலையும் அரிவேன்

மூ: நாயனைய நன்னகர்ப் பள்ளி
அன்று காலனை-உங்கள்



நாய னுதைத் தாற்போ லுன்றன்
வாயி லுதைப்பேன். 180

இ: நல்லது பண்பையிற் பள்ளி
என்நாயனை ஒப்பாய்ச்-சொல்லும்
நாக்கிலே சுண் ணாம்புக்குறி
தாக்கு வேனடி

மூ: அல்லடி நன்னகர்ப் பள்ளி
நீயுஞ் சொல்லாதே-சொன்னால்கை
அரிவாளால் உன் நாக்கை
அரிந்து போடுவேன். 181

இ: பண்பைப் பள்ளி சொல்ல வாடி
நாயன் பேர்சொல்லல்-பொல்லாப்
பள்ளச் சாதிக் கியல் பல்ல
தள்ளிப் போ போடி

மூ: பின்பு முன்பெண் ணாமற் பேசும்
நன்னகர்ப் பள்ளி-நாயன்
பேரைநீ யல்லோமுன் சொன்னாய்
பேச்சிபோ போடி. 182

இ: சாதிப் புத்தி நாயனை நாம்
வேறு படவே-சொன்னால்
தந்தைக்கும் தந்தை மகற்கும்
நிந்தனை யுண்டோ

மூ: பேதமாகச் சொன்ன பேர்க்கே
தோச மல்லாமல்-அண்டம்
பேரு கினும் பேதி யாத
சோதிக் கென்னடி. 183

**சமாதானமாதல்**

இ: பெருமையாய்த் தங்கச்சி யென்றெண்
ணாமற் பேசினாய்-நீயும்
பெற்ற பிள்ளை யானால் சொல்லப்
புத்தி வருமே

மூ: அருமையான தாய்த்துணை யல்லோ
துணையென்றே-நீயும்

அன்பு வைத்தாற் சண்டையுண்டோ
தங்கைப் பள்ளத்தி. 184

போன தெல்லாம் போகட்டும்
நாமிரு பேரும்-பள்ளன்
புத்திக் குள்ளாய் வாழ்ந்தி ருப்போம்
சித்திர மாக

வானவர் தொழுங் குற்றாலர்
திருமலை வேலர்-பதம்
வணங்கி வாழ்வோம் நாமிருபேர்
இணங்கி நாளுமே. 185

### வாழ்த்து

#### நேரிசை வெண்பா

வாழிதிருக் குற்றாலர் வாழி திருமலையான்
வாழியடி யாருலகம் வாழியவே-வாழியிந்தச்
செந்தமிழைக் கற்றோர் செவியாரக் கேட்கின்றோர்
சந்ததமும் வாழி தழைத்து. 186

திருமலை முருகன் பள்ளு முற்றிற்று



உ

# வையாபுரிப் பள்ளு

## பழனிச்சமீன்
## குமார விசயகிரி வேலச் சின்னோவையன்

### காப்புப்பாயிரம்

#### விநாயகர் துதி

கலிப்பா

பூமேவு வேலணிந்த பொற்கமலக் கையசைய
மாமேவு தென்பழனி வள்ளல்மகிழ் பள்ளிசைக்கே
நாமேவு சொற்புலவோர் நாவினுக்கு மெட்டாத
காமேவு பாதிரைவாழ் கணபதிதாள் காப்பாமே. 1

#### கைலாச நாதர் துதி

சிந்து

சீர்கொண் டருள் சிவனவ ரூபன்
தீரன் ரண சூரப்ர தாபன்
திகழ்மணி நீபத்
தொடையணி வேலன்
சிறுதண்டைக் காலன்
பார்கொண் டாடு முருகையன் மீதில்
பைந்தமி ழால டியேனிப் போது

பத்தன் மனோ
ரதம்நிறை வேறப்
பள்ளேசல் கூற
ஏர்கொண் டருள் திருமகள் மலைமகள்
இயல்கொண் டருள் நிலமகள் கலைமகள்
இணையடி தன்னை
மனதினி லணிவேன்
என்றைக்கும் பணிவேன்
தார்கொண் டருள் பணிகுழைக் காதனைத்
தமிழ்பா டிய கயிலாச நாதனைச்
சந்தத மும்மே
மகிழ்வொடு விள்வேன்
தலைமிசைக் கொள்வேனே. 2

## பெரிய நாயகியம்மை துதி

### சிந்து

கவளமத யானைக்கு மிளையோன்
கருணாகரன் மூவர்க்கும் பழையோன்
கானக் கலை
மனமகிழ் மோகன்
கனிமொழி பாகன்
பவளநிறச் செஞ்சோதி மெய்யன்
பழனிச்சிவ கிரிமுரு கையன்
பள்ளே சலை
விரவியே பாடப்
பலன்மெத்தத் தேட
உவமானமி லாதசு சீலன்
ஒவளவி சையகோ பாலன்
உடன்பிறந் தவள்
நீலிகல் யாணி
ஒளிர்நிரு வாணி
சிவசாம்ப விபழனித் துரைமகள்
திறமுலவு பெரியவள் வரைமகள்
சீர்பாதந் தனைப்
போற்றியே யடியேன்
தினஞ்சற்றுஞ் சடியேனே. 3



## மருதகாளியம்மை துதி

### சிந்து

விதிமுதலா முனிவோர்தொழு பாதன்
விசையகிரி வாக்குப்ர சாதன்—விகடதட
குக்குடத் துவசன்
விபுதர்மெய்க் கவசன்
ததியைநுக ரரிதிரு மருகன்
சங்க்ராம சிவாசல முருகன்—தயவுகூர்பள்
ளேசலைப் பாடத்
தரணிகொண் டாடத்
திதிபெறவான் மீகவி யாசனைச்
சிங்கார முத்தையவுல் லாசனைத்—தினமும் போற்றியென்
மனுவையுஞ் சொல்வேன்
செருநரை வெல்வேன்
அதிகவற்கு வரத்தையுங் கொடுத்தே
அடியேனையிப் புவிமிசைத் தடுத்தே — ஆட்கொள்மருத
காளியைப் புகழ்வேன்
அதர்மத்தை யிகழ்வேனே. 4

## சின்னோவள், பெரியோவள், எர்ரக்கம்மன் துதி

### சிந்து

திசைகொண்ட பராபர நாதன்
சிகிவாகன நடநவி னாதன்—சிவனுக்குப
தேசமும் பகர்வோன்
தினைமாவை நுகர்வோன்
பசைகொண்டவில் வேடர்க்குத் தமரன்
பழனிச்சிவ கிரியில்வாழ் குமரன் - பள்ளேசலைத்
தமிழினா லோதப்
பரிசக லாத
இசைகொண்ட குமாரச்சின் னோவய்யன்
இயல்கொண்டரு ளபரஞ்சி பூபன்—இணையடிதனை
......... ........
தலைமிசைக் கொண்டேன்
நசைகொண்டருள் பெரியோவ ளம்மனும்
நலன்கொண்டருள் சின்னோவ ளம்மனு—நயமுயர் எர்ரக்

கம்மனைத் துதிப்பேன்
நயம்பெறக் கதிப்பேனே. 5

## அவையடக்கம்

### எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பருவதனப் பள்ளேசல் முருகன் மீதிற்
பைந்தமிழாற் சொன்னதெந்தப் படியே யென்றால்
உருவதனச் சேடன்முன்பு நாகப் பூச்சி
யோடினபோற் சந்திரன்முன் னுடுக்கள் போலும்
திருவதன நாலிருக்கும் விரும தேவன்
சிருட்டிமுன்பு விசுவமித்ரன் சிருட்டி போலும்
குருவதனப் பெரியோர்கள் கவிதை முன்னே
குணமிலா வென்கவிதைக் கொள்கை தானே. 6

காப்புப்பாயிரம் முற்றிற்று

# நூல்

## பள்ளிகள் வரவு

### கலிப்பா

மாவளமுஞ் சேர்ந்திலகு மணிவளமு மேகொழிக்கும்
பூவளமும் வையா புரிவளத்துக் கதிபதியே
நாவளத்துக் கேற்கவரு நல்வளஞ்சேர் சிவகிரியான்
பாவளமுஞ் சேரவயற் பள்ளியர்வந் தெய்தினரே. 7

## வையாபுரிப்பள்ளி வரவு

### இராகம்: சௌராஷ்டிரம். ஆதி தாளம்

திங்கள் நுதல் மஞ்சணைப் பொட்டும்
இங்கி தப்பேச் சில்வெகு பகட்டும்
செங்கழுகக் கழுத்தினில் மெட்டும்
சிறந்ததைத் தட்டும்
சங்குகு தாலி மணிவட மிலங்கக்
கொங்கை மதக் கோடுகள் குலுங்கச்
சந்த்ரோதய வதனமுந் துலங்கச்
சரிவளை யலுங்க



கொங்கு யரு மடவன்ன நடையும்
தங்கக் கொடி போன்றசிற் றிடையும்
கோலத்தினுக் கேற்றபட் டுடையும்
குழைசொருக் கடையும்
வங்க ணஞ்செய் திருநீறு பூசிச்
செங்கமலக் கைகளை வீசி
வையாபுரிப் பள்ளியும் வந்து
தோன்றி னாளே. 8

## பழனிப்பள்ளி

### கலிப்பா

தெள்ளித் தெளியவைத்த தேனுந் தினைமாவும்
அள்ளிப் புசித்தமுரு கன்பண்ணைப்—பள்ளியர்க்குட்
கள்ளி மருந்தீட்டுக் கள்ளியவ ளாமிளைய
பள்ளி வருமழகைப் பார்க்கவிழி கொள்ளாதே. 9

## தரு

### இராகம்: சௌராஷ்டிரம். ஆதி தாளம்

மஞ்ஞ்சள் மணம் வீசிய மெய்யும்
கொஞ்ஞ்சிப் பேசி யாடிய கையும்
மலைமுலையுஞ் சுமையினா னையும்
மருங்கலகுப் பையும்,
பஞ்ஞ்சி லைக்கெண் டைகளென விழியும்
கிஞ்ஞ்சு கவாய்ப் பசுங்கிளி மொழியும்
பாக்குத்தான் தின்றபல் லொளியும்
படர்ரோம வழியும்,
ரஞ்ஞ்சி தமிஞ் சியகொண்டைச் சொருக்கும்
மஞ்ஞ்ச னப்பின் புறஞ்சரிந் திருக்கும்
நாடினவர் மனத்தையு முருக்கும்
நடைசெல்லுஞ் செருக்கும்
செஞ்ஞ்சந் தனப் பொட்டொளி மின்ன
அஞ்ஞ்ச னமா மடமயி லென்னத்
தென்பழனிப் பள்ளியும் வந்து
தோன்றி னாளே. 10

## பள்ளன் வரவு

### கலிப்பா

அமரர் சிறை மீட்டருளி யருணகிரி விசையகிரி
நமதடியா னென்றவர்சொன் னாற்கவிதைக் காகினவன்
சமரமிட்ட சூரனையுஞ் சத்தியினாற் சத்தி செய்யும்
குமரவேள் பண்ணைக் குடும்பன்வந்து தோன்றினனே. 11

### தரு

### இராகம்: குறிஞ்சி, அடதாளச் சாப்பு

உன்னிப்பேசி யேயுலாவி
மின்னியசந் திரகாவி
யுருமால்த லையிற்கட்டி
யோடியதட்டிப்
பின்னுமுன்னி டுப்பிற்கட்டி
வன்னச்செங்கச் சையைக்கட்டி
பேசிக்கைத்த டியைவீசிப்
பிறைநீறுபூசிச்
சன்னமாய்மீ சைமுறுக்கிக்
கன்னப்பரி சைநறுக்கிச்
சாராயவெ றிகதித்துத்
தாவிக்குதித்து
மன்னியக தம்பவாசம்
தன்னுடம்பி னிலேவீச
வையாபுரிக் குடும்பனுந்
தோன்றி னானே. 12

## பள்ளன் தன் பெருமை கூறல்

### கலிப்பா

நீர்க்குடும்பன் கோட்டுமதி நிகர்பன்றிக் கோட்டிணைக்கு
மேர்க்குடும்பன் கனகசபை யெம்பிரா னுந்தருவோன்
பார்க்குடும்ப னார்கிருபைப் பங்கயஞ்செய் யுங்குமரன்
பேர்க்குடும்பன் தன்னுடைய பிரதாபஞ் சொல்லுவனே. 13



### சிந்து

### இராகம்: குறிஞ்சி. அடதாளச்சாப்பு

முத்துக் கீடாய்ப் புவியில்நெல்
வித்தைப்பொலி யுண்டுசெய்து
முறையாயறாச் செங்கோலுக்கு
மூன்றுசெங்கோலாய்
வித்தாரமு ழக்கோல்தாங்கி
நித்திலமு டிக்கிணையாய்
மேதினியிற் செந்நெல்முடி
வேண்டிப்படைத்தோன்
சித்திரஞ்சேர்ந் தருள்பல
பத்திரனுக் காசிதந்த
தேவேந்திரப் பள்ளனுநான்
செங்கழுநீர்சேர்
கொத்துலவு மார்பனாகி
எத்தலம்போற் றும்பழனிக்
குமரற்க டிமையான
குடும்பனானே. 14

சத்திசேர்சி வகிரியைச்
சுற்றிவலஞ் செய்யார்காலைத்
தானேயேர்க் காலிற்பூட்டித்
தன் கொடிக்காலில்
மொத்துண்டுவி ழப்போடுவேன்
பத்தியாய்ச்ச டாட்சரத்தை
முழுதுமறி யாதார்க்குக்
கொழுப்பாய்ச்சுவேன்
எத்தனைசெ யல்பெற்றாலும்
முத்துக்கும ரேசனையும்
ஏழிக்கையாய்ப் போற்றார்கையை
மேழிக்கைசெய்வேன்
வத்திரங்க ளோராறும்ப
டைத்தமுரு கையன்பண்ணை
வையாபுரிக் குடும்பனு
நானேயாண்டே. 15

## பள்ளியர் குடித்தனங் கூறல்

### கலிப்பா

பவ்வத் தறலினுக்கும் பருப்பதத்தி னிற்குமிடை
குவ்வித்த சூரர்கிளை குடிக்கும்வடி வேல்விடுத்தோன்
திவ்யபரஞ் சோதியெனுஞ் சிவகிரிவேள் தாள்போற்றிக்
கொவ்வையிதழ்ப் பள்ளியர்தங் குடித்தனங்கள் கூறுவரே. 16

## மூத்தபள்ளி

### தரு

### இராகம்: நாதநாமக்கிரியை. ஆதி தாளம்

காசியிம்மா சேதுமட்டும்
தேசப்பிரக் கியாதியான
கன்னன்வி சையகிரிச்
சின்னோவய்யன்
ராசனெங்க ளதுபிர
யாசையத றிந்ததுரை
நாட்டினிற்பள் ளருக்குளே
மேட்டிமைபெற்றோம்
நேசித்துத்த. லத்திற்பிர
காசமாஞ்சி வகிரியும்
நிலைத்திடுமந் நாளிலிந்தத்
தலத்தில்வந்தோம்
வாசனன்சி வகிரியுல்
லாசனுக்க டிமையான
வையாபுரிப் பள்ளியும்
நானேயாண்டே. 17

அன்றென்னையு முரிமைப்பெண்
என்றஞ்சுவ யதினிலே
அருப்பம்வ ராதமுன்பு
மறித்துக்கொண்டான்
நின்றவன்கா லாற்சொன்னது
நன்றென்றுகை யாற்செய்குவே



னென்னைத்தள்ளி நில்லென்று
முன்னேசொல்லான்
மன்றல்வாழ்க் கைப்பட்டநாள்
அன்றுதொடுத் துப்பள்ளன்
மனையிற்பால் பொங்கினாற்போல்
தனமுமாச்சு
வென்றிவ ராககிரிக்
குன்றுமேல் விளக்குப்போல்
விளங்குங்கு லத்தில்வந்து
வளர்ந்தேனாண்டே. 18

## இளைய பள்ளி

செல்லமா கவளர்ந்த
நல்லபெண் வேணுமென்று
தேடிப்பார்த் தென்னைக்கட்டிக்
கூடிக்கொண்டான்
நல்லவ ளென்றுநானும்
எல்லோர்க்கும் பேரெடுத்து
நாத்திமார் நங்கைமாரை
வாழ்த்திக்கொள்வேன்
பொல்லாத வளென்றுதான்
சொல்லாத தைச்சொல்லிப்
புருசன்வை தடித்தாலும்
வரிசைவிடேன்
தில்லையத்துக் காட்டாளி
யல்லவேயொ ருவர்போலத்
தென்பழனிப் பள்ளியும்
நானேயாண்டே. 19

## பள்ளியர் நாட்டுவளங் கூறல்

### கலிப்பா

கோட்டுவள மெல்லாங் குயில்வளமும் வண்டினத்துப்
பாட்டுவளங் கூட்டிநிற்கும் பரப்புவளம் பூத்தமலர்க்
காட்டுவள மருதவளங் காவளவை யாபுரிநல்
நாட்டுவளந் தன்னையொரு நாவளத்தாற் கூறுவரே. 20

## சிந்து

### மூத்தபள்ளி

**இராகம்: யதுகுலகாம்போதி, அடதாளச் சாப்பு**

புன்னை யேறிமந் திதென்னை பாயும்
புனமெ லாமுருக னடிமலர் தோயும்
அன்ன மொன்றுக்கொன் றூடலாற் காயும்
அனங்கன் சாத்திரத் தைக்கிள்ளை யாயும்
மின்னுந் தேனிறாற் சுமந்தந்த வேயும்
வெளிறு பாதிரிச் சோலையிற் சாயும்
மன்னுங் கற்பக நாடெங்குஞ் சூழ்ந்த
வளர்வை யாபுரி நாடெங்கள் நாடே. 21

### இளையபள்ளி

மாமரம் வெய்யோன் தேரைத் தடுக்கும்
மந்தி வண்டுக்குக் கனியைக் கொடுக்கும்
பூமியி லிந்திர கோபம் படுக்கும்
புயல்கண்டு சிங்கம் வாலை யொடுக்கும்
தாமரை முத்தை யன்ன மெடுக்கும்
தன்முட்டை யென்று சிறகி லொடுக்கும்
தேமலர் வாவி கூவநி றைந்த
சிறந்த தென்பழனி யூரெங்க ளூரே. 22

### மூத்தபள்ளி

தாதவிழ் சந்த்ர காந்தி நிலாவும்
சாளர வாயி லெங்கு முலாவும்
கோதி லாமேடை யைமுகில் தாவும்
கொடித்துசம் பானு குதிரைமெய் நீவு
மாதி யாஞ்சோலை யிற்குயில் கூவு
மதின்மீ திற்காவி மலரையுந் தூவும்
மாத விமரு தாவள மோங்கிய
வளர்வை யாபுரி நாடெங்கள் நாடே. 23

### இளைய பள்ளி

தண்டா மரையிற் சேர்ந்தன்னப் பேடு
சருவிக் கிரீடிக்கத் துணையன்னந் தேடும்



வண்டி னங்களுங் கீதங்கள் பாடும்
மந்தி கள்சத்த தாளங்கள் போடும்
அண்டி யேகரடி தித்தியைக் கூடும்
அதுகண் டுமஞ்ஞை பூங்கொப்பி லாடும்
தெண்டா யுதக்கை வேல்முரு கையன்
சிறந்த தென்பழனி யூரெங்க ளூரே. 24

### மூத்த பள்ளி

அடிக்கக் கண்டது சூடு சுருணை
அதிரக் கண்டது பேரிகைச் சத்தம்
பிடிக்கக் கண்டதி ருசுடர்க் கிரகணம்
பிரியக் கண்டது கருப்பம்பா கெண்ணெய்
தடிக்கக் கண்டது பேதையர் கொங்கை
தனிப்பக் கண்டது யோகிய ருள்ளம்
வடிக்கக் கண்டது பூமலர் தேன்கள்
வளர்வை யாபுரி நாடெங்கள் நாடே. 25

### இளைய பள்ளி

கதறக் கண்டது பெண்கள்சி லம்பு
கலங்கக் கண்டது வெண்டயிர்க் கண்டம்
விதுரக் கண்டது காக்கைகு யிற்குஞ்சு
வெடிக்கக் கண்டது சரமல்லிக் காய்கள்
பதறக் கண்டது மதனவேள் பாணி
பறக்கக் கண்டது பட்சிக் குலங்கள்
சிதறக் கண்டது பூஞ்சோலைப் புட்பம்
சிறந்த தென்பழனி யூரெங்க ளூரே. 26

### மூத்தபள்ளி

மெச்சு நாலைக்கன் னல்முத்தந் தெறிக்கும்
வேழம் பெண்க ளபயம் பறிக்கும்
செச்சை யில்பெண்கள் முகநிலா வெரிக்கும்
செவ்வி மாமுக மலர்ந்ததைப் பரிக்கும்
அச்சு வத்தமும் விதுவை மறிக்கும்
அருங்கு யிலுமாந் தளிரைக்கத் தரிக்கும்
மச்சு மாடகூ டகோபு ரங்கள்சூழ்
வளர்வை யாபுரி நாடெங்கள் நாடே. 27

**இளையபள்ளி**

குடவ ளைக்குல மின்மணி கொழிக்கும்
குஞ்சு மீனெதிர் பாலுண்டு களிக்கு
முடனை யேயதைக் கண்டாமை பழிக்கு
முரம்பெல் லாமுந்தேன் பாய்ந்துதத் தளிக்கு
மடைவா யின்மச்சம் பாய்ந்துக ளிக்கும்
மந்திக் குட்டிகள் நண்டைக்கண் டொளிக்கும்
திடவே திகையில் மும்முர சொலிக்கும்
சிறந்த தென்பழனி யூரெங்க ளூரே. 28

**குறியிற் கூக்கேட்டல்**

**கலிப்பா**

தாவாயா னைச்சிறையி னாட்டிவைத்தோ னாட்டிலொன்றும்
பாவாயே மாந்தளிரைப் பாராய்கா ரொன்றுகுழல்
காவாயி லங்குமென்றே களறியே கடைசியர்கள்
கூவாயென் றந்தக் குயின்மொழியைக் கூறுவரே. 29

**சிந்து**

**இராகம்: நாதநாமக்கிரியை. சம்பை தாளம்**

சத்துருசங் காரனெங்கள்
பழனிச்சிவ கிரிவேலன்
சந்நிதியுந் தழைக்கவே-கூவாய்குயிலே

அத்தர்சிவ பத்தரரி
பத்தர்விப் பிரமர்களும்
அம்புவியில் வாழவே-கூவாய் குயிலே

புத்திரர்ப சுக்குலங்கள்
கற்புடைய பத்தினியர்
பொற்புலவி வாழவே—கூவாய் கு ிலே

வித்வசன ரும்பெரிய
தத்துவமு ணர்ந்தவரு
மேன்மைபெற்று வாழவே-கூவாய் குயிலே 30

திங்களுமும் மாரிபெய்(து)
எங்கும்விளை வேறவே
செங்கோன்மை தழைத்தோங்கக். கூவாய் குயிலே



பொங்குமுயர் வையாபுரி
நாடுங்கற் பகநாடு
போற்செழித் தோங்கவே—கூவாய் குயிலே

வங்கார சமுத்திரமை
யன்பள்ளிக் குளமுதலாய்
வையாபுரிக் குளநிறையக்—கூவாய் குயிலே

கங்குல்செறி யாறாறு
நூறாருய ரட்டமங்
கலமீராறு பள்ளியோங்கக்—கூவாய் குயிலே. 31

விருதுகட்டா ரிராயன்
கருதுவாகைத் தொடையலணி
வேடர்குலந் தழைத்தோங்கக்—கூவாய் குயிலே

திருமருவு புயசயில
வேலச்சின் னோவதுரை
தீர்க்காயு சாயிருக்கக்—கூவாய் குயிலே

மருவுலவு சண்டன்வங்கி
சம்வோவு மஞ்சள்மணம்
மாறாமல் வாழவே—கூவாய் குயிலே

துரைவிசைய கிரிவேலச்
சின்னோவய் யன்பட்டந்
துருவப்பட்டம் போல்விளங்கக்—கூவாய் குயிலே. 32

**மழைவேண்டித் தெய்வம் பராவல்**

**கலிப்பா**

கூடிக் கலகமிட்ட கொள்ளையிட்ட சூரனையும்
பூடிற்றுப் போகப் பொருதமுரு கையனையும்
பாடினார் பொங்கலிட்டுப் பள்ளரெலாங் கூட்டமிட்டுத்
தேடிக் குரவையிட்டுத் தெய்வநிலை போற்றுவரே. 33

**சிந்து**

**இராகம்: நாதநாமக்கிரியை. ஆதி தாளம்**

பாடியசி வகிரிமு
ருகனார்பண்ணை—வயல்

பள்ளரெல்லோ ருங்கூடி
வெள்ளிதனிலே

ஆடுவெட்டிப் பொங்கலிட்டுச்
சாடுநிறைய—இரண்
டாயிரம்ப ழங்கள்வைத்துக்
கோயிலின்முன்பு

வேடிக்கையாய்ச் சாம்பிராணித்
தூபங்கள்போட்டுப்—பயிர்
விளையவே நல்லநல்ல
மழைபெய்யவே

கூடிநின்ற கொள்ளுக்கஞ்சித்
தெய்வங்களெலாம்—வந்து
கும்பிட்டுப் போற்றுங்கடா
கம்பளத்தாரே. 34

வாழ்த்துங்கோ மீன்பாரைக்
கன்னிமாருக்குப்—பச்சைப்
பாளைபரப் பும்பால்
நாழிவையுங்கோ

காத்தவ ராயனைப்
போற்றிக்கொள்ளுங்கோ—நம்மள்
கன்னடிய மூர்த்தியை
முன்னேதொழுங்கோ

தீர்த்தப்பிர சன்னரான
ரெங்கசாமியை—நீங்கள்
தேடியே தெண்டனிட்டுப்
பாடியாடுங்கோ

தோத்திரஞ்செய் துதாடகை
நாச்சியாருக்கு—நல்ல
தொண்ணூற்றஞ் சுருவாரம்
பண்ணிவிடுங்கோ. 35

குன்னுவப்பி டாரியம்மன்
தன்னைக் கும்பிட்டே—யொரு



குட்டிவெட்டிப் பொங்கலிட்டு
முட்டை வையுங்கோ

மன்னுலகில் வாழ்மருத
காளித்தாயார்க்கு—நீங்கள்
வழக்கிட்டுக் கொள்ளாமல்மா
விளக்குப்பாருங்கோ

கண்ணான வம்மாபட்டிக்
கருப்பனுக்கே—யொரு
காங்குக்கச்சை கையரிவாள்
வாங்கிவையுங்கோ

பண்ணிகுத்தி யணையேத்தஞ்
செய்தவிடத்தில்—நீங்கள்
பத்தியுடன் சாராயக்
குத்திவையுங்கோ. 36

## இதுவுமது

**இராகம்: சங்கராபரணம். அடதாளச்சாப்பு**

நாடெங்கும் வாழ்ந்திடவே—வையாபுரி
நாடுசெ ழித்தோங்கப்
பூடெங்கு மாதமும்
மாரிபொ ழியவே
பூம்பாரை வேலவற்கு. 37

இளநீர் முப்பழத்தால்—நயிந்தே
இன்றைக்கு நன்றாக
வளமாகத் தானேய
பிசேக மும்பண்ணி
வைக்கிறோ மெண்ணையளே. 38

கார்சேரு வையன்துறைத்—தலைக்குத்துக்
கன்னிமார்க் குத்தானே
வார்சேருங் காதோலை
கரியம ணிவளை
வைக்கிறோ மெண்ணையளே. 39

பாங்கான பேழைக்கன்னி—மாருக்குப்
பச்சைப்பா ளைகரும்பு
வாங்கியி துவெல்லாம்
வெள்ளிக்கி ழமைக்கு
வைக்கிறோ மெண்ணையளே. 40

கணபூத நாச்சிமார்க்கு—மங்கேவாழுங்
கருப்பண ராயனுக்கும்
வங்கிரொட் டிசாரா
யங்கரு வாடுடன்
வைக்கிறோ மெண்ணையளே. 41

பேரணைக் கருப்பனுக்கு—நயிந்தே
பேசாம லாடுவெட்டி
வருந்திப்பொங் கலிட்டுக்
கள்ளுஞ்சுள் ளுஞ்சோறும்
வைக்கிறோ மெண்ணையளே. 42

சின்னணைக் கன்னிமார்க்குக்—கருப்புத்
தெய்வத்துக் காடுவெட்டிப்
பொன்பேழை வைத்துப்பொங்
கலிட்டு முப்பூசை
போடுறோ மெண்ணையளே. 43

கம்மல பட்டத்தாணி—யணையடிக்
கருப்பனுக் குத்தானே
செம்மைபெ றக்குட்டி
வெட்டிப்பொங் கலிட்டுச்
செய்யுறோ மெண்ணையளே. 44

ஆலடிக் கருப்பனுக்கு—நயிந்தே
ஆடுவெட் டிப்பொங்கலிட்
டேலவே சாராயங்
கஞ்சாரொட் டியும்வைத்
திடுகிறோ மெண்ணையளே. 45

பூமிக்கன் னிமாருக்குப்—பச்சை
போடுறோ மென்றுசொல்லித்



தாமசஞ் செய்தல்ல
வோமழை தன்னைத்த
டுத்துக்கொண் டிருக்குதுபார். 46

பவளக்கொ டியம்மன்—மனதாரப்
பருங்கடா வெட்டியிப்போ
சவரணை யாகவே
அந்தம்மன் கேட்டதைத்
தான்படை யுநயிந்தே. 47

விளாங்கோம்பைப் பெருமாளையும்—நயிந்தே
வேண்டியே கைதொழுது
பழம்பாக்கு வைத்துக்கும்
பிட்டுநை வேத்தியம்
பண்ணுறோ மெண்ணையளே. 48

களைமிகுந் தருள்பொழிதா—மரைப்பாடிக்
கன்னிமார்க் குத்தானே
இளநீர்பச் சைப்பாளை
காதோலை சிற்றாடை
ஈந்திட்டோ மெண்ணையளே. 49

ஓடிக்காட்டுக் கன்னிமார்க்கு—மழையும்
உடனேயி றங்கவேதான்
வெடிப்பாகத் தெற்காகப்
பூசையும் போட்டுவி
முந்துகும் பிடுங்களடா. 50

போதலைக் கூட்டாற்றுக்—கருப்பணன்
புந்திகு ளிர்ந்திடவே
கோதிலாக் குட்டிவெட்
டிச்சாரா யம்ரொட்டி
கும்பிட்டு வையுங்கடா. 51

பாம்புவ ரைக்கன்னிக்கு—நயிந்தே
பட்டுச்சிற் றாடைவைத்துச்
சாம்ப்ராணி யுமிட்டுக்
கைக்கட்டுப் பவளமுஞ்
சாத்துறோ மெண்ணையளே. 52

வலங்கையப் பன்தனக்கும்—இரட்டை
மருப்பிடாக் குட்டிவெட்டித்
துலங்கப்பொங் கலிட்டுக்
கள்ளுஞ்சுள் ளுஞ்சோறும்
சுத்தியே வையுங்கடா. 53

அந்தப்ப டிக்குப்பள்ளர்—கும்பிட்டே
அங்கேகு ரவையிட்டுச்
சிந்தைம கிழ்ந்துக
ளியாட்ட மாடிச்
சிறந்திடும் வேளையிலே. 54

### வெறியயர்வேலன் நல்வர மளித்தல்

### இராகம் தோடி. ஆதிதாளம்

இப்படிக்குப் பள்ளரெல்லாம்
தெய்வத்தைப்போற்றி—யங்கே
இருந்திடுஞ் சமயத்தில்
கருந்தும்பிபோல்

மைப்படிவப் பெரியாள்மேல்
சன்னதம்வந்து—வெகு
மழைதந்தோ மென்றுசொல்லிக்
களைதீர்ந்தார்கள்.

கொப்பரைச்சா ராயத்தை
ரொப்பக் குடித்து—வெறி
கொண்டுதலை சுற்றவிழி
ரெண்டுஞ்சிவக்க

சுப்ரமண்யன் விசையகிரி
வேலச்சின்னோவன்—பாடும்
துய்யபள் ளேசல்பாடிப்
பையவேவந்தார். 55

### மழைக்குறி யோர்தல்

### கலிப்பா

தேநிலத்தில் வளம்பெருகத் தீனர்மனங் களிப்பேறப்
பூநிலத்திற் சிவகிரியான் பூசைநிறை வேறிவளர்



கோநிலத்திற் பள்ளர்வளங் குடும்பமெலா மீடேற
மாநிலத்தில் விளைவேற மழைக் குறியுண் டாகியதே.56

### சிந்து

### இராகம்: காம்போதி. அடதாளச் சாப்பு

கொங்கு மின்னல் ஈழ மின்னல்
கூடி மின்னுதே—யொரு
கோடி வானம் பாடி மழை
தேடி யாடுதே

எங்கு மேகீழ் காற்ற டித்துச்
சங்கை யில்லாம—லிப்போ
ஏற்ற முள்ள கொம்பு சுற்றிக்
காற்ற டிக்குதே

பங்கத் தினால் தன்வ ளையை
நண்ட டைக்குதே—கங்கு
பட்டம்பக லிலேசுற்றி
வட்டம் போடுதே

துங்கச் சந்த்ரன் பரி வேடம்
போட்டி ருக்குதே—எறும்பு
துழனியோடு பேர்வதைப்பார்
பழனிப் பள்ளீரே 57

சண்மு கந திய ணைகால்
கொல்வா யும்பார்க்க—நடுச்
சாமமதில் ஏமமதில்
நாமளே போவோம்

வண்மைச் சம்பைக் கொங்காணியும்
சம்பா தியுங்கோ—வொரு
வள்ளம்எண்ணெய் சம்பாதித்து
மெள்ள வையுங்கோ

திண்மை யுறப் பந்தத் துக்குப்
பழைய துணியும்—வேணும்

சீக்கிரமாய்ச் சம்பாதியும்
சாக்கி ரதையாய்

தொன்னை மரந் தெப்பங் கட்டத்
தன்னிக்க வேணும்—இப்போ
சுளுந்துக்கம்பி லிருநூறு
வளர்ந்த தாய்வேணும். 58

### மழைகாலூன்றல்

கலிப்பா

சேலூன்றும் பொய்கைச் சிவகிரியான் சந்நிதிமுன்
பாலூன்று மயிலாடும் பாறையின்மேல் மயிலாட
வேலூன்று மேழ்புனலை மேய்ந்துகருக் கொண்டெழுந்து
காலூன்றி யேமுகிலுங் காலமுறை காட்டியதே. 59

### சிந்து

இராகம்: சௌராஷ்டிரம். மட்டியதாளம்

தடையில் லாமலே சசிம ணாளனை
விடைகொண் டெழுந்து படியுங்கார்
சண்மு கத்துரை வேலி னுமின்னி
விண்மு கத்தினி லரியுமாய்த்

தொடையில் விசைய கிரிச்சின் னோவய்யன்
கொடையைப் போலிரு வரையின்மேல்
சொரிந்த நளினத் தயனு மாய்ப்புனல்
விரிந்த சடிலச் சிவனுமாய்ப்

படைவி ழிக்கடை யரியு மாயன
நடையிற் றளருங் கமலையாய்ப்
பதுமக் கலைமின் மடந்தை யாய்வெகு
புதுமைக் கிடமு மாகியே

திடமுற் றபுய சயில வேடுவர்
படைவில் லுக்கிணை யாகவே
தேவ ரிந்திர தனுசு விளங்கப்
பூவு லகங்கள் செழித்தவே. 60



### வெள்ளம் வரவு

குறிஞ்சியாறு

கலிப்பா

நாகநக மேலமர்ந்த நாதன் சிவகிரிவாழ்
மோகனமின் கொங்கையின்மேல் முத்தாரம்போல் விளங்க
னாகனகன் விசையகிரி வாக்குப்ர தாபமென்னப்
பூகனகத் தருளையது பொருந்திவெள்ளமாகினதே. 61

துறையிற் சிதறி விரவி யேதட
வரையைக் கிழியப் பரவியே
துடியிற் குறிஞ்சி வனத்தி லேபுகுந்
தடியிற் குறிஞ்சிப் புனத்திலே

திரையை மோதிப் பெருகி யேயிரு
கரையை மோதித் திருகியே
தினைப்பு னத்தையு நிரவி யேவொளிர்
கனற்பு னத்தையு நிரவியே

கரிய குறவர் பரணை யுமவர்க்
குரிய குடிலம் பரணையுங்
கானக் களிறு மயிலை யுமெடுத்
தேனக் களிறு மயிலையும்

முருக ரைப்போற்றி நாகத் தைத்தடிந்
திருக ரையிற்புன் னாகத்தை
முறித்துச் சாடிப் பாலை நிலத்தைக்
குறித்துத் தேடி நடந்ததே. 62

### பாலையாறு

கலிப்பா

விண்மணியிற் பொன்மணியாம் வீரகண்டா மணிபுனைந்து
வண்மணிசேர் சிவகிரியில் வாழு நவமணியாம்
பெண்மணியா மயிலினங்காள் பேடைக் குயிலினங்காள்
கண்மணியாள் போனவிடங் காட்டுவீர் காட்டுவீரே. 63

### சிந்து

சுடுசு ரத்திரு கள்ளி யுமனல்
படுங்குள் ளிச்சருங் கள்ளியுஞ்
சுரந்து வேலா முள்ளை யுமந்த
மரத்துப் பொந்து முள்ளையுந்

தடவிப் பிடுங்கி யாவை யுஞ்சிறு
வடிவ மாப்பொன்ன ராவையுஞ்
சமரி டும்வளைத் தடியை யுமதிற்
கமர்ப டுநிலத் தடியையும்

கடிக முகுக்குஞ் சினத்தை யுமதிற்
படிந்து கதிக்குஞ் சினத்தையும்
கறையா னெறும்புச் செலவை யுமதின்
மறவர் வாழ்மரச் செலவையும்

அடியொ டுதாவி மோதி யேயெங்கள்
வடிவே லர்பத மோதியே
அரிய பாலை வனத்தைக் கடந்தே
உரிய முல்லையிற் பாய்ந்ததே 64

### முல்லையாறு

#### கலிப்பா

வாசவெள்ளத் தோன்பணியும் வடிவேலன் மைத்துனன்வேள்
பூசல்வெள்ளத் தாலுடலம் பொறுக்க முடியாதே
பேசவெள்ள முத்தனையா பெண்ணரசி சுந்தரமும்
ஆசைவெள்ள நீச்சென் னரையளவு மாகினதே. 65

### சிந்து

முல்லைக் கொடிதத் தளிக்க வேயதில்
குல்லைக் குமெத்தத் தளிக்கவே
மோதித் தயிர்சேர் கடத்தை யுந்தளிர்
சீதக் கவின்கோங் கடத்தையும்

மல்லிகைப் புதையுஞ் சமிதை யுமதில்
இல்லிற்கு டத்தில்வைத் தமுதையும்



வாரிச் சுருட்டிக் கவினத் தைநுரை
பாரித் தென்புரக் கவினத்தைக்

கொல்லை யில்நடுந் தறியை யுமெடுத்
தொல்லையும் புகப்பத் தறியையுங்
குலவி வேணுக் குழலை யும்பட்டி
யுலவி மாப்பொறுக் குழலையுந்

தொல்லைத் தாம்புக் கயிற்றை யுமுரல்
கல்லைச்சு வறிலங் கயிற்றையுந்
துலங்கு மேருவை நெருக்கி யேவெள்ளம்
இலங்கு மருதம் புகுந்ததே. 66

### மருதத்தாறு

#### கலிப்பா

மானவதி யாகும்வள்ளி மகுணன் சிவகிரியான்
கானவதி தோறலைந்து கவலைப் படுவேனோ
பானவதி கயலருந்து பவளக்கால் நாராயே
நானவதி படுவதையென் னாயகியோ டுரைப்பாயே. 67

### சிந்து

மருத நிலத்திற் சாடி யேகயல்
பொருத வுஞ்சுழிச் சாடியே
வாழை யுமரிச் சுனத்தை யும்பூகப்
பாளை யுமரிச் சுனத்தையுங்

கரியெ னவுழும் பகட்டை யுமுத்துக்
குரிய குடிலம் பகட்டையுங்
கழித்துச் சாலிப் பணையை யுமுத்துக்
கொழித்துச் சாலிப் பணையையும்

இரதி வேள்கரக் கரும்பை யுநனி
குருமு ருகனார் கரும்பையும்
ஈந்து கதலித் தண்டை யும்புனல்
மேய்ந்த கதலித் தண்டையும்

அரிக்க திரையே சுருட்டி யேபயிர்
அரிக்க திரையே சுருட்டியே

அறுமு கன்றன்னைப் பணிந்து மேவெள்ளம்
மறுகு நெய்தலம் புகுந்ததே 68

**நெய்தலாறு**

**கலிப்பா**

மனுபதியை மாமனெனும் வடிவேல ரைப்போற்றித
தனுபதிவேள் பூங்கணையிற் றான்மெலியா மற்காமம்
எனுபதிநீங் கிப்புவியி லிச்சித்த பெண்களையும்
அனுபவியா தார்சனன மாண்சனன மாகாதே. 69

**சிந்து**

கடினத் திடுமுப் பளத்தை யுமதிற்
படிவுற் றிடுமுப் பளத்தையுங்
களரு படியி லவண முமெடுத்
தளறு சேர்கட லவணமும்
வடிவு றுஞ்செங்கா னாரை யுங்கமழ்
புடைவன் னச்செங்கா னாரையும்
வாரிச் சுருட்டி வலையொ டும்புனல்
பூரித் துவர வலையொடும்
இடிக ரைத்தள்ளி யறுத்த லுஞ்சற்று
மடிவி லாக்கொடைப் பொருத்தலு
மேதிச்சு ழலினீ ராறு டன்புகழ்
பூதிப்பச் சைப்பா லாறுடன்
தடமி லகிய வரத்தா றுமுதல்
அடைவா யாறாது மோராறாய்ச்
சண்முக நதியும் பெருகி வார
தகைமை பாரும் பள்ளீரே. 70

**ஆற்றுச்சிறப்புக் காண்டல்**

**கலிப்பா**

பூசித்தாள் சிவகிரியிற் புங்கவனார் தன்பதத்தை
நேசித்தாள் முத்தணிந்தாள் நீர்ப்பவளந் தந்தேயாழ்
வாசித்தாள் வேண்டி வணங்கினா ளென்மீதில்
ஆசித்தாள் பின்னு மரைப்பணந்தந் தாளிலையே. 71



**சிந்து**

அரிய நெய்தலைத் தாண்டி யேசிவ
கிரிமு ருகனை வேண்டியே
ஆழ்க டல்வாயைக் கிழிக்க வேபரந்
தேழ்க டலிற்போய்க் குழிக்கவே
பெரிய குரவை யயிரை யுழுவை
பெண்ணை பண்ணை சாளைமீன்
பெருந்த லைக்கருங் கண்ணி யவுரி
பெருக்கை துதிக்கை மூக்கைமீன்
பரவை பசலை திருக்கை வாளை
பயிந்தி கூனி மயிந்திமீன்
படலி கெளிறு மணலை யாரால்
பாசிக் கொத்தான் தேளிமீன்
சரியும் வாளை கோளை பனசை
தான்துள் ளிவிளை யாடவே
சண்முக நதியும் பெருகி வார
தகைமை பாரும் பள்ளீரே. 72

**கலிப்பா**

பதலைச் சிவகிரியின் பண்ணவனை யேபுகழ்ந்து,
குதலைமொழி முத்தேயுன் கூர்விழிவேல் பட்டபுண்ணில்,
கதழ்முலைப்பொட்டணத்தையொத்திக் காமநோய்
தீர்ப்பதற்குன்,
இதழமுதச் சஞ்சீவி யீந்தாற் பிழைப்பேனே. 73

**சிந்து**

விசையன் தவசு பண்ணி யும்வர
மிசையும் வராக கிரியின்மேல்
மின்ன லுடனே பொழிந்த மழைநீர்
சன்னல் பின்னலு மாகியே

திசைதோ றுஞ்சத்த நதிய ளென்னவே
திரண்டு கூடிய வெள்ளத்தில்
செங்கணீ ராட்டுப் பசலி கசலி
செள்ளை சள்ளை பொத்திமீன்

இசைசே ரும்விண்ணி லெண்ணெய் மீன்முதல்
எரிகண் ணன்கரை வாசமீன்
இதுமு தலான மீன்க ளுங்குதித்
தெதிரேற வையா புரியிலும்

சசியெ னத்தண்ணீர் பெருகி மறுகாற்
றண்ணீர் வயல்தொறுந் தாவவே
சண்முக நதியும் பெருகி வார
தகைமை பாரும் பள்ளீரே. 74

**பண்ணைத் தலைவன் வரவு**

**கலிப்பா**

கசாதிகளுஞ் சேருங் காலணைகொல் வாய்குளங்கள்
உசாவிடத்தண் ணீருமெங்கு மோடிப் பெருகிடவே
நிசாசரரை வென்றருளு நித்தன் சிவகிரியான்
விசாகனார் பண்ணை விசாரிப்பான் வந்தானே.75

**சிந்து**

**இராகம்: நாகவராளி. ரூபக தாளம்**

மூளிக் காது மூரலிட்ட
தாழி வயிறுங்—கட்டை
மொட்டைமீசை யுங்கருங்
குட்டைக்கழுத்தும்

பூளை யடைந்த கண்ணு
மூளை நாசியும்—பெரும்
போத்துரலை யேநிக
ரொத்தவிடையும்

ஊளை வாயுந் தலையிலே
மோளை மயிரு—மஞ்சி
யொத்தநரை யுஞ்சுரை
வித்துப்போற்பல்லும்

கேளிக் கையாய்ப் பேசிப்புல்லைக்
காளை யைப்போலே—முரு
கேரனைப்பார்த் துப்பண்ணைக்
காரனார்வந்தார். 76



வந்த பண்ணைக் காரன்முன்பு
சந்தோ சத்துடன்—நல்ல
வட்டமிட்ட கோழியொரு
பெட்டியவலும்

பந்தி யாக வைத்துநின்று
வந்தனை செய்தே—எங்கள்
பண்ணைக்காரத் தேவரீரைக்
கும்பிடுகிறோம்

மந்தி வாயெம் மாண்டவரைக்
கும்பி டுகிறோங்—கீரை
மத்துப்போலத் தலையாரைக்
கும்பிடுகிறோம்
தொந்தி வயிற் றாண்டவரைக்
கும்பி டுகிறோம்—........
........................
................ 77

கும்பிட் டபள் ளியர்க்குளே
குமரி யாரென்று—மெள்ளக்
கூர்ந்துபார்த்துச் சுவரின்மேல்
சாய்ந்திருப்பாராம்
தம்பி யின்பெண் சாதியென்று
செம்பி மகளைப்—பாக்குத்
தாடியென் றவள்மேலே
ஓடிவீழ்வாராம்
வம்புந் தும்பும் பேசித்தடிக்
கம்பி னாலேயே—வீரி
மார்பிற்குத்தி யென்னுடன்பிர
தாபியென்பாராம்
சொம்பி மூத்த பள்ளிக்குத்தான்
ரொம்பச் சொல்லியே—புகை
சுத்தித்தரச் சொல்லிவாங்கி
வைத்துக்கொள்வாராம். 78

தள்ளி நில்லா யென்றேயொரு
பள்ளி யைப்பார்த்துக்—கண்ணாற்

சன்னைக்காட்டிக் களத்தில்வா
பின்னையென்பாராம்

முள்ளிக் காய்கள் கொண்டுவராக்
கள்ளி நீபோடி—யென்று
மூளிமகள் காத்தியைப்போய்க்
கூளிகொள்வாராம்

கள்ளுக் குடித் தவர்போலே
துள்ளித் துடித்தே—யொரு
காலைத்தூக்கி நாச்சிமடி
மேலேவைப்பாராம்

குள்ளி மக ளாமிளைய
பள்ளி யைப்பார்த்தே—யுன்றன்
குடும்பனெங்கே யென்றதட்டி
யிடும்புசெய்வாராம். 79

## மூத்தபள்ளி முறையீடு

### கலிப்பா

வள்ளிமயி லான வனக்கொழுந்துக் காசைகொண்டோன்
வெள்ளிலைவேள் சிவகிரியில் வேலர்பண்ணைப் பள்ளருக்குள்
கள்ளனிவ னென்றுபண்ணைக்காரனொடு மூத்தபள்ளி
பள்ளன்மனக் கள்ளமெல்லாம் படிப்படியாய்ச்
சொல்லுவளே. 80

### சிந்து

இராகம்: சங்கராபரணம். அடதாளச்சாப்பு

குத்திரப் பள்ளன்
சித்திரங் கேளாய்கைக்
கோலுங்கை தீண்டான்
காலணை பாரான்.

எத்தனை நானும்
புத்திசொன் னாலுங்கண்
ணேறிட்டும் பாரான்
சோறிட்டா லுண்ணான்



முத்தியை வைப்பு
வைத்துக்கொண் டானென்மேல்
மோட்டுப்பள் ளியை
வாட்டுக்கு வைத்தான்

சித்திரை மாதம்
பத்துப்ப சுவிற்றுச்
செட்டிக்குக் கடன்
கட்டினா னாண்டே. 81

வள்ளத்தைப் பனங்
கள்ளுக்கு விற்றான்
வளவைச் சுற்றுவான்
உழவையும் பாரான்

பள்ளனு மாட்டை
வெள்ளென வேவந்து
பட்டி திறந்து
விட்டிட மாட்டான்

கள்ளியி ளைய
பள்ளியின் வீட்டைக்
காக்கப் போவான்வ
யல்காக்கப் போகான்

பள்ளேச லுக்குங்
கள்சாரா யத்துக்கும்
பத்தெரு தையும்
வித்தான்கா ணாண்டே. 82

## இளையபள்ளி முறையீடு

### கலிப்பா

கொங்கைமத யானையெனுங் குஞ்சரியைச் சேர்ந்தருளும்
புங்கவனார் சிவகிரியிற் புனிதர்பண்ணைக் காரனுடன்
சங்கையின்றிப் பள்ளனையுந் தன்வீட்டிலேயொளித்தே
எங்கேயோ போனானென் றிளைய பள்ளி கூறுவளே. 83

### சிந்து

இராகம்: நவரோசு. ஆதிதாளம்

உட லுக்குச் சுத்த மில்லை
என் றிருந் தபள் ளனை
 உடனேயே மூத்தபள்ளியும்
விடி யக்கா லமெ ழுப்பி
யணை கொல்வாய் பார்த் துவா
 வென்றுவிள்ள வேபோனான்
அடி யாளு மடுப் பில்நெ
ருப் பிட்டுக் கஞ்சி காய்ச்சி
 அருந்தின தில்லையும் மாணை
நடு வாற்றி லிறங் கிப்போ
கையி லென்ன மோசங் கள்
 நடந்ததோ வறிந்ததில் லையே
வடி வாய் மூன்று நாளா
கியும் போன பள் ளனை
 வரக்காணோம் பண்ணையாண்டே. 84

அப்ப டிக்கு மொருகாரி
யம்பள்ள னுக்கானால்
 அடியாள்ச ரீரம்வைத்திரேன்
மைப்படி யும்பொ ழில்சூழ்வை
யாபுரிக் குளத்திற்போய்
 மதகைத்தி றக்கணுமென்றே
எப்ப டியோ முக்குளித்
தானோ வந்த வேளையில்
 என்னமோ சங்கள் வந்துதோ
செப்பி னேன்தே வரீர்சித்த
மென்பாக்கி யங்குமரன்
 செயலையறி யேன்கா ணாண்டே. 85

### பண்ணைத் தலைவன் இளைய பள்ளியை உரைப்பல்

கலிப்பா

உள்ளுறப்பள் ளனைவீட்டு ளொளித்துவைத்துக்
 கொண்டுமிப்போ
விள்ளுறாய் மூத்தபள்ளி விண்டதுமெய் யாச்சுதடி



கள்ளிநீ யென்றுபண்ணைக்காரனுமே தென்பழனிப்
பள்ளியைக்கோ வித்தமட்டிப் பதைபதைத்து
 விள்ளுவனே. 86

### சிந்து

இராகம்: நாத நாமக்கிரியை. ஆதிதாளம்

மட்டிப் பேச்சைப் பேசியடி
ஒட்டில்கர ணம்போடுறாய்
கெட்டி யாச்சு தென்பழனி
நட்டணைப்பள்ளி. 87

வீட்டி னிற்பு குந்தமுதைப்
போட்டிடுவே னதற்குமுன்
காட்டி லோடிப் பள்ளனையுங்
கூட்டிவாகள்ளி. 88

### பள்ளன் வெளிப்படல்

அந்த வகை கேட்டுப்பள்ளன்
சிந்தை நொந்து கையிலஞ்சந்
தந்து பண்ணைக் காரன்காலில்
வந்துவிழுந்தான். 89

### பண்ணைத் தலைவன் பண்ணைச்செயல் வினாவல்

விழுந்த பள்ள னையும்பார்த்தே
எழுந்தி ருடா வென்றுசொல்லிக்
கொழுந்து வெற்றி லையும் பாக்கும்
நெகிழ்ந்து மளித்தான். 90

சுத்த னூழி யத்துக்குநீ
புத்தி யாய்ந டந்துகொண்டால்
அத்த னைக்கும் வாழ்வுண்டென்று
புத்தியுஞ்சொன்னான். 91

தன்ன மையாய்ப் பள்ளனைப்பார்த்
திந்நே ரத்தில் பண்ணைக்காரன்
மன்னன் வேலன் பண்ணைச்சேதி
என்னடாவென்றான். 92

## பள்ளன் பண்ணைச்செயல் கூறல்

### கலிப்பா

வெல்லுஞ் சிவகிரியில் வேலர்பண்ணைக் காரனுக்கு
நெல்லுவகை மாட்டுவகை நீண்டகொழுக் கொண்டிவகை
நல்ல கலப்பைவகை நகத்தடியு மேழிவகை
வல்லபரம் பும்பள்ளன் வகைகண்டு சொல்லுவனே. 93

### சிந்து

**இராகம்: யதுகுல காம்போதி. அடதாளச்சாப்பு**

செலவான நெல்லைக்
கேளும ணல்வாரி
சிவகிரி வேலர்
சத்திக்குள் ளாச்சு
வலிமைசெய் விசைய
கிரிவேலச் சின்னோவன்
வங்கிநா ராயண
னைக்கை கொண்டான்
சலிகைசெய் தேயிடைக்
காடான்ப ரந்து
தனியே போனது
மனியாய மையோ
புலையரா கியவு
லோபியர் வீட்டிற்
புழுதிய டைந்து
போச்சுகா ணாண்டே. 94

மருவிய ராம
பாணமெ திர்த்தோரை
வாணாளை வாங்குந்
தண்ணீரை வாங்கும்
விரவிக்கல் லாற்றில்
கல்லுண்டை மெத்த
விழுந்ததே யினியும்
பயிரிட லாமோ
பரிவுசேர் பெண்க
ளுக்குக்கோ தும்பைப்



பாசி யானதால்
அதனைக்கை விட்டேன்
சுருணைவா ரிகதிர்
தன்னையும் வாரிச்
சும்மா தானிருக்
காதுகா ணாண்டே. 95

அழகிய மணவா
ளனிலத் துக்கே
யாகாமல் வாரிக்
குள்ளாகிப் போனான்
கழனிசேர் சோலைப்
பூம்பாளை யெல்லாங்
கடம்பன் கமுகுத்
தோப்புக்கே காணும்
வளமைசேர் வையா
புரிக்குளத் தில்லே
மதகடி யிற்செந்
தாழைபயி ராச்சு
இளகிய குலைவா
ழைநெல் லரிசி
யிருக்கா ததுவு
நமக்கே காணாண்டே. 96

இந்தவ கையிலே
பட்டடை நெல்லில்
எட்டிலட் சஞ்ச
லகைநெல் லாச்சு
பைந்தமிழ் சேர்சி
வகிரியா னுக்குப்
படித்தரத் துக்கோர்
ஆயிரஞ் சலகை
தந்தருள் சுற்றுக்
கோவிலுக் கைந்நூறு
சலகைநெல் பெரிய
வள்ளத்தா லீந்தேன்
விந்தைசேர்ந் தருளெட்
டுச்சத்தி ரத்துக்கும்

வேண்டின நெல்லை
யீந்தேன்கா ணாண்டே. 97

எங்களி டும்பன்
படித்தரத் துக்கே
எண்பது சலகை
நெல்லுமே யீந்தேன்
பொங்குஞ்சொந் தக்கு
ராவடி வேலற்கும்
புனிதம தாகிய
சிவலிங்கத் துக்கும்
அங்கெழுந் தருளுஞ்
சுப்பிர மணியற்கும்
அன்றாடப் பூசைப்
படித்தரத் துக்கும்
இங்கித மானபு
னுகுச்சம் பாநெல்லில்
இருநூறு சலகை
ஈந்தேன்கா ணாண்டே. 98

திருவாவி நன்குடி
வேலவ ருக்குச்
செலவுக்கு நூறு
சலகைநெல் லீந்தேன்
பெரியநா யகித்தாய்
படித்தரத் துக்குப்
பெரியவள் ளத்தா
லிருநூறு சலகை
கருதிய ராயப்
பெருமாள்த னக்கும்
கயிலாய நாதர்
படித்தரத் துக்கும்
இருநூறு சலகை
நெல்லுஞ் செலவாச்சு
இன்னுஞ் செலவைக்
கேளுங்கா ணாண்டே. 99



எங்களி லட்சுமி
நாராய ணனுக்கே
எழுபது சலகை
நெல்லுமே போகும்
பொங்கஞ்சேர் பாதி
ரைப்பிள்ளை யாருக்குப்
பூசைக் கைம்பது
சலகைநெல் வேணும்
அங்காளம் மன்மாரி
அம்மன்ற னக்கும்
ஐம்பது சலகை
நெல்லுமே போச்சு
திங்கள் சூரிய
னிதுமுத லாகிய
தெய்வங்க ளுக்குநெல்
ஈந்தேன்கா ணாண்டே. 100

தூரிநாச் சிமார்
அழகுநாச் சிமார்
துற்கையம் மன்னெட்
டாலம்ம னுக்கும்
ஏரிநாச் சிமார்
பேராவு டையார்க்கும்
எங்கள்வை யாபுரி
யீச்சுர னார்க்கும்
காருநட் டாற்றுக்
கன்னிமா ருக்கும்
கணப்படி ராயன்
படித்தரத் துக்கும்
சூரியச் சம்பா
நெல்லிலே நானூற்றுத்
தொண்ணூறு சலகை
ஈந்தேன்கா ணாண்டே. 101

உலவுஞ்சண் முகநதி
விசையவே லாயுதன்
உதவுங்கா சிவிசு
வேச்சுர னுக்கும்

இலகுமச் சுதநா
ராயண னுக்கும்
எங்கள்சண் முகநதி
வேலவ னுக்கும்
துலங்கன்ன பூரணி
விசாலாட் சிக்கும்
துய்யசண் முகநதிக்
கணபதிக் கும்மே
தலையுதி ரிநெல்லி
லேயைந் நூறு
சலகைநெல் லையுமீந்
தேன்கா ணாண்டே. 102

இங்கிலுண் டானகோ
யிற்படித் தரத்துக்(கு)
எப்படிக் குமமைத்
துக்கொள்ளு வேனான்
துங்கனா கியசிவ
கிரிவேல வற்குச்
சுதனாக வந்த
குமாரச்சின் னோவன்
பிங்கன்வி சையகி
ரிவேலச் சின்னோவன்
பிராமண போசனத்
துக்குத்தி ருத்தியாய்க்
குங்குமச் சம்பாநெல்
கேட்டகேள் விக்கெல்லாம்
கொடுத்துவ ரல்பிர
யாசைகா ணாண்டே. 103

### மாட்டுவகை

#### கலிப்பா

பாட்டைச் செலவழித்த பாவலனுக் காளாய்த்தன்
கூட்டைச் செலவழித்த குழந்தை யெனுங்குழகன்



காட்டைச்செல வாக்குபண்ணைக் காரனோடு
பள்ளன் மெள்ள
மாட்டுச் செலவையெல்லாம் வகைவகையாய்க்
கூறுவனே. 104

### சிந்து

#### இராகம்: யதுகுல காம்போதி. அடசாப்புதாளம்

ஊரெங்கும் பார்த்தாலும்
ஒற்றைக் கொம்பன்
உலவாம லேவழி
தோறுமி ருக்கும்
மேருவின் சார்பில்
நெட்டைவா லான்போய்
விருமபப்பட் டத்துக்
கின்னமி ருக்கும்
பாரிலே காணம்
நெடுமறை யான்றனைப்
பார்ப்பா ரென்று
பலபேரும் பார்ப்பார்
காரிகூன் மயிலை
பழனிச்செட் டிக்குக்
கருதிய வாகன
மாச்சுகா ணாண்டே. 105

முயங்கிய பசுக்காத்
தானுமே கெருட
முகவன்மேற் கொண்டே
அலையுதே யின்னம்
மயங்கிவா டிநனிக்
காளையா னசெம்
மறைக்கா ளைக்காய்
சடைவிழுந் தாலும்
இயங்குங்கா லாலுதை
பட்டுமே வெள்ளை
எருதாமக் காளை
மீதினி லேறி

வயங்கியே கொம்பைக்
காட்டிக்கொண் டின்னம்
மலையிலே வாழு
மதுதான்கா ணாண்டே. 106

இப்படிக் காக
வேயநே கம்மாடும்
ஏகியே யெங்குந்
தொண்டாச்சு தையா
சுப்பிர மணியற்குக்
கறவைப்ப சுக்கள்
துய்யகா ராம்பசு
வைஞ்ஞூ றீந்தேன்
அப்புரங் கயிலாச
நாதருக் கும்மே
அரியகா ராமடைப்
பெரியவ ளுக்கும்
ஒப்புச்சீட் டுக்கண்
டாப்போல்நூ றாவையும்
ஓட்டிக்கொ டுத்துவிட்
டேன்கா ணாண்டே. 107

### கலப்பை, மேழி, நுகம்

வளமிகுங் கானில்
முருகவே ளந்த
வள்ளிக்குக் கொழுகொம்
பாச்சுதிப் போது

கழனியை யேயுழுங்
கலப்பையெல் லாமரக்
கலப்பையா னாலே
சரக்கிட வாகும்

இளநீரோங் குஞ்சிவ
கிரிவேல வனுக்கே
இருகாதி லேவளர்
ஒண்டிமுத் தாச்சுத்



துழனிசேர் துர்ச்சனர்க்
கும்பரம் பென்று
சொல்லிநா னுங்கை
விட்டேன்கா ணாண்டே. 108

பொங்கமா கவேமே
ழியெல்லா மந்தப்
பூபால ரிடங்கை
சேர்ந்தேயி ருக்கும்

வங்கிவா ங்குமிர
ணியசூ ரனையும்
வகிர்நர சிங்க
நகமுமல் லாமல்

இங்கேநம் மள்நக
மெல்லா நகமோ
இசையவே ழும்பர்க்கு
வடக்கயி றீந்தேன்

துங்கஞ்சோ றதனில்
முழுகவே யெத்தனை
சோடிணை யில்லை
நமக்குக்கா ணாண்டே. 109

### வயலெருவைக்க ஆயரை யழைத்தல்

#### கலிப்பா

பண்ணைவிவ ரங்களையும் படிப்படியாய்க் கேட்ட பின்பு
எண்ணளவி லாநிலத்துக் கெருவைக்க வேணுமென்று
துன்னுபண்ணை யாண்டகையுஞ் சொன்னபடி யேபள்ளன்
திண்ணமுட னாயர்மனை தேடி நடந்தானே. 110

#### சிந்து

திட்டமுடன் சிவகிரிச்செவ் வேல்பண்ணை யுரமேற்ற
மட்டிலா வாடுகொண்டு வருவேன்கா ணாண்டே 111

என்று சொல்லிப் பண்ணைக்கார னிடத்தில்
விடைவாங்கிப் பள்ளன்
நன்றெனவே யாயர்மனை நாடியே போனான். 112

## ஆயர் வரவு

போனவுட னாயரெல்லாம் புகழ்ந்துபள்ளன் சொற்படியே
தானும்வாரேன் வாரோமென்று தங்கள்தங்க ளாடுகளும் 113

குட்டிகள்கு டாப்புகளுங் கொண்டுசேக ரித்துக்கொண்டு
பட்டிபோட விடைக்கோனார் பரிவுடன் வந்தார். 114

## ஆயர் தம் பெருமை கூறல்

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பட்டைநா மங்க ளெங்கும்
பழுக்கவே போட்டி ருப்புக்
கட்டுசேர் தடியை வீசிக்
கையினிற் கடையால் கொண்டு
முட்டவே நரைத்த மீசை
முறுக்கியே துளவப் பாசி
சட்டமா யணிந்தே யாயர்
சகலருந் தோன்றி னாரே. 115

### சிந்து

இராகம்: துசாவந்தி. ஆதிதாளம்

பூதக்கோன் புரியாட்டைச்
சோதித்தே யொருபாம்பும்
புலியுங்காத் திருக்குது
கலிகண்டாய் குடும்பா
யாதக்கோன் கிடைதானுஞ்
சீதத்தண் ணீருங்கொண்டே
யவனாட்டைக் கண்டபாம்பு
துவைபட்டுச் சென்றதே
வேதக்கோன் கிடைகங்கை
பாதக்கோன் வயிற்றுக்குள்
மேவின தாலினி
யாவதென் குடும்பா
நாதத்கோன் சிவகிரி
ஆதிக்கோன் பண்ணைக்கே
நானடா வுரமேற்றுங்
கோனடா குடும்பா. 116



## மூத்தபள்ளி சாடிகூறல்

### கலிப்பா

இடையரெல்லாம் வயலதுக்கு ளேகியபின் பள்ளன் மெள்ள
அடைவுடனே யிளையபள்ளி யாள்வீட்டுக் கிடையானான்
கடைவிழியாள் மூத்தபள்ளி கண்டுபண்ணைக் காரண்முன்பு
வெடுவெடெனப் பள்ளனையும் வெகுண்டுமுறை
யிட்டனளே. 117

### சிந்து

இராகம்: புன்னாகவராளி. ஆதிதாளம்

அச்சத்தை விடுத்தான்—இளையவள்
குச்சிற்போய்ப் படுத்தான்—நானும்போய்
அழைத்தாலும் வாரான்—வயல்விரை
முளைத்தாலும் பாரான்.
கச்சைக்காய்ப் பள்ளன்—அவன்வெகு
குச்சிரக் கள்ளன்—வேலைக்குக்
கழுப்பிணி செய்வான்—நானும்போய்
எழுப்பினால் வைவான்
பிச்சனை வெல்வான்—எனக்கொரு
ஒச்சமுஞ் சொல்வான்—அவன்காலைப்
பிடித்தாற்கை நெரிப்பான்—இளையவள்
அடித்தாலுஞ் சிரிப்பான்
கச்சையுங் கட்டான்—வரவர
லச்சையும் விட்டான்—அடியாள்
கண்டதைச்சொன்னேன்—அவன்வெகு
வண்டன்கா ணாண்டே. 118

சத்தியத்துக் கதிரான்—இளையவள்
உத்தரவுக் கெதிரான்—குலுகைத்
தவசத்தை விற்றான்—ஒருகாசுக்
கவகாச மற்றான்
ஒத்தவன் வாழான்—நான்சொலும்
புத்தியுங் கேளான்—தயிரையும்
ஊத்தினா லடிப்பான்—இளையவள்
வார்த்ததைக் குடிப்பான்

தித்திக்கு மாவான்—அடிக்குமத்த
ளத்துக்கு மாவான்—பணமெல்லாஞ்
சிந்தியே கெட்டான்—எனையிப்போ
சந்தியில் விட்டான்
மெத்தக்கட் குடிப்பான்—அவள்காலை
நித்தம்போய்ப் பிடிப்பான்—பள்ளனை
விடியுங்காட் டியிலே—குட்டையில்
அடியுங்கா ணாண்டே. 119

என்கையிற் சோறுங்—கசந்தவள்
தன்கையிற் சாறும்—இனிக்கு(து)
என்றவன் போனான்—அவள்முலைக்
குன்றுக்கு ளானான்
தன்னையு மறந்தான்—வெகுநாளாய்
என்னையுந் துறந்தான்—என்வீட்டிற்
சளத்துக்குப் படுப்பான்—அவளுடன்
களத்திலும் படுப்பான்
பொன்னியைத் தொடர்ந்தான்—இல்லைவிட்(டு)
என்னையுங் கடந்தான்—எருமைப்
போத்துக்கு மிசைவான்—கோமாளிக்
கூத்துக்கு மிசைவான்
என்னையுங் குறியீர்—நான்சொன்ன
சன்னையு மறியீர்—பள்ளனை
ஈடுபட் டிடவே—குட்டையிற்
போடுவீ ராண்டே 120

வெட்டிக்குப் பேட்டை—நல்லண்ணச்
செட்டிக்கு மாட்டைப்—பதினெட்டு
வெள்ளைக்குக் கொடுத்தான்—கொழுந்தியாள்
பிள்ளைக்கிட் டெடுத்தான்
தெட்டியே விட்டான்—எனக்கிப்போ
ஒட்டிப்புண் விட்டான்—தன்னுடை
தேட்டையு மொழித்தான்—கோவலன்
பாட்டுக்கு மழித்தான்
வட்டவீ டெடுத்தான்—பணமெல்லாம்
கொட்டியே கொடுத்தான்—தன்வெகு
மானத்துக் கவளாம்—படுந்துயர்
ஈனத்துக் கிவளாம்



கிட்டத்திற் படுக்கான்—அவள்சேலை
கட்டிக்கக் கொடுக்கான்—என்னையுங்
கேலியுஞ் செய்வான்—அவனுமாய்
மாலன்கா ணாண்டே. 121

பாணான்கைச் சுள்ளும்—ஈழுவச்
சாணான்கைக் கள்ளும்—கொண்டெட்டுப்
பசுவையும் விற்றான்—அவன்மனக்
கசிவையு மற்றான்
பூணிக்கை யாலே—யவளுக்குக்
காணிக்கை போலே—பணமிட்டுப்
புடவையு மெடுத்தான்—திரும்பவும்
உடமையுங் கொடுத்தான்
ஏணிக்கு நேரான்—ஒன்றையும்
பாணித்துப் பாரான்—அவனுமென்
இளமையைப் பறித்தான்—அவளுடை
வளமையைக் குறித்தான்
ஊனுக்குக் கெட்டி—பள்ளனும்
ஆணுக்குள் மட்டி—பள்ளனை
ஊட்டத்து மயில்போற்—குட்டையிற்
போட்டுக்கொ ளாண்டே. 122

பூராயத் துடனே—வாங்கின
சாராயக் கடனும்—அவனுடை
புழைப்பிலே மிச்சம்—எனக்கிப்போ
துழைப்பது மச்சம்
பேராகப் பிழைத்து—வீணிலே
ஊராருக் குழைத்துத்—தேடியே
பேய்த்தண்ணீர்க் கிறைத்தான்—அவகப்பன்
கீர்த்தியை மறைத்தான்
தோராய மென்னக்—கொழுந்தியாள்
மாராயஞ் சொன்ன—வண்ணான்
சுவந்திர மென்றெ—அஞ்சுபொன்
செவலைச்செங் கன்றைப்
பாராட்டிக் கொடுத்தான்—அவள்வீட்டிற்
சீராட்டிப் படுத்தான்—நீரேபோய்ப்
பார்த்திப்போ பிடித்துக்—குட்டையிற்
சேர்த்துங்கா ணாண்டே. 123

## பள்ளன் கிடைவைத்து வந்தான்போற் கூறல்

### கலிப்பா

சித்தன் சிவகிரிச்செவ் வேள் பண்ணை யாண்டகைமுன்
குத்திரமாய் மூத்தபள்ளி கூறியவ ளேகியபின்
மத்தன் வயலிலெரு வைப்பித்தே னென்றுபள்ளன்
பொய்த்தமொழி கூறிவயற் பூபன்முன்பு சென்றானே.124

### சிந்து

#### இராகம்: துசாவந்தி. மட்டயதாளம்

காத்தவ ராயன் நிலத்தி லேயும்
கன்னடி யப்பெரு மாள்வ யலிலும்
கீர்த்திசேர் பாதைப் பருக்க டியிலும்
கிடாவு றிஞ்சி நிலத்தி லேயும்
வாத்தியா ராத்தி யடியி லேயும்
மச்சவ டய்யன் நிலத்தி லேயும்
கூத்தன் கொடிக்கா லடியி லேயும்
கொண்டய்யன் கண்ட நிலத்திலுமின்னும், 125

கருப்பங் கட்டை நிலத்தி லேயும்
காலாடி பூலா வடியி லேயும்
குறுங்குடி தாங்கி தன்னி லேயும்
கூறும்வா ழைக்கட்டை தன்னிலேயும்
திருத்திய புங்கடி தன்னி லேயும்
செழித்த புளியடி மாவ டியிலும்
சிறப்புட னெருவைப் பித்தே னெங்கள்
திருமு ருகன்பண் ணையாண் டவரே. 126

## பள்ளனைத் தொழுவில் மாட்டல்

### கலிப்பா

மன்றில்வடி வேலவனார் வயலிலெரு வைப்பித்தேன்
என்றுபொய்யைச் சொல்ல விளையபள்ளி யோடுறங்கிச்
சென்றுவந்த தென்னெனச்சீ றிப்பண்ணை யாண்டகையும்
நன்றாச்சு தென்றுபள்ள னாணிடக்
குட்டையிற்போட்டாள். 127



## குட்டையிற் பள்ளனைக் கண்டு இளையபள்ளி புலம்பல்

#### இராகம்: சியானா. திரிபுடைதாளம்

அந்த வகை யிளைய பள்ளி
அறிந்துபள்ளன் கிட்டவந்தே
இந்தவகை மூத்தபள்ளி
இத்தனைக்கோ பண்ணிவைத்தாள்
பந்த யங்கள் சொல்லி யந்தப்
படுநீலி செய்தகதை
உந்தன் மனந் தன்னி லேதான்
உடனேதா னறிவாயே. 128

வெளுத்த தெல்லாம் பாலா மென்றே
விருதாவி லவளைமெச்சி
வழுத்தி னையே யவள் தொழிலை
வரவரக்கண் டறிவாய்பள்ளா
அழுத்த மிட்டுப் பண்ணைக் கார
னவனிடத்தி லென்னசாடி
கொழுத்தி னாளோ வுனக்கு மிந்தக்
கோலம்வந்த தறியாயோ. 129

புருச னையுந் தெய்வ மென்று
பூசிக்காத தொண்டியளை
ஒருநா ளும்மே வைத்தி ருக்க
வொண்ணாதென்ப தறியாயோ
மருவி னாலுந் துடியில் பெண்டீர்
மடிநெருப்பென் றௌவைசொன்னாள்
குரைசெய் யோடு தூற்றும் பெண்டீர்
கூற்றுவனென் றறியாயோ. 130

## மூத்தபள்ளி பள்ளனுக்குச் சோறு கொண்டுவருதல்

### கலிப்பா

தென்பழனிப் பள்ளிசொன்ன சேதிகேட் டுக்குடும்பன்
உன்மதிபோ லேயவட்கெங் குண்டாகப் போகுதென்றே
அன்புமொழி பேசியவ ளையனுப்ப மூத்தபள்ளி
துன்புறுதன் பள்ளனுக்குச் சோறுகொண்டு வந்தாளே.131

**சிந்து**

**இராகம்: குறிஞ்சி. திரிபுடைதாளம்**

எங்கள் பள்ளனைக்
குட்டையி லேபோட்
டிருக்குது நீர்சொல்லு—மையா
எங்கள் அண்ணன்தெய்
வங்கள்செய் தானாமென்
றெனக்குக் கறியுடன்—சோறும்
தங்கை யென்றுகொ
டுத்துவிட் டால்நானும்
தனித்துண் பதுஞாய—மல்ல
உங்க ளடியா
னுக்கீந்தாற் சோறும்
உண்பானோ சொல்பண்ணை—யாண்டே. 132

**குட்டையிற் பள்ளனைக் கண்டு மூத்தபள்ளி கூறல்**

**கலிப்பா**

தன்னைவமுத் திப்புகழ்ந்த தாசானு தாசனுக்கு
முன்னவனாய் நின்றெதையு முடிக்குஞ் சிவகிரியான்
செந்நெல்பண்ணைக் காரனுடன் சேதிசொல்லி மூத்தபள்ளி
அந்நிலையிற் பள்ளனைக்கண் டவள்சிரித்துச்
சொல்வாளே. 133

**சிந்து**

**இராகம்: யதுகுலகாம்போதி. அடதாளச்சாப்பு**

மருந்துக் காரி மயக்கத்திற் சிக்கி
மதிம யங்கியே யென்னைக்கண் டப்போ(து)
எரிந்து வீழ்ந்துமே பேசின தெல்லாம்
இப்போ நீயனு பவிக்கிறாய் பள்ளா
வருந்தி நான்சொன்ன தையுங்கே ளாமல்
வட்டில் வைத்தபக் கம்வாய்வைத் தாயே
பொருந்துந் தன்வினை தன்னைச்சுற் றும்விதி
பொய்க்கா தேடாவை யாபுரிப் பள்ளா. 134



கள்ளத் தனமி ருந்தாலு முன்னையுங்
காட்டிக் கொடுத்துக் கடக்கநின்றாளே
கொள்ளி கொண்டு தலைசொரிந் தாற்போற்
கொண்டா யேதென் பழனிப்பள் ளியைத்
துள்ளி னமாடு பொதிசுமக் குமென்று
சொன்னப டிக்குச் சிக்கிக்கொண் டாயே
பள்ளஞ் சேர்கொப்பத் தானைப்போற் குட்டையிற்
பட்டுக் கொண்டாய்வை யாபுரிப் பள்ளா. 135

மன்றி லிளைய குடிகொண்ட பேர்க்கு
வரிசை யோவரு மோபள்ளா கேளாய்
துன்று மூளிவாய் மூதேவி யாமெனச்
சொல்வர் நாழிவாய்ச் சீதேவி யாகிடு
மென்று சொன்ன பழமொழி பொய்யோவுன்
இளைய பள்ளியை மெச்சிக்கொண் டாயே
பன்றி யுடனே கூடின கன்றுபோற்
பழனிப் பள்ளியைக் கூடினாய் பள்ளா. 136

முட்டுண் டுகுனிந் தபிற கானாலும்
மோட்டுப் புத்தியை விட்டுக் கவரிமான்
கட்டுப் பட்டாற்போ லென்வார்த்தைக் குள்ளேநீ
கட்டுப் பட்டாலிக் காரியம் வருமோ
குட்டு மார்க்கத்தை விட்டுத்துன் மார்க்கங்
கொஞ்சத் தினங்கள் வருமாகை யாலே
சட்டம் விட்டம ரமனை யாரிடந்
தான்செல் லாதுவை யாபுரிப் பள்ளா. 137

**குட்டை மீட்கும்படிசெய்ய மூத்தபள்ளியைப் பள்ளன் வேண்டுதல்**

**கலிப்பா**

இப்படியே மூத்தபள்ளி யெடுத்துரைத்துச் சேதியெல்லாஞ்
செப்பநா ராசமெனச் செவிதன்னி லேநுழையத்
தப்பிதஞ்செய் தேனீயுந் தான் பொறுக்க வேணுமென்று
கப்புத் தலைக்குடும்பன் கலங்கிப் புகல்வானே. 138

சிந்து

இராகம்: நாதநாமக்கிரியை. அடதாளச்சாப்பு

பல்லவி

இதுவேச மயமெனை ரட்சி—புதுமதுர
இங்கித மொழிவை யாபுரிப் பள்ளி

அநுபல்லவி

தன்கேடு பிறத்திக்குச் சூடு—மாச்சே
தானாடா தேபோனா லுஞ்சதை யாடும்
வன்மமா யென்காலிற் போடுங்—குட்டை
மரத்தைவெட்டிநீக்கி மகிழ்ந்திப்போ கூடு(இ)

சரணங்கள்

உன்னுடையவார்த்தையைத் தட்டேன்—இனிமேல்
உன்னாணை யென்கொஞ்சப் புத்தியை விட்டேன்
இன்னமி ளையகுடி கட்டேன்—நேற்றும்
இன்றும யங்கிநான் வெகுபாடு பட்டேன்(இது)

தயவென்மேல் வைத்திட வேணும்—இனிச்
சரியொத்த பள்ளர்கண் டால்மன நாணும்
கயவருக் கென்னமாக் காணும்—பண்ணைக்
காரனார்க்கென் மீதிற்கவடிப் பாய்த்
தோணும்(இது)

அடிக்கடி யென்னையே தொட்டுக்—கோவம்
ஆகாத டியுனக் கிந்தப்பு ரட்டும்
அடித்துப்பே சுவாயெந்தன் மட்டும்—நம்மள்
அரமனைக் காரிய முன்னாலே கிட்டும்(இது)

சிந்தைநொந் தேனடி கொல்லி—மலர்த்
தேனுக்கிணை யாகிய பூருவ வல்லி
யெந்தள வாகிலுஞ் சல்லி—பேசி
என்னைவி டுவிக்க வேணுநீ சொல்லி.(இது) 139



பள்ளன் கால் குட்டையைக் கழற்றும்படி
பண்ணைத் தலைவனை மூத்தபள்ளி பரவல்.

கலிப்பா

செஞ்சிலைவேள் போற்றுஞ் சிவகிரிவே லவரறியக்
கெஞ்சினபள் ளனைப்பார்த்துக் கெலிப்பாக மூத்தபள்ளி
அஞ்சலென்றே யுன்சிறையை யான் தவிர்ப்பே
னென்றுசொல்லிக்
கஞ்சமுக னானபண்ணைக் காரன்முன்பு சொல்வாளே. 140

சிந்து

இராகம்: புன்னாகவராளி. சாப்புதாளம்

ஐயாவொ ருவிண்ணப் பஞ்சொலக்
கேளுங்கா ணாண்டே—நானும்
அறியாத புத்தியிற் பரியாசம்
போற்சொன்னே னாண்டே
கையாரக் கண்டக ளவும்பொ
றுப்பீர்கா ணாண்டே—பள்ளன்
கஞ்சிகு டிக்கமாட் டாமற்கி
டக்கிறா னாண்டே. 141

தேடியி டும்பிள்ளை யல்லவோ
பள்ளன்கா ணாண்டே—இனித்
தேவரீர் சித்தமென் பாக்கியம்
யோக்யன்கா ணாண்டே
ஆடிகா லாவதி கோடைநா
ளாச்சுகா ணாண்டே—பள்ளன்
அல்லாமற் பயிரிடு வாருண்டோ
சொல்லுங்கா ணாண்டே. 142

தன்வீட்டு விளக்கென்று முத்தமிட்
டேன்கா ணாண்டே—அது
தான்சுடு மென்றதை கைமைய
றியேன்கா ணாண்டே
என்வீட்டுப் பிழைப்புக்கி டக்கேடு
செய்தேன்கா ணாண்டே—மெத்த
எத்தனை யானாலும் பெண்புத்தி
பின்புத்தி யாண்டே. 143

சத்யமாய்ப் பள்ளன்மே லொருதோச
மில்லைகா ணாண்டே—நானுஞ்
சாராய வெறியிலே தப்பிதஞ்
சொன்னேன்கா ணாண்டே
பத்தும்பத் தும்விசா ரியாமற்
சொன்னேன்கா ணாண்டே—பள்ளன்
பழனிப்பள் ளிவீடு—போறதாற்
சொன்னேன்கா ணாண்டே. 144

ஊர்க்குரு விமேல்ரா மபாணந்
தொடுப்பாரோ வாண்டே—எங்கட்
கும்மையல் லாமல்வே றேகதி
யுண்டோசொல் லாண்டே
ஆர்க்கிதஞ் சொல்லிவி டுவிக்கப்
போறேன்கா ணாண்டே—பள்ளன்
அறிந்தறி யாமற்செய் குற்றம்பொ
றுப்பீர்கா ணாண்டே. 145

மார்புவி ழுந்தால்வ யிறல்லோ
தாங்குங்கா ணாண்டே—உங்கள்
மனதறிந் துநாங்கள் நடக்கமு
டியுமோ வாண்டே
தாபந்தப் படுகிற பள்ளனை
விடச்சொல்வா யாண்டே—பள்ளன்
தானோடிப் போனாலும் நானும்பி
ணையல்லோ வாண்டே. 146

## பள்ளன் வித்துவகை மாட்டுவகை கூறல்

### கலிப்பா

சேல்விழியாள் மூத்தபள்ளி செப்பினதாற் பள்ளனையும்
கால்மரங்கள் வெட்டிக் கனவரிசை செய்தபின்பு
வேல்முருகன் பண்ணை விசாரிப்பான் தன்னுடனே
வால்விரைநெல் வர்க்கமுடன் மாட்டுவர்க்கஞ்
சொல்வானே. 147



## வித்துவகை

### சிந்து

### இராகம்: காம்போதி. ஆதிதாளம்

சுருணைவாரி சுருணைவாலான்
மணல்வாரி—நெல்லும்
சூரியச்சம் பாநெல்லுஞ் சீரகச்சம்பா
கருங்குருவை பனைமுகரி
செந்தாழைநெல்லும்—சிறு
கத்தூரிச்சம் பாநெல்லுங் காடைக்கழுத்தான். 148

பூசைப்பொட்டிச் சம்பாகார்த்
திகைச்சம்பா—வாசப்
புழுகுச்சம்பாமுத்துச்சம்பா தேவன்சம்பா
வாசியானைக் கொம்புச்சம்பா
இலுப்பைச்சம்பா—நெல்லும்
வங்கிநா ரர்யணன்க லிங்கராயன். 149

குத்தாரிம சப்புழுதி
இடைக்காடான்—நெல்லுங்
குங்குமச்சம் பாநெல்லு மொட்டன்சம்பா
சித்திரைக்கா லிவாலான்
அச்சுமுறித்தான்—நெல்லும்
சிறைமீட்டான் சித்ரவண்ணன் பேராவண்ணன். 150

கோதும்பை யழகிய
மணவாளன்—நெல்லும்
குலைவாழை கட்டைவாலா னாகராயன்
காதிமேகந் திரைகொண்டான்
ராமபாணம்—நெல்லும்
கண்ணாடிக் கூத்தன்மகி ழலங்காரி, 151

அன்னதானி செம்மிளகி
கல்லுண்டை—நெல்லும்
அழகுச்சம்பா மிளகுச்சம்பா முத்துவிளங்கி
வண்ணப்பூம் பாளைமுலை
முண்டன்மூக்கன்—நெல்லும்
வயங்கியேப ரக்குஞ்சிறு குருவிநெல்லும், 152

இதுமுத லாகவேய
நேகநெல்களின்—வர்க்கம்
ஈரையாயி ரங்களஞ்சி யத்திலேதானே
பதிணெண்ணாயி ரஞ்சலகை
போட்டிருக்கிறேன்—விரை
பதனம்பண்ணி யிருக்குது பண்ணையாண்டே.153

### மாட்டுவகை கூறல்

புல்லைக்காளை வெள்ளைக்காளை
காரிக்காளை—செவலைப்
போருக்காளை மயிலைக்காளை யுச்சிக்கொம்பன்
நல்லகட்டைக் காளைமுதல்
நெட்டைவாலுக்—காளை
நாக்குளாவி யாணிக்காலன் கருமறையான்,154

சுட்டிக்காளை யொற்றைக் கொம்பன்
சட்டித்தலையன்—நல்ல
சுள்ளிக்கொம்புக் காளைகெருட முகவன்காளை
கட்டைக்காரி வட்டப்புல்லை
சுட்டிவெள்ளை—நெட்டைக்
காலனொடு வாலாட்டி சீட்டிக்கொம்பன்.155

குடைச்செவியன் பசுக்காத்தான்
சடைவிழுந்தான்—குத்துக்
குளம்பனாந் தைக்கண்ணன் மோதுகாலன்
அடுத்தவீடு பிடுங்கிசெம்
மறைக்காளை—முதல்
ஐயாயிர மெருதுமி ருக்குதாண்டே. 156

### கொழு, கலப்பை, மேழிவகை கூறல்

அரியரப்ர மாதியாலே
வெல்லமாட்டாத—வோர்
ஆயுதங்க ளாலடித்த வாயிரங்கொழு
கரியகடல் நடுவேநின்ற
மாமரத்தையே வெட்டிக்
கலப்பையா யிரமேழிக் கையிலாயிரம். 157



### நுகம்வகை கூறல்

..................
......................
..................
நுகத்தடியி லோராயிரம்
விசுவகர்மா—வெகு
நுண்ணிதமாய்ச் செய்துதந்தான்
வைத்திருக்கிறேன். 158

### வடக்கயிறு

காம்பீரியஞ் சேர்சூரன்
தம்பிமார்கள்—......
.......................
..................
............—சேரக்
கயிறாக்கி வடக்கயிறாய் வைத்திருக்கிறேன்.159

இதுமுத லேத்தனத்தைப்
பதனம்பண்ணிக்—கொண்டே
இருக்கிறேன் தேவரீர்க டாட்சத்தாலே
நதிபெருகி நல்லபட்டம்
வந்துவாச்சுதே—இப்போ
நாளேருங் கட்டவேணும் பண்ணையாண்டே.160

### நன்னாட்குறித்து நாளேரிடல்

#### கலிப்பா

ஏரும் பலவிரையு மேர்க்காலுங் கொண்டிமுதற்
சீரும் வகைவகையாய்ச் செப்பினதெல் லாமுங்கேட்
டாரும் பரவு மறுமுகனார் பண்ணையையன்
கூறுமுகூர்த் தங்குறித்துக் குடும்பனுக்குச்
சொல்வானே. 161

#### சிந்து

இராகம்: குறிஞ்சி. ரூபகதாளம்

தசமிவெள் ளிக்கிழமை யுத்திரநட் சேத்திரஞ்
சார்தைது லாகரணஞ் சுபயோகமுங்

குசனிலாக் கும்பலக் கினத்திலா மென்று
கூறியே வேதியர்கள் நேமித்தா ரின்று
இசைசெறி சிவகிரியில் முருகன்பண் ணைக்கே
ஏர்பூட்ட நாளிதுவே நல்லநா ளென்றே
அசையாத புகழ்சேரும் பண்ணைக்குத் தலைவ
னார்புகலக் குடும்பன்வயல்
தன்னிலேசேர்ந்தான். 162

### காளைகளை ஏரிற்பூட்டல்

#### கலிப்பா

வயலில்வந்து நின்றுகொண்டு வடிவேல ரைப்புகழ்ந்தே
அயலிலே நின்றபள்ள ரனைவோருங் கூட்டமிட்டுச்
செயலான கட்குடித்துச் சீறியிரு கண்சிவக்க
இயலிசைசேர் குரவையுமிட் டேர்பூட்டத் துணிந்தனரே. 163

### சிந்து

#### இராகம்: சௌராஷ்டிரம். அடதாளச்சாப்பு

குதித்துக் குதித்துக் கேக்கை போட்டுக்
குடும்ப ரெல்லோருங் கூடியே
குமரர் பதத்தைப் போற்றி வாழ்த்திக்
கூடு கொம்பனைப் பிடிக்கவே
கதித்த பழனிக் குடும்ப னுமொரு
காரி யெருதைத் துரத்திப் போய்க்
கட்டிப் பிடிக்கப் போன வுடனே
எட்டிக் குதித்துப் பாயவே
எதிர்த்தி டும்புல்லைக் காளை யையந்த
இருளக் குடும்பன் பதுங்கிப்போய்
இருகொம் பைப்பிடித் தமட்டி யேயவன்
ஒருகை யால்மெள்ளத் தடவியே
மதித்துப் பிடிக்கச் சோலைக் குடும்பன்
மகனோ டியொரு காளையை
வாலைப் பிடித்துக் காலைத் தூக்க
வட்டம் போடுது பள்ளீரெ. 164



கீர னைச்சிறை விடுத்த தமிழன்
சார மதனை வினவினோர்
கிளரி டுஞ்சிவ கிரிமு ருகையன்
வளரி டும்பண்ணை வயலிலே
சூரத் துடனே யருளக் குடும்பன்
காரிச் செவலை யெருதையே
சுற்றி முதுகைத் தடவிக் கொம்பைப்
பற்றி யேபிடித் திழுக்கவே
மாரிக் குடும்ப னோடிப் போயொரு
சூரிக் கொம்பனைப் பிடிக்கவே
மருதக் குடும்பன் மயிலை யெருதைப்
பொருதிப் பிடிக்க முடியாமல்
ஓரத்தில் வந்தவன் வீழ்க் வேயங்கே
தூரத்தி னின்றிடும் பெரியானும்
உடனே யேவந்து தூக்கி யெடுக்க
விடுவி டென்கிறான் பள்ளீரே. 165

முச்செகந் துதிக்கு மோக னனெழிற்
பச்சைம யிற்பரி வாகனன்
மூல காரணன் சிவகி ரிவடி
வேல னார்பண்ணை வயலிலே
பிச்சைக் குடும்ப னோடி யேநடு
உச்சிக் கொம்பனை முடுக்கியே
பிறகே தொடர்ந்து போகை யிலது
கறக றென்றுதான் சுழலவே
நொச்சுக் கொட்டியந் தோணிக் குடும்பன்
பிச்சி மகளுங் காணவே
நொடியி லேயொரு நெடும றையானைப்
படப டென்றுபோய்ப் பிடிக்கவே
மெச்சிக் கொண்டாளந்த ராயக் குடும்பன்
கெச்சித மாய்க்கட்டைக் காளையை
விடுவி டென்றவன் பிடித்து முதுகைத்
தடவு றான்பாரும் பள்ளீரே. 166

மாசி லாமணித் தீப னார்சிவ
கோச மந்திர ரூபனார்
வரியெ னுமரு ரூப னார்சிவ
கிரிமு ருகனார் வயலிலே

ஏசடி யான்மீசை முறுக்கிக் கொண்டொரு
ஊசிக் கொம்பனைப் பிடித்தவன்
இழுத்து மற்கட்ட நாச்சி மகளுங்
கிளுக்கி ளென்றுதான் சிரிக்கவே
பேசாமற் சவரி முத்த னுங்கிட்டக்
கூசாம லேநிமி சத்தினில்
பெரிய வெருதைச் சருவிப் பிடிக்க
அரிய நாச்சிக் குடும்பனும்
ஓசனை பண்ணாமற் கரும றையானைக்
கீசனைப் போலவே ரோசமாய்
ஓடிப் பிடிக்கக் கரணம் போடும்
வேடிக்கை பாரும் பள்ளீரே. 167

திசைபோற் றுங்கவி ராச பண்டிதன்
விசையகி ரிவேலச் சின்னோவன்
சிந்தையிற் கூடிக் கொண்ட பழனிக்
கந்தனார் பண்ணை வயலிலே
அசையாமற் கோணவாய்க் குடும்ப னுமொரு
தசையான வெள்ளை யெருதையும்
அதட்டிப் பிடிக்கப் போகை யிலது
வெருட்டி எதிர்த்துக் கொள்ளவே
விசையாகக் கொம்பைப் பிடித்துக் கொண்டவன்
அசையாமற் கட்டி நிறுத்தினான்
வீரிக் குடும்ப னோடிப் போயொரு
காரிச் செங்கன்றைப் பிடிக்கையிற்
புசப லத்தினாற் பாக்கி யமொரு
மசையெ ருத்தைப்போய்ப் பிடிக்கவே
புழுதி வயலிற் றலைகீ ழாகவே
விழுவ தைப்பாரும் பள்ளீரே. 168

### காளை வெருண்டது பள்ளத்துப் பாய்தல்

முத்த மிழையும் பகரு வோனுமை
புத்த முதப்பால் நுகருவோன்
முரசி னொலிகள் மீறி யசிவ
கிரிமு ருகனார் வயலிலே
பொத்தச் சோலைக் குடும்ப னுமொரு
மித்துச் செவலைச் சேங்கன்றைப்



போய வன்மெள்ளப் பிடிக்க வேசீறிப்
பாய வந்திடுஞ் சமயத்தில்
மெத்தச்ச வுரியங் கூறி யேரண
சுத்த வீரனைப் போலவே
மிரண்டி டும்பொலி யெருதைப் போயவன்
முரண்டுத் தனமாய்ப் பிடிக்கையிற்
குத்திப் பாயவே மயங்கிப் பெரிய
உத்தி கையில்லை யாபுரிக்
குடும்பன் விழுந்து கிடக்கி றானந்த
இடும்பைப் பாரும் பள்ளீரே. 169

### பள்ளிகள் புலம்பல்

#### கலிப்பா

துள்ளிப் பொலியெருது தொடர்ந்துபள்ள னைப்பாய்ந்து
தள்ளிவிட வேமயங்கித் தான்விழுந்த சமயமதில்
புள்ளினஞ்சேர்ந் தருள்ரோமா புரவழிசேர் தென்பழனிப்
பள்ளியுடன் வையாபுரிப் பள்ளியும்வந் தெய்தினளே.170

### இளையபள்ளி

#### சிந்து

இராகம்: கேதாரகௌளம். ஆதி தாளம்

புருசனைக் கண்டவுட னன்னாள்—மெத்தப்
புலம்பியே பள்ளியீது சொன்னாள்,
மருளப்பள்ளர்க் கேச்சுக்கிட மாச்சே—யுன்பலம்
மாட்டுக்கு மாட்டாமற் போச்சே

ஒருபணத்துச் சாராயங் குடித்தாய்—மிரண்டே
ஓடின மாட்டையேன் பிடித்தாய்
திருடியா னிளையபள்ளி முறையோ—விரும
தேவ னெழுதினதுங் குறையோ. 171

இன்றுநீ யார்முகத்தில் விழித்தாய்—வாய்க்கிருதாய்
எந்தத்தெய் வங்களைநீ பழித்தாய்
குன்றுபோ லொருவரப்பில் வீழ்ந்தா—யெவருக்குக்
குடிகேடு செய்துநீ வாழ்ந்தாய்

நன்றென்று புத்திசொன்னாற் றட்டாய்—இப்போ
நட்டாற்றிற் கைநழுவ விட்டாய்
மன்றில்த னியேவிட்டுச் சதித்தாய்—புலம்பி
வாடவே யென்றலையில் விதித்தாய். 172

### மூத்த பள்ளி

என்னைவிட் டொருநாளும் பிரியா—யொருவர்போ
லிந்நாளிற் கவடொன்று மறியாய்
உன்னைவிட் டென்கவலை தீரேன்—இனியுண்டான
துரைத்தே னொருவர்முகம் பாரேன்
பன்னாளும் பொய்யெனக்கு விண்டாய்—தென்பழனிப்
பள்ளிதனைக் கொண்டபலன் கண்டாய்
சின்னப்பள்ளி கைமருந்துக் கள்ளா—இந்தத்
தேசம்புகழ் வையாபுரிப் பள்ளா. 173

இளையபள்ளி யுடனேநித்தம் படுத்தா—யுனக்குப்பின்
எல்லாவற்றை யுமவட்குக் கொடுத்தாய்
தழுவியுனைக் கூடியிருப் பேனோ—யிளையவள்
சத்தியத் தோசமது தானோ
மொழிகூறி யாரைநோக வைதாய்—பழனி
முருகற்கு மென்னகுறை செய்தாய்
களைதீர்ந் தெழுந்திருப்பாய் குடும்பா—ஈதோர்
கதையாச்சே வையாபுரிப் பள்ளா. 174

### பள்ளனெழுந்து வித்துழுது நாற்றுப்பாவுதல்

#### கலிப்பா

மூத்தபள்ளி சொற்கேட்டு மூர்ச்சைதெளிந்துபள்ளன்
பார்த்தெவரு நிற்கையிலே பருங்கருட னிடம்பாய
ஏற்றமா யுழுகையிலே யிடத்தெருதாக் கஞ்செய்ய
மாற்றிவலத் தெருதுநீர் விடுக்கச்சா லோட்டினனே. 175

### சிந்து

#### இராகம்: கல்யாணி. ஆதி தாளம்

உழுதவு ழவுச்சேற்றைக் கரைத்தான்—வயல்
உடனேப ரம்படித்து விரைத்தான்



முளைக்குக்கங் களவுநீர் நிறைத்தான்—பள்ள
முழுதும் வெட்டிவிட்டுச் சரித்தான்
நாற்றைச் சுற்றிவேலி நட்டான்—நாற்று
நலங்காமல் பயிர்ப்பொங்க லிட்டான்
காத்துப் பயிரைக்காய விட்டான்—பள்ளன்
கண்டு மனதுமகிழ்ந் திட்டான்
மண்டி மதுவையவ னுண்டா—னொரு
மாட்டுக் கிட்டப்போயு மண்டான்
கண்ட பருவமுட் கொண்டான்—பண்ணைக்
கார னுடனேபோய் விண்டான். 176

### நாற்று நடல்

#### கலிப்பா

கடம்பணிந்த வேலர்பண்ணைக் காரனிட நாற்றெடுத்து
நடவுநட வேணுமென்று நவின்றனுப்பிக் கொண்டுபள்ளன்
அடைவுடனே யூரிலுள்ள வாற்றுக்கா லாட்டியர்கள்
புடைசூழ வேவயலிற் போய் நின்று விண்டானே். 177

### சிந்து

#### இராகம் கல்யாணி. ஆதி தாளம்

### தொழி போடல், நாற்றுப்பறித்தல்

மள்ளர்க ளெல்லோரு மேர்பூட்டி
வளமா கத்தரி சடித்தபின்பு
மெள்ளவி ரட்டித்து முச்சலித்து
விட்டுத்த டவிநா லுழவுழுது
பள்ளிய ரெல்லோரு நாற்றெடுத்துப்
பாங்காய் முடித்துக்குப் பஞ்சேர்த்துத்
துள்ளும யிற்பரி யானைவாழ்த்தித்
தோத்திரஞ் செய்து பணிந்தாரே. 178

### நடுகை முறை

நாற்றையெ டுத்துங்கள் நெற்றிவைத்து
நாலுதி சைகளை நோக்கிவாழ்த்திப்
போற்றித்து தித்துநி ரைவகுத்துப்
புகழ்ந்துகு ரவைமு ழக்கிப்பயிர்

ஈற்றுநெ ருங்காம லணியணியாய்
இடையிற்க லந்துபோ காமல்மெள்ள
மாற்றியே நண்டதூ டேபோகாமல்
வளமாய்ந டுங்கடி பள்ளீரே. 179

**பள்ளியர் வகை**

வீரியு நன்னியு டைச்சிசின்னி
வேலிம ருதிபெ ரிச்சிசெம்பி
மாரிதி ருவியி ருளிமுத்தி
மரியாள்முத் தனாச்சி யன்னமையுஞ்
சூரிபூ விசாத்தி காத்திசங்கி
சோலைபி றவிச டைச்சிபொன்னி
யாருங்கூ டியேகைச் சித்திரமாய்
அடைவாய் நடுமடி பள்ளீரே. 180

**நடுகை வளப்பத்திடை பள்ளர் பள்ளியர் களிப்பு**

**கலிப்பா**

ஊற்றுக்காற் செந்தே னுலவுஞ் சிவகிரியான்
ஆற்றுக்கா லாட்டியர்கா லாடுங்காற் பண்ணைவயற்
சேற்றுக்கான் மள்ளரெல்லாந் தென்றற்கா லான்மெலிந்து
நாற்றுக்கால் விட்டு நடக்கக்கால் செல்லாதே. 181

**சிந்து**

**இராகம்: சௌராஷ்டிரம். மட்டயதாளம்**

துள்ளும யிற்பரி வாக னன்மட
வள்ளிக்கி சைகுழ மோகனன்
துய்ய னாகிய சிவகி ரிமுரு
கய்யன்பண் ணைவயல் நடுகச்சே
பள்ளி யர்குழற் சொருக்கி லுமிரு
வள்ளைபொ ருவிழி நெருக்கிலும்
பரும தக்கோட்டு முலையி லுங்கரு
மருவப் புருவச் சிலையிலும்
வெள்ளைய னப்பேட்டு நடையி லுமருக்
கள்ளூறுங் கதலித் தொடையிலும்
விந்தைசேர் தண்டொட்டிக் குழையி லுமுழுச்
சந்த்ரோத யமுகக் களையிலும்



தெள்ளிமை யாய்ப்பேசும் பேச்சி லுமன
துள்ளமு ருக்குங்கை வீச்சிலும்
சிந்தைத ளர்ந்துசிற் றிடையிலுமனம்
நொந்துமெ லிந்தது பள்ளீரே. 182

அங்கத்தைப் பூம்பாவை யாக்கி னார்கூடற்
சங்கத்திற் பிரசங்க வாக்கினார்
அரிம னமகிழ் மரும கன்சிவ
கிரிமு ருகனார் வயலிலே
பங்கத்திற் பள்ளிய ரெல்லோ ருங்கூடிச்
செங்கையி னாற்று முடியையும்
பங்கி யேயெடுத் தலைத்துக் குலைத்துச்
சங்கை யாய்ச்சம்பா நடுகச்சே
துங்கப் பெரியான் மகளுந் தன்னுடை
கொங்கையைத் திறந்து மூடவே
சோலைக் குடும்ப னோடிப் போயவள்
காலைப் பிடித்துக் கும்பிட்டுப்
புங்கம்பு தைக்குள்ளே வாவென் றானவள்
இங்கித மாகவே போவென்றாள்
பொழுது போகட்டு மென்றுசொல் லிப்போட்
டுழுகப் போகிறான் பள்ளீரே. 183

சமண ரைக்கழு வேற்றி னார்வளர்
அமரர் சிறையை மாற்றினார்
சரம சரமு மாகி யசிவ
கிரிமு ருகனார் வயலிலே
திமிறி மற்கட்டி விளையா டிக்கொண்டு
கமரி மானைப்போற் பள்ளியர்கள்
சிரித்துப் பேசி நடுகச் சேயந்தச்
சரித்தி ரத்தையும் பெரியானுங்
கமனித் துக்கொண்டு பார்க்கை யிலொரு
குமரிச் சிறுக்கி மெள்ளப்போய்க்
கண்ணைக் காட்டிச் சைகை பண்ணின
விண்ணாணத் தையவ னண்ணாந்து
நிமிசத் திற்கண்டு மனதி லேசற்றே
சமுச யமெண்ணி யவளையும்
நில்லாதே வீட்டுக்குப் போவென்று தள்ளிச்
சொல்லாமற் சொல்கிறான் பள்ளீரே. 184

பண்ட சுரரைக் கொன்ற வனாழி
முண்டகத் தயனை வென்றவன்
பருவெய் யோன்மதி புகழ்சி வகிரி
முருகய் யன்வயல் நடுகச்சே
வண்டக்காத் தான்பெண் டாட்டி யுமந்தச்
சண்டிப் பெரியான் மகளுமே
மல்லாரிக் கோலங் கட்டி யேபள்ளர்
எல்லாரும் பார்க்கமற் கட்டியே
ரண்டு பேர்களும் வீழ்க வேயதைக்
கண்டு மருதக் குடும்பனும்
நல்லவன் போலே யோடி யவளை
மெல்லவே தூக்கி யெடுக்கையிற்
செண்டு முலையைப் பிடிக்க வேயவள்
கொண்டை யைப்பிடித் தடிக்கவே
சேற்றில்வி ழுந்தவள் முந்தானை யையீர்த்துப்
போர்த்துக் கொள்கிறான் பள்ளீரே. 185

புள்ளிமான் மகளைத் திருடி னானொரு
வெள்ளிலை யுஞ்சுருள் வருடினோன்
புரவ லன்பணி மரும கன்சிவ
கிரிமு ருகனார் வயலிலே
வெள்ளை வீரியுஞ் சின்னப் பழனிப்
பள்ளி மகளுங் கூடியே
வேடிக்கை யாக்கும்மி யடித்துக் குதித்துப்
பாடிவி ளையாடுஞ் சமயத்தில்
குள்ளப் பெரியான் நிறைய மண்டிய
கள்ளு வெறியால் மயங்கியே
கூந்தல் நெகிழச் சேர்ந்து பிடிக்கப்
பூந்து கிலது நெகிழவே
துள்ளி வரப்பில் வீழ்க வேயொரு
கள்ளக் கருப்ப னோடிப்போய்த்
தூக்கி யெடுக்கிறாப் போலேய ணைத்திடும்
போக்கைப் பாரும் பள்ளீரே. 186

அந்திவண் ணனருள் பால னார்சிவ
சந்திர சயில வேலனார்
அரிய வேத சொரூப னார்சிவ
கிரிமு ருகனார் வயலிலே



மந்திவாய்ச் சின்ன மருதி யுமானூர்
அந்தோணி மகளுஞ் சண்டையில்
மயிர்பி டிக்கிற சமயத் திற்சம்பாப்
பயிர்முடி விளம்பி நின்றவர்
சந்தடி யிற்சந்தைக் கூட்டத் தில்நல்ல
கெந்தப்பொ டியுங்காற் பணமென்றே
சாராயங் குடித்த வெறியள் மிஞ்சியே
நீராணிக் குடும்பன் மகளையுஞ்
சொந்த மாகிய மச்சினி யாமென்று
மொந்தை மகனு மெள்ளப்போய்ச்
சொருகு கொண்டையிற் குவளைசெருகிச்
செருமு தல்பாரும் பள்ளீரே. 187

மெய்யர்க்கு மெய்யாகி நின்ற வரென்றும்
பொய்யர்க்குப் பொய்யாகி நின்றவர்
விமல னாகிய வளர்சி வகிரி
குமரய் யன்வயல் நடுகச்சே
ஐயன்பள் ளிச்சின்ன வீரி வீட்டுக்குப்
பையவே நழுவிப் போகையில்
அழிவுக் காரப் பழனிப் பயல்போய்
வழியை மறித்துக் கொண்டவள்
கையிலே பணயம் வாங்கிக் கோவிது
பொய்யனல் லவினி யுனக்குநா
கத்தைக் காட்டு பாம்புச் சித்தனென்
றாட்டி வைக்கிறே னீயென்றன்
மையல் தீரடி யென்று சொல்லவே
மெய்யதா மென்றவ ளுதைக்கவே
மாடு போலவே விழுந்து கொண்டவன்
பாடு றான்பாரும் பள்ளீரே. 188

உம்பர் பரவுஞ் சீல னார்தமிழ்க்
கின்போ தயர்புகழ் கீலனார்
உரிய ரானவர்க் குரிய வர்சிவ
கிரிமு ருகனார் புறவிலே
கும்புகும் பாகவே கடைசி யரெல்லாங்
கம்பஞ்சம் பாவயல் நடுகச்சே

கூத்தக்கு டும்பனு மேற்ற பேரைப்
பார்த்துத் திரியு மளவிலே
வம்புச்ச டைச்சியு முடைச்சி யுமொரு
சம்பைப்பு தையோர மிருக்கையில்
வந்து கண்டவ ரெண்டு பேரையும்
அந்தக்கா ரியத்துக் கென்னென்றான்
அம்பலத் தில்வந் தாடாத டாவென்று
வம்புச்ச டைச்சிவண் டுறுக்கவே
அரும்பி டுங்குரு வேர்வை துலங்கத்
திரும்பு றான்பாரும் பள்ளீரே. 189

அன்னந டைத்தெய்வ குஞ்ச ரிமகிழ்
மன்னவர் கடப்ப மஞ்சரி
அணிசி வகிரி முருகய் யன்பதம்
பணிக விராச பூபதி
கன்னன்வி சையகி ரிச்சின் னோவய்யன்
சொன்னபள் ளேசல் தன்னையுங்
கருதிப் பாடி நடவு நட்டிடும்
பருவப் பள்ளியர் முலைதனைச்
சின்ன விளநீ ராமென் றேமந்தி
யுன்னித் தாவிப் பிடிக்கவே
செந்திக் குடும்பன் சங்கை யெடுத்து
மந்தி தன்னையு மெறியவே
தன்னந் தனியமா வின்க னியையுஞ்
சன்னல் பின்னலா யவன்மீதில்
தானே யெறிந்து குதியும் போடுற
சம்ப்ரதா யம்பாரும் பள்ளீரே. 190

மச்சாவ தாரன் மருகன் வேள்நனிச்
செச்சை யணிந்தருள் முருகவேள்
மச்ச ரூபனாஞ் சிவகி ரிவேலன்
பச்சை மாவடி நடுகச்சே
பிச்சைக்கு டும்பன் மருதி கிட்டப்போய்
மிச்சம்மா னமீனைப் பிடியென்று
பிறகே நீலி மகர மீனையும்
பெருக்கை யால்மூடிக் கொண்டவன்
உச்சித்தி ருக்கை மீனோ டுமுகம்
வச்சுச்சி றுக்கை மீனையும்



உகந்து நத்தையை யுறிஞ்சி னாப்போலே
பஞ்சிலைக் கெண்டைமீ னுறிஞ்சியே
இச்செகத் திற்கள்ளி யான மீன்களை
யிதமாய்ப பிடித்துப் பெருக்கைமீன்
இழுத்தி ராட்டிலே விரல்வைத் திடவே
குரத்தை மீனையும் பிடித்தவள்
நச்சையில் லாமலே யாடப் பள்ளனும்
நண்டைவ ராலைப் பிடிக்கவே
நல்ல படிலி மீனுக் கும்பட
நகைத்துப் பள்ளி யுடனேயே
மெச்சி யாரால் மீனி ரண்டுஞ்
சொட்டை வாளையி லோடவே
வெக்காம லக்குதி ரைமீன்க டத்தையை
மேலேறிச் செய்யுறான் பள்ளீரே. 191

குல்லைவ னத்துக் குரியவ னரன்
வில்லைமு றித்திடும் பெரியவன்
குருச டகோபன் மரும கன்சிவ
கிரிமு ருகனார் வயலிலே
மெல்லக்க டைசியர் நடுகச் சேயந்தச்
சல்லிக்க ருப்பனு நெருங்கியே
வேட்டுக் கார வீரி யைமெள்ள
மேட்டுவ யலில்நாற் றெடுக்கையில்

கல்லித் திகத்தையே முடிக்கட் டோவுன்றன்
மல்லிகைப் பூச்செண்டைப் பிடிக்கட்டோ
காமக் கமலப் பூவிலே யென்றன்
ஊமத்தம் பூவைப் பதிக்கட்டோ
செல்லப்பெண் ணேயுனை மறப்ப னோவென்று
சொல்லிச்சொல் லிக்கும்மி யடித்துமே
தெந்தி னாக்கொட்டி யவளைச் சுற்றிடும்
விந்தையைப் பாரும் பள்ளீரே. 192

சுவர்னத் தைக்கவி தாய கனவ
விவரண வேடப்பெண் ணாயகன். 193

## விளைந்தபின் செப்பஞ் செய்தல்

### கலிப்பா

தயிரருந்தி மருதமரந் தானடர்த்து வெண்ணையுண்டு
கயிறதனா லாச்சிகையிற் கட்டுண்டான் மகிழ்மருகன்
செயிரிறுத்துச் செல்வமருள் சிவகிரியான் பண்ணைவயற்
பயிர்களெல்லாம் வேரூன்றிப் பசியநிற மாகினவே. 194

### சிந்து

இராகம்: சௌராஷ்டிரம். ரூபக தாளம்

### பல்லவி

நட்டந டவெல்லாம் பசுப்பேறிப் பயிர்தேறி
விட்டுணு வெனவளர்ந் தோங்கியே

### அநுபல்லவி

முட்டக்கி ளைகிளைத்துத்
திட்டமாய்ப் பாம்பின்சூலங்—கொண்டது(நட்டந) 195

### சரணங்கள்

................
கட்டவுழ வேபுடையாய
மட்டியா கியகல்லார்—போலவே
முட்டியேத லைநிமிர்ந்து. அ

மெத்தவும்பாற் கோதிநன்றாய்
முத்துப்போல வேகாய்த்து
வித்தைசேர்கல் விமரத்தை—போலே
விளைந்துத லைவளைந்து. ஆ

சித்திரமாகிய குலமாதர்கள்
புத்திபோற்ற லைகவிழ்ந்து
சத்தியலோகத் துக்கிறைவன்—போலும்
மத்தனாரீ சன்போலும். இ

விளைந்தவுடன் பள்ளரெல்லா(ரு)ம்
முழங்கிக் களிப்பேறி
வளைந்துமல் லாண்டப்ப—னுக்கு
இளந்தை யாடுவெட்டி. ஈ



பொங்கலிட்டுநாட் கதிருங் கொய்துமே
துங்கனாகி யசிவகிரிப்
புங்கவன் முன்பதாய்க்—குடும்பன்
சங்கதியா கத்தானே. உ

அலகுகதிர்க் கோட்டைவைத்து
இலக வெகுவரிசை
தலைமேற் கொண்டுவயல்—சென்றவன்
தொலையாக் கதிர்கொய்தே ஊ

அரிபரப்பிக் கதிர்களெல்லாம்
பரிமுறுக் கிக்கட்டி
விரைந்தெடுத் துக்களத்திற்—சேர்த்து
சரிந்தபோ ருங்குவித்து. எ

தலையுதிரி நெல்லடித்து
மலைபோல வேகுவித்து
நிலையாகி யவிரையைக்—கட்டிச்
செலவாகா மலேவைத்து. ஏ

சீரைப்பெறு மூன்றாநாளிற்
போரைச் சரித் திட்டுமே
மேருப்பொருப் புப்போற்கட்டை—யெல்லாம்
சேரத்தாம் புமினுக்கி. ஐ

சூடடித்த நெல்லையெல்லாஞ்
சாடில்வா ரித்தூற்றிப்
பாடிப்பொ லியளந்து—நெல்லுங்
கோடிசல கைகுவித்தார். (நட்டநட) ஒ 196

## நெல் அளத்தல்

### கலிப்பா

வெள்ளையா னைப்பதவி வேண்டிப் பணியவருள்
வள்ளல் சிவகிரியில் வாழும்வடி வேலர்பண்ணைப்
பள்ளனுமே நெல்லதனைப் பாங்கா யளவுகண்டு
விள்ளுவான் பண்ணை விசாரிப்பான் றன்முன்னே. 197

### சிந்து

**இராகம்: நாதநாமக்கிரியை. சம்பை தாளம்**

முருக்கடியின் சம்பாநெல்லில்
 முந்நூறு சலகை
சுருக்காக வேயளந்து
 சுப்பிரம ணியற்கீந்தேன்
பருக்கடிநி லத்துநெல்லைப்
 பாவலருக் கீந்தேன்
கருக்காய்நெல் லத்தனையும்
 கடைச்செல வுக்கீந்தேன். 198

அனகன் விசையகிரி
 வேலச்சின் னோவன்பூசைக்
கனகச பாபதிக்கைம்
 பதுசல கையீந்தேன்
கனகன்கண்ணப் பன்பூசித்த
 காளத்தியீச் சுரனுக்கு
மனதுடனைம் பதுசலகை
 வகையுட னேயீந்தேன். 199

திருவாவடு துறையார்பூசை
 செய்திடுஞ்ச பாபதிக்கும்
வருமகேச்சு ரர்பூசைக்கும்
 வாகனம டந்தனக்கும்
நொருப்பின்றிப் பெருவள்ளத்தில்
 நூற்றிருப துசலகை
கருத்துடனே யளந்துவிட்டேன்
 கணக்குப்ப டிக்குத்தானே. 200

பாலய்யர்ம டந்தனக்குப்
 பனையடிநி லத்துநெல்லிற்
காலிங்கரா யன்நெல்லில்
 கணக்குப்பார்த்தெண் பதுசலகை
சோலிசொல்லா மற்பொதியைச்
 சூட்டிக்கையா கப்பிடித்தே
ஆலயத்துக் கனுப்பினாற்போல்
 அனுப்பிவைத் தேன்காணாண்டே. 201



ஆலடிநி லத்துநெல்லில்
 ஐஞ்ஞூறுச லகைநெல்
கோலஞ்சேருந் தவராச
 பண்டிதருக் கீந்தேன்
வேலடிநி லத்துநெல்லை
 விளங்குபாணி பத்திரற்குச்
சோலிசொல்லா மலளந்து
 சூட்டிக்கையா கக்கொடுத்தேன். 202

கமுகடியின் நெல்லைப்பச்சைக்
 கந்தப்பைய னுக்கீந்தேன்
சமுகவித்து வான்களுக்குச்
 சலகையைஞ் ஞூறீந்தேன்
...................
 ................
...............
 .............. 203

புகழுநல்லய் யங்காருக்குப்
 பூசைப்பொட்டிச் சம்பாவில்
மிகவேயைம் பதுசலகை
 விருப்பமு டன்கொடுத்தேன்
.................
 ..............
..................
 ................. 204

வேயடியி னெல்லையெல்லாம்
 வேதியருக் கீந்தேன்
கோயிலுக்குங் குளம்வெட்டுக்குங்
 குழைபோட்ட பள்ளியர்க்கும்
....................
 ....................
தாயகமா யைஞ்ஞூறு
 சலகைநெல் லையளந்தேன். 205

சத்திரத்துக் கெண்ணூறு
 சலகைநெல் லளந்தேன்

....................
.................
.....................
....................
....................
.................. 206

மற்றநெல்லின் செலவையெல்லாம்
வகைதொகை விவரமாகக்
கற்றுணர்ந்த நம்மள்பண்ணைக்
கணக்குப்பிள் ளையெழுதி
முற்றும்வகை தொகைகண்டு
முறையாயெ ழுதிச்சுருள்
சுற்றிவைத்துக் கொண்டானந்தத்
தொகைகாணுங் காணாண்டே. 207

## மூத்தபள்ளி முறையீடு

### கலிப்பா

எல்லா வகைதொகையு மெடுத்துரைத்து மென்கணக்கைச்
சொல்லாமல் விட்டபள்ளன் சூதையினிக் கேளுமென்றே
வல்லாளன் வேலவன்வை யாபுரிப்பள் ளிகோவம்
நில்லாமற் பள்ளியர்முன் னிட்டூரஞ் சொல்வாளே. 208

### சிந்து

இராகம்: கும்பகாம்போதி. ஆதி தாளம்

சட்டித் தலைப் பண்ணை யாண்டார்
நடுக்கேளாரோ—வளைத்
தடிக்காலுப் பண்ணையாண்டார்
நடுக்கேளாரோ
மொட்டை மீசைப் பண்ணை யாண்டார்
நடுக்கேளாரோ—வாந்தை
முளிமூக்குப் பண்ணையாண்டார்
நடுக்கேளாரோ
வெட்டிச் சோலைப் பண்ணை யாண்டார்
நடுக்கேளாரோ—எங்கள்
வேலவனார் பண்ணையாண்டார்
நடுக்கேளாரோ



பொட்டி மகன் என்னுடைய
பள்ளன்செய்த—இந்தப்
புழுதிமாயங் கேளுங்கடி
பள்ளியீரே. 209

இந்தப் பாடு பட்டுழன்றும்
பள்ளனுக்குப்—புத்தி
யின்னம்வர வில்லையது
என்னவிதியோ
அந்தச் சின்னச் சிறுக்கிதென்
பழனிப் பள்ளி—மேலே
ஆசையின்ன மலைக்குது
ரோசமில்லையே
முந்தா நாள வள்முன்பாக
வென்னையும்வைதான்—நின்ற
முறைநெல்லும் பிள்ளையார்
அடிநெல்லையும்
சொந்த மென்றே வாரியவள்
கூடையிலிட்டான்—என்றன்
சுவந்தர நெற்கொடுக்கக்
கைநடுங்குதே. 210

அரிமி தித்து வைத்தநெல்லும்
பண்ணைக்காரனை—இப்போ
அலட்டிப்பேய்த் தண்ணீருக்கு
வாங்கின நெல்லும்
சரிச ரியாப் பங்கியவ
ளுக்குக்கொடுத்தான்—பேர்க்குத்
தந்தோமென்று கல்கரம்பை
கூட்டிக் கொடுத்தான்
பெருமைக்கி யாடடித்துப்
பிள்ளைகையிலே—இப்போ
பின்னையொன்று சுட்டுத் தந்த
பேர்களைப் போலே
புரிந்தா னிந்த நெல்லை நீங்கள்
எல்லோம்பாரும்—இந்தப்
புதுமைநீங்கள் கண்ட துண்டோ
பள்ளியீரே. 211

ஏசல்

| | |
|---|---|
| பழனிப் பள்ளி: | புரணி சொன்ன தென்னடிவை<br>யாபுரிப்பள்ளி—அடி<br>போடி முண்டை முறையிட்டுத்<br>திரிந்தாவதென்ன; |
| வையாபுரிப் பள்ளி: | மரியா தையாய்ப் பேசடிதென்<br>பழனிப்பள்ளி—யந்த<br>மந்தி ரத்தில் மாங்காய்விழு<br>கா்தடிபோடி. 212 |
| பழனிப்: | மூத லிச்சுப் பள்ளனையுங்<br>கேலிசெய்யுறாய்—அடி<br>மூப்புச்சொம் மெனக்குத் தந்தால்<br>மூதலியோடி; |
| வைய்ாபுரிப்: | தோத கத்தி னங்கள்வேண்டாம்<br>குடும்பனுக்கு—நீயும்<br>சொந்த மோவென் னிலும்பார்க்கச்<br>சும்மாயிரடி. 213 |
| பழனிப்: | இருக்காமல் நானு மிப்போ<br>எழுந்துவந்தேனோ—நானும்<br>ஏழுவழக் கேறி யுன்னைப்<br>போலேவந்தேனோ; |
| வையாபுரிப்: | ஒருத்தி யோடே புருசனுக்கு<br>ஆசைப்பட்டுநான்—இப்போ<br>ஓடிவந்த தெல்லா மிந்த<br>வுலகமறியும். 214 |
| பழனிப்: | குரூர மாகப் புருசன்மேலே<br>சாடியைச்சொல்லி—இப்போ<br>குட்டையடித் திட்டதுநா<br>னல்லடிபோடி. |
| வையாபுரிப்: | பிரீதி யாய்ப்பண் ணையைக்கண்டு<br>பள்ளனைத்தானே—கட்டிப்<br>பேசிவிடு வித்தவள்நீ<br>யல்லடிபோடி. 215 |
| பழனிப்: | போடி வாடி யென்றுமிஞ்சிப்<br>பேசுஞ்சலிகை—அந்தப் |



| | |
|---|---|
| | புதுப்பண்ணைக் காரனார்ச<br>லிகையல்லவோ; |
| வையாபுரிப்: | வாடி யிந்தச் சேதியெல்லாம்<br>பண்ணைக்காரனார்—மட்டும்<br>வழக்கேறா விட்டாலுன்றன்<br>வாயுமடங்கா. 216 |
| பழனிப்: | அடங்கா மலே னானாளெரி<br>மல்லியேயென்றே—என்னை<br>யனைவோரு மறிவார்வை<br>யாபுரிப்பள்ளி; |
| வையாபுரிப்: | உடம்பு தான்தெ ரியாமலே<br>பேசுறாயடி—பள்ளன்<br>உன்னையென்னை யெண்ணாமலே<br>பேசச்சொன்னானோ. 217 |
| பழனிப்: | சொல்வ தென்ன சூடுபா(டு)<br>எனக்கில்லையோ—யிந்தச்<br>சொட்டைச்சொல்லுக் காட்டாளிநா<br>னல்லடிபோடி; |
| வையாபுரிப்: | வல்ல மையாய்ப் பேசாதேதென்<br>பழனிப்பள்ளி—யார்<br>வல்லமையா ருக்குச்சத<br>மாகிநின்றது. 218 |
| பழனிப்: | நின்றப் பாலே பேசடியெச்<br>சில்தெரிக்குது—பள்ளன்<br>நின்றா லல்ல வோவுன்சேதி<br>யெல்லாந்தெரியும்; |
| வையாபுரிப்: | கன்று பன்றி யுடன்கூடிக்<br>கொண்டாற்போலவே—யுன்னைக்<br>கண்டாசைப்பட் டுக்கொண்ட<br>பள்ளன்கெட்டாண்டி. 219 |
| பழனிப்: | கெட்ட பேச்சைப் பேசவேண்டாம்<br>உனக்குத்தானே—என்ன<br>கெடுமதி கண்ணுக்குத்தோற்<br>றாமற்பேசுறாய்; |

வையாபுரிப்: கட்டு மாச்சே யுனக்கேற்ற
காலமுமாச்சே—யென்னைக்
கண்டுவந்த சிறுக்கிக்கு
மித்தனையாச்சே. 220

பழனிப்: சிறுக்கி யென்று சொல்லாதடி
சீயென்னப்போறேன்—எங்குஞ்
செல்லுங்கா சுக்குவட்ட
முண்டோசொல்லடி;

வையாபுரிப்: உறுக்கிப் பேசுத் துள்ளாதடி
புலியின்முன்னே—இப்போ
ஊஞ்சலாட வாராயது
ஞாயமல்லடி. 221

பழனிப்: முலையை யாட்டி வெட்கமில்லா
மலேபேசுறாய்—அடி
மூக்குப் போன குதிரை துவா
ரத்துக்கஞ்சாதே;

வையாபுரிப்: குலமான பள்ளி யென்றே
உன்னைக்கொண்டு—வைத்த
குருக்கள்தலை யிலேகொட்டுப்
போடவாராயே. 222

பழனிப்: உன்னைக் கண்டு வந்தேனோவை
யாபுரிப்பள்ளி—இப்போ
உழக்குக்குள்ளே கிழக்குமேற்குச்
சொல்லுறாயடி;

வையாபுரிப்: என்னைக் கண்டு வந்ததிந்த
நாடறியாதோ—நீயும்
இனிமேலென்ன வெண்ணைக்கோழி
கூவிக்கொள்ளுறாய். 223

பழனிப்: கொஞ்சப் பேச்சென் னிடத்திலே
நடவாதடி—இப்போ
கொல்லத்தெரு விலேயூசி
மாறுறாய்போடி;

வையாபுரிப்: மிஞ்சி வாய்மீ றவேவேண்டாம்.
பள்ளனுக்கு—வந்த



விதிவரப் போகுதடி
வாயடங்கடி. 224

பழனிப்: கடுக டுத்துக் கொள்வதென்வை
யாபுரிப்பள்ளி—பனங்
காட்டுநரி சலசலப்புக்
கஞ்சுமோபோடி;

வையாபுரிப்: கொடுமை பண்ணி மானமொரு
சாணாய்நிற்கிறாய்—இப்போ
குண்டுசட்டி யிற்குதிரை
யோட்டுறாய்போடி. 225

பழனிப்: சரிச ரியாய்ப் பேசாதடி
வெட்கமில்லாமல்—இனித்
தானேபசித் தாலும்புலி
புல்லைத்தின்னுமோ;

வையாபுரிப்: சிரித்துச் சரக் குப்பைக்குள்ளே
கையிடாதடி—இப்போ
தீட்டினம ரத்திற் கூர்மை
பார்ப்பதென்னடி. 226

பழனிப்: கோணிக் கோணி வீண்பெருமை
பேசிக்கொள்ளுறாய்—எந்தக்
குதிரைக்குவால் படைத்தாலுங்
குண்டிமட்டடி

வையாபுரிப்: காணி கொள்ள வந்தபள்ளி
நீயல்லவேடி—நானுங்
காணுரேன்தேங் காயுநாய்க்குத்
தங்குமோபோடி. 227

பழனிப்: தப்பி லிபோ டிமிரட்டி
மீன்பிடிக்கிறாய்—இளை
தானேசிறுத் தாலுமந்தப்
படியுஞ்சிறுக்குமோ

வையாபுரிப்: துப்பற் றநா யேபோடி
இப்பவுநீயே—நெஞ்சைத்
தொட்டுப்பார்த்துப் பேசடியடி
சொட்டைத்தலைச்சி. 228

பழனிப்: நாயு நீயே நரியுநீயே
சிங்கமுநானே—இந்த
நாடறியு முன்சேதிக
ளெல்லாந்தெரியும்
வையாபுரிப்: ஈயம் வெள்ளி யாமோவென்னை
யிகமுறாயபி—சேகம்
ஏறினமு டிக்குச்சுழி
சுத்தம்பார்க்கிறாய். 229

பழனிப்: உங்கள் தெய்வம மானங்கெட்டு
நிருவாணத்தோடே—யிந்த
ஊரெங்குஞ் சுற்றினதை
நீயுங்கேளாயோ
வையாபுரிப்: சங்கை யில்லா மலேயுங்கள்
தெய்வம்பெண்களை—முன்னே
தானையையெ டுத்துக்கொண்டு
மானம்பார்த்ததே. 230

பழனிப்: மோட்டுப் புத்தி யாலேயுங்கள்
கைலாசநாதர்—தானே
முன்னாளிற் பள்ளனான
முறைமைகேளாயோ
வையாபுரிப்: ஆட்டைத்தோளிற் போட்டுக்கொண்டு
தேடியலைந்த—இடையன்
அல்லவோவுங் கள்மாயவன்
அறிவில்லாதவன். 231

பழனிப்: பெண்டி ரண்டு வைத்திருந்துஞ்
சன்னியாசியா—மென்றுன்
பெம்மானுங்கை மழுவெடுத்
தாடவில்லையோ
வையாபுரிப்: பெண்ட நேகம் பேரிருந்தும்
உங்கள்மாயவன்—வால
பிரமசாரி யென்றுநெய்யிற்
கையிடலையோ. 232

பழனிப்: பசிபொ றுக்க மாட்டாமலே
சோற்றுக்குச்செத்தே—யுங்கள்



பரமனார்நஞ் சுண்டகதை
நானறியேனோ;
வையாபுரிப்: புசித்தி டவே சோறுகிடை
யாமலேதானே—யுங்கள்
புங்கவனார் மண்ணையுண்டு
கக்கவில்லையோ. 233

பழனிப்: வில்லா லடி பட்டுங்கல்லால்
எறியும்பட்டே—ஒரு
வேடன்காலா லுதைபட்டா
னுங்களாண்டவன்;
வையாபுரிப்: எல்லா ருஞ்சீ யென்னத்தானே
திருடியேகட்டுண்—டுங்கள்
இறைவன்க யிற்றாலடி
பட்டானில்லையோ. 234

பழனிப்: மாடெ டுக்கப் புலியூரிற்
றானேயிருந்தே—யுங்கள்
மத்தனும்வீ டில்லாமலே
பித்தனுமானான்
வையாபுரிப்: ஆடு மேய்ச்சி டையர்வீட்டில்
எச்சில்பொறுக்கு—முங்கள்
அச்சுதற்கு மாடுமேய்ச்ச
புத்தியும்போமோ. 235

பழனிப்: விறகெ டுத்து மீன்பிடித்து
மண்ணைச்சுமந்தே—யுங்கள்
விமலனார் பிச்சையுமெ
டுத்தாரில்லையோ
வையாபுரிப்: குறுகிப் போயுந் தானம்வாங்கி
மானமில்லாமல்—உங்கள்
கோபாலன்வெண் ணெய்திருடித்
தின்றானில்லையோ. 236

**பள்ளிகளிருவரும் உளம்விண்டு ஒருப்படல்**

பழனிப்: அரிய ரனைப் பேதிச்சுநீ
சொல்லவேண்டாம்—உனக்
கந்தத்தோசந் தீராதுவை
யாபுரிப்பள்ளி

வையாபுரிப்: இருபே ரையு வின்னபேத
கங்கள்படுத்தி—முன்னே
இயம்பினது நீதாண்டிதென்
பழனிப்பள்ளி 237

பழனிப்: சிவப தஞ்சேர் விசையரங்க
சொக்கநாதன்—மகிழ்
செல்வன்புகழ் விசையகிரி
வேலச்சின்னோவன்
உவய முத்ரி யுந்தரித்தா
ரடிசிவன்மாலும்—வேறே
யோருருவ மென்றுமத
பேதஞ்செய்தாரோ. 238

வையாபுரிப் சங்க ரநா ராயணரா
கியேசிவனும்—உலகில்
சடாட்சரத்தின் சூட்சமதை
நீயறியாயோ
திங்க ளணி வேணியருஞ்
செங்கண்மாலும்—ஒரு
தேசிகவி நாயகந்தென்
பழனிப்பள்ளி 239

பழனிப்: செயவி சையன் கிட்ணனையும்
பூசித்தவராம்—அந்தச்
சிவன்சடையில் விளங்குமந்தச்
சேதிகேளாயோ
தயவர் கஞ்ச னூரவர்க்குக்
கத்தூரிரங்கன்—சிவன்
தானாமென்று மொன்றுமீந்த
தகைமைகேளாயோ 240

வையாபுரிப்: போன தெல்லாம் போகட்டு
மினிமேலாகிலுந்—தெய்வப்
புதுமைகளைத் தூசித்துநாம்
புகலவொண்ணாது
ஆனாற் புத்தி சாலிதென்
பழனிப்பள்ளி—யந்த



அரியரனென் றுஞ்சிவனும்
வேறேயல்லடி. 241

பழனிப்: உங்கள் கயி லாசநாதர்
எங்கள்தெய்வமே—எங்கள்
ஔவி சையமாலும்
உங்கள் தெய்வமே

வையாபுரிப்: சங்க தியாய்ச் சொன்னாயானாற்
சண்டைவருமோ—நம்மள்
சாமிநாதன் சிவகிரி
வேலனைப்போற்றி. 242

பழனிப்: இருபே ருங்கூடிச் சிரோதை(ய)
ஞாயம்போலவே—நாமள்
இப்புவியில் வாழ்கலாம்வை
யாபுரிப்பள்ளி

வையாபுரிப்: குருசீ சன்பால் பழம் போலே
ரகளையில்லாமல்—நாமள்
குணமாக வாழ்கலாந்தென்
பழனிப்பள்ளி; 243

பழனி: ஒருபா னைச்சர்க் கரைபோலே
இருவருந்தானே—நாமள்
ஒத்துடன்பட் டுவாழ்ந்து
கொள்ளலாமடி;

வையாபுரிப்: புருச னுக்குச் சம்மதியாய்
இரண்டுபேருமே—கூடிப்
புழைத்திடலாஞ் சொன்னேன்தென்
பழனிப்பள்ளி 244

பழனிப்: சூடு பாடில் லாமலேநாம்
கூடிப்பிழைப்போம்—நம்மன்
துரைமார்க்கண் டனைப்போல
வாழ்கப்போற்றுவோம்;

வையாபுரிப்: கூடிக் கெட்ட பேர்களும்பி
ரிந்துவாழ்ந்தோரும்—இந்தக்
குவலயத்திற் காணேன்தென்
பழனிப்பள்ளி. 245

பழனிப்பள்ளியும் வேடர்குலம் தழைத்தோங்கப்
வையாபுரிப் போற்றுவோம்வாழி—நம்மள்
பள்ளியும் விசையகிரிச் சின்னோவய்யன்
நீடூழிகாலம்
நாடாண்டுசி லாக்யம் பெற்று
வாழ்கவை—யாபுரி
நாடுசெழித் தோங்கிடவே
வாழ்கவாழி. 246

## வாழ்த்தும் நூல் பயனும்

### கலிப்பா

கோடிகதிர் போல்விளங்கிக் குலவுஞ் சிவகிரியான்
நாடியிருக் குமந்த நாடுசெழித் தோங்கிடவே
தேடியபள் ளேசலைத்தான் செப்பினோர் கேட்டோர்கள்
பாடினபே ராடினபேர் பலன்பெற்று வாழியரே. 247

வையாபுரிப்பள்ளு முற்றிற்று



உ

# சண்முகப் பாமாலை

## உருத்திரசாமி

### காப்பு

#### வெண்பா

பூங்கொன்றை மாலையணி புண்ணியவி நாயகனே
தீங்கொன்றும் யானென்றுஞ் சேராமல்-பாங்கொன்றத்
தந்தருள்செய் சொற்பொருளும் சண்முகப்பா மாலைக்குக்
கந்தமலர் நின்சரணே காப்பு. 1

நின்னடிக்கே சாத்து நிலவிப்பா மாலைக்கு
மன்னுமயில் வேலேந்து வள்ளலே-என்னரும்வீழ்
செஞ்சொற் பொருளுமிகச் சேர்த்தளிப்பாய் நின்கழற்காற்
கஞ்ச மலரிரண்டே காப்பு. 2

வெண்டா மரைமலரில் வீற்றிருக்கு மன்னமே
விண்டாரை வெல்லும்வேல் விண்ணவர்க்குப்-பண்டாங்கச்
சாத்துமிப்பா மாலைக்குச் சார்பொருளுஞ் செஞ்சொல்லும்
காத்தளிக்க நின்கழலே காப்பு. 3

ஆதரிப்பார் சூழ்கோவ லாறுமுக தேசிகனே
நீதந்த ஞானத்தை நெஞ்சிருத்திப்-பேதையேன்
சாத்தி யிடுமிந்தச் சண்முகப்பா மாலைக்குக்
காத்திடுநின் காற்றுணையே காப்பு. 4

#### அவையடக்கம்

திருமாலை மாமாவென் தேவசே நாபதிமேல்
ஒருமாலை யான்சொலற்கு மொண்ணுமோ-கருமாலைப்
போக்கு குருநாதன் பொன்னடியைப் போற்றிசைத்தே
யாக்கினேன் கொண்டுய்வா னன்பு. 5

## நூல்

பூமே லயன்படைப்பும் பொன்னவன்கோன் காப்புமுயர்
சேமேல் வருமீசன் செய்துடைப்பும்-நாமேவும்
வேலேந்து மய்ய விளக்கினையே நின்னவென
மாலேந்து மேழையற்கு மன். 6

சோம்ப லொழிந்து சுகமென்று பெற்றிடுவேன்
பாம்பணியு முக்கட் பரம்பரனே-தாம்பணியும்
எந்தைகுரு நாதா எழில்ஞானி யார்மடம்வாழ்
கந்தவடி யேனையின்று கா. 7

கானக் குறவள்ளி கால்வணங்கு கந்ததெய்வ
யானையுணர் பன்னிருதோ ளண்ணலே-ஈனஞ்சேர்
ஊனோம்பி யென்று முழலெளியேற் குன்றனடி
தானே யுறுதிச் சரண். 8

மன்னவர்தஞ் செல்வ மதியேன் நிறைகல்வி
என்னுஞ்செல் வந்தனையு மெண்ணிலேன்-பொன்னைநிகர்
நின்னடிச்செல் வந்தனையே நீள நினைந்திருப்பேன்
கன்னன்மொழி வள்ளிகண வா. 9

கற்பித் ததுபோதும் கற்பித்த வவ்வழியே
நிற்பித்தல் வேண்டும் நிருமலனே-யற்பபத்தி
யேனுமிலே னேழையே னேந்தெழில்வேற் செங்கரத்தாய்
நானுய்த லென்றோ நவில். 10

அயன்வாழ்வு வேண்டேன் அரிவாழ்வு வேண்டேன்
வியனிந் திரன்வாழ்வு வேண்டேன்-மயிலிவர்வோய்
நண்பன் குபேரன் நயவாழ்வு தான்வேண்டேன்
எண்ணுவது னீரடியே யீண்டு. 11

அயனாய்ப் படைப்பாய் அரியாகிக் காப்பாய்
தயல்பாக னாகித் தணிப்பாய்-மயனீக்கி
யாளி லடியேனை யாரே தடுப்பார்செவ்
வேளென்னுங் கோனே விளம்பு. 12

நக்கீ ரருக்காக நல்ல வயில்கொண்டே
அக்கல் பிளப்பித்த அண்ணலே-எக்கலினும்
திண்ணியவென் னெஞ்சச் சிறுகல்லைச் சேர்த்துருக்கல்
எண்ணி னரிதோ வியம்பு. 13



நல்லோர் குழுசேரேன் நாரியர்பின் சென்றென்றும்
பல்லாறு சொல்லிப் பழிச்சுவேன்-சொல்லுகுக
இத்திறத்த னென்றே வெளியேனை நீக்குவையேல்
முத்திதனை யார்தருவார் முன். 14

அன்பிலேன் மேலா மருளிலேன் எப்பொழுதும்
முன்புபின் பில்லா முருகனே-கொன்னயில்வேற்
கோமானே கோவல் குருவடிவாய் வந்தாண்டா
யாமா றறியேனை யன்று. 15

அவனி மகளி ரருத்தத்தி னாசை
புவனந் துதித்திடவே போக்கித்-தவமார்
பெரியோ ருறவைநான் பெற்றுய்வ தென்றோ
அரிமருகா சேந்தா வறை. 16

புன்கண் டனையகற்றிப் போதங் கொளுத்துகுக
என்கண் வினையகற்ற லென்னரிதே-என்புருக்கும்
அன்புபெற்றார் பெற்றாரே ஆனந்த மென்றறிந்தும்
அன்பிலனென் வேலா வறை. 17

நுன்சந் நிதிசேர்ந்தார் நோய்கொண் டுழல்வாரோ
துன்பஞ்செய் சூர்முதலைச் செற்றாய்கேள்-என்கண்சேர்
நோய்மாற்றிக் காக்கு நுகம்பூணு மெந்தாயே
தாய்போற்சேய் காப்பாரார் சாற்று. 18

சாற்றுதற்கு நாவுடையேன் உன்னநெஞ்சு தானுடையேன்
போற்றத் தலையுடையேன் பொய்யனேன்-தேற்றமருள்
எங்ஙனுய்வேன் செந்தி லெழிற்பதிவா ழெங்குருவே
மங்கைவள்ளி நாயகனே வந்து. 19

வந்துதினம் வானோர் வணங்கி மகிழ்ந்திடுவர்
இந்தணிந்த வீச னிறைஞ்சிடுவேன்-புந்தியிலேன்
காலத்தை வாளா கழிப்பேன் குமரகுரு
சீலத்தைத் தந்தருளெற் சேர்ந்து. 20

நல்லா வினன்குடிவாழ் நாயகனே நன்குணராப்
பொல்லாதே னென்றோ பொருந்துவது-கல்லாரம்
முல்லைநகு வெட்சி மொய்த்திடுநின் பாதத்தைக்
கல்லைநிகர் நெஞ்சு கனிந்து. 21

எக்கலினும் வாழ்தல் இயல்புநினக் கென்றிடுவர்
தக்கவரைச் சாரே னுளக்கல்லில்-மிக்குயர்ந்த
செந்தில் முருககுக தேவநீ வாழ்ந்திலையென்
சிந்தனைக் கெட்டாநீ செப்பு. 22

கனிந்து கனிந்துருகக் கற்றிலேன் யாதும்
முனிந்து முனிந்திடவே மூத்தேன்-வனைந்து
துதிபுரியேன் சாமிநினைச் சூழ்ந்திலன்செவ் வேளே
மதியிலே னுய்ய மதி. 23

மதியினுட னாறணிந்த மாதேவ னன்று
விதியின் வணங்கி வினவத்-துதிசேர்
பிரணவத் தின்பொருளைப் பேசியவென் சற்குருவே
பரவிடுமெற் கின்று பகர். 24

பகர்ந்தவே தாகமத்தைப் பார்த்திலேன் பார்த்தே
உகந்தவற்றிற் சார்பொருளை யோரேன்-சகந்தனில்யான்
ஏன்பிறந்தேன் மூடன் இயம்பிடுமின் சொல்லிலேன்
கான்பிறந்த வள்ளிகண வா. 25

பாகாரு மின்சொற் பகர்வள்ளி காதலனே
நாகா சலமமரு நாயகனே-மாகாயம்
யானடுத்துச் சோராம லாறுமுகத் தேவேநீ
தானெடுத் தாளல் தலை 26

கற்றுமறி வில்லாதேன் கற்றவரைச் சேராதேன்
பற்றெனைப்போ லார்க்குண்டிப் பார்தன்னில்-முற்றும்
அறிந்தோர்போற் பேசும் அசடனயில் வேலா
சிறந்த வறிவினைநீ சேர்த்து. 27

கனவினிலும் நின்னைக் கருதவரந் தந்து
நனவினிலும் நாடுநலம் நல்காய்-தனதன்
நிகர்செல்வர் வாயிலி னின்றிடா தாள்வாய்
புகர்வேற் கரத்தாய் புரிந்து. 28

காலா யுதக்கொடிகொள் கையா வடித்திட்ட
வேலா யுதங்கொள் விமலனே-மாலாம்
இருள்விடியக் கூவுவித்த லேலாதோ வின்பப்
பொருளே எனக்குப் புகல். 29



வேலை யளக்கருள் வீழ்வீர வாகுவைநீ
வேலை விடுத்தன்று மீட்டனையே-வேலையிப்
பாரறியச் செய்யேன் படுபிறவி வாரிக்குத்
தாரயில்வே லின்றிலையோ சாற்று. 30

நீயா ரெனக்கேட்ட நீள்சயந்தற் கின்பளித்தாய்
மாயாத துன்பத்தை மாய்வித்தாய்-காயாம்பூ
வண்ணன் மருகாநின் மாண்புணர்ந்தேற் காங்குசெயா
வண்ணமென்னோ நீவாய் மலர். 31

அருணகிரி நாதர்க் களவில்பே ரின்பம்
வருவித் தருள்செய்த வாழ்வே-தருணமதி
தாங்கினோன்சற் குருவே தமியேற் கருள்செய்தல்
பாங்கன்றோ நீதான் பகர். 32

திருக்கோவ லூரிற் றிகழ்குருவா வந்தாய்
மருக்கடம்ப மாலையணி மார்பா-தருக்கில்
பெரியோரைச் சார்ந்தின்பப் பேறு பெறற்கே
உரியவனா நீமனதி லுன். 33

களங்க மதியுடையேன் கல்வியிலேன் எங்ஙன்
துளங்கு நினதியலைச் சூழ்வேன்-விளங்குமயில்
வாகனனே வள்ளி மலரடியை வாழ்த்துகின்ற
மாகனவா னேநீ வழங்கு. 34

தத்துவங்க ளாறாறும் தாமகல வப்பால்வாழ்
வத்துவே வாழ்த்து வரந்தருவாய்-பொத்தறாப்
புல்லறிவி னார்ச்சேரும் பொய்யனெனைக் கைவிடேல்
நல்ல தருணமிதே நன்கு. 35

பஞ்சப் பொறியென்னும் பற்றலரைச் சார்ந்துமிக
வஞ்ச மடைந்தேன் மடமையேன்-தஞ்சம்
நினதடியே யன்றி நினைப்பேனோ ஒன்றை
கனமயில் வாகனனே காண். 36

கண்பன் னிரண்டும் கரமலர்கள் பன்னிரண்டும்
விண்கண் மழைக்கார் விழைமயிலும்-உண்கண்
அனைமாரும் வேலு மருகிருக்கத் துன்பம்
எனையடையு மோமனமே யெண். 37

எண்ணங்க ளெத்தனையோ எண்ணியெண்ணி யேழையேன்
புண்ணடைந்தேன் போதுமினிப் புண்ணியனே-விண்ணவர்க்குச்
சொல்லின்பந் தந்திடற்காச் சூர்முதலைச் செற்றாயே
நல்லின்ப மின்றெனக்கு நல்கு. 38

நல்கிடின் வள்ளி நலமல்ல வென்பாளோ
சொல்லாளெக் காலமுநீ சூழாதே-அல்லல்செய்
பிள்ளையே யாயினுமென் பெற்றவள்துன் பாற்றாளே
வள்ள லறிந்ததிந்த வாழ்வு. 39

வாழ்வெல்லாம் நீதந்த வாழ்வென் றுணராதார்
தாழ்வன்றி மற்றொன்றைச் சார்வாரோ-மூழ்குகின்ற
ஆனந்த வாரிதியில் அன்பிலனென் றாடுவனோ
மாநந் தயில்வேல வா. 40

அயனைச் சிறைசெய் தவன்செய் சிருட்டி
வியக்க வியற்றியவெம் வேலோன்-உயக்கடைக்கண்
என்மேற் செலுத்தி னெகின னெனைப்படைக்க
உன்னுவனோ வுள்ளமே வுன். 41

பண்டமரர்க் காக்கப் பறந்தலைநீ வந்தமர்ந்தாய்
கண்டுநிகர் சொல்வள்ளி காதலனே-தண்டார்க்
கடம்பணியும் பன்னிருதோட் கந்தவெனைக் காக்க
இடமித் தலைவந்தா லென். 42

நின்னேயப் பாட்டனோ நெய்த னிலக்குரியன்
உன்மாமன் முல்லைக் குரியனே-அன்னை
குறிஞ்சி நிலத்தள் குகமற்றோர் மாமன்
குறைவின் மருதனெனக் கூறு. 43

பரங்குன்றி லிந்திரன்றன் பாவை யளிக்கக்
கரங்கொண்டு மன்றல்செய் கந்தா-உரங்கொண்டு
நல்லோர் குழுவில் நயந்தென்னைச் சேர்ப்பிப்பாய்
வெல்லுமயில் வேலவனே நீ. 44

ஆறு திருப்பதிகண் டானந்தம் பெற்றிலேன்
ஆறெழுத் தென்றும் அமைந்திலேன்-ஆறு
முகவா முருகா முனைவடிவேல் மொய்ம்பா
தகவோ எனைவிடுத்தல் சாற்று. 45



சாற்றுவேன் நின்புகழைச் சார்ந்துநினைச் சூழ்ந்திடுவேன்
ஏற்ற வகைமனத்தி னேத்துவேன்-போற்றும்
அடியார் உறவே அயில்வே லவனே
கொடியேனை யாளல் குணம். 46

குகனே கடம்பா கொடியேனைச் செவ்வன்
உகந்தாளும் நாளுமெனக் குண்டோ-பகவ
தகுதியிலேன் பொய்யனேன் தாரணியில் பக்திப்
பகுதியிலேன் செய்வனென்ன பாங்கு. 47

முதலறியேன் அந்தம் முறையறியேன் மால்செய்
திதலைமுலை யார்தம் திறமோ-சிதைவின்றி
ஆய்ந்தறிவே னெங்ஙன் அமலநினைச் சார்ந்துய்வேன்
தேய்ந்தவிடை வள்ளிகண வா. 48

மான்மகளை மால்கொண்டு மாவனத்தில் மான்தேடிக்
கோன்வடிவங் கொண்டுசென்ற கொற்றவனே-தேன்வண்டு
சூழ்வெட்சி மாலைத் தொடையணிந் தோய்நின்னை
வீழ்வார் பெறுவதுநல் வீடு. 49

வீடு பெறலாம் விளங்கின்ப மும்பெறலாம்
நாடு பெருஞ்செல்வம் நன்குறலாம்-கூடுநலம்
எல்லாந் தருந்தரும மெய்தலாம் வேலேந்து
நல்லா னடிமனமே நாடு. 50

வேங்கைமர மாமளவு வேட்கை யுறுமுருவந்
தாங்கயில்வே லேந்துசிவ சண்முகனே-காங்கயனே
மாலதனை மாற்றி மடமையேன் றன்னையுன்
கோல வடிமலரிற் கூட்டு. 51

கூட்டினும் வீட்டில்நீ கூட்டா தொழியினும்நீ
ஓட்டிடினும் என்னை உணர்த்துகினும்-மூட்டிருளில்
தள்ளினும் என்றும்நின் தாளை மறப்பேனோ
வள்ளிகா தற்கண வா. 52

மங்கலத்திற் காக மகிழ்சுத்தத் திற்காக
அங்கவடை யாளத்திற் காகவே-மங்கைபங்கன்
தன்னடியார் காப்பாகத் தந்த திருநீற்றைக்
கொன்னயில்வேற் கோவே கொடு. 53

கையாற் றொடினுங் கதிதரு நல்லமணி
மெய்யிலணி வாரை விளக்குமணி-ஐயகுக
உண்டார்க ளுய்ய வுயிரளிக்குங் கண்மணியைக்
கொண்டா தரிக்கக் கொடு. 54

அப்பரை முன்னாள் அளக்கர்க் கரையேற்றி
இப்பொழுது மென்னை யிடர்க்கடலின்-தப்புவித்து
வேத வுளமா விளங்கைந் தெழுத்தைநீ
ஏதமற வேலா இயம்பு. 55

தன்மேனி கண்டார்க்கும் தன்னாமம் சொன்னார்க்கும்
தன்சொ னினைக்கும் தகையினர்க்கும்-முன்னுகுக
வேண்டுகின்ற நன்மை விரும்பித் தருகுருவை
ஈண்டவருள் செய்கநீ இன்று. 56

வடிவா ரயில்வேலா வள்ளிமகிழ் கேள்வாநின்
வடிவா மிலிங்கத்தின் மாண்பைக்-கொடி யேன்
தெரிந்தென்றும் பூசை செயும்வாழ்வு தந்தாய்
உரந்தரித் துன்னுநலத் தோடு. 57

திருவேடத் தானும் தியானமது கொண்டும்
வருசெயல்க ளானு மகிழ்ச்சி-தருதன்மை
கொண்டும்வே றற்ற குணஞ்சா ரடியாரைக்
கண்டடையக் கந்தா வருள். 58

மஞ்சன வண்ணன் மருகனே நின்னடிக்கு
மஞ்சனஞ்செய் தீர்த்தமது வாய்கொண்டும்-கஞ்சன்
படைப்பினிலும் காப்பினிலும் பண்ணவனீ சன்செய்
துடைப்பினிலும் சிக்குவனோ சொல். 59

ஆய அகலும் அறுமுகத்தெம் மண்ணனின்
தூய பிரசாதந் துய்த்தின்னல்-மாய
அறியாமை நீங்க அறிவின்பம் பெற்றுக்
குறியா நினைப்பெறுமா கூறு. 60

பரங்குன்று சீர்த்திப் பருப்பதங்கள் செந்தில்
வரமா வினன்குடிவாழ் மன்னா-திரமாப்
பழமுதிர் சோலைப் பதியே ரகத்தாய்
கழன்முழங்கு காலிரண்டுங் காட்டு. 61



காட்டில்நான் காண்பேன் கவின்சேருங் காங்கேயா
வீட்டினில்நீ கூட்டில் விடுவேனோ-தீட்டரிய
கோலத்தாய் கோழிக் கொடியாய் நினதுபுகழ்
தாலத் தெவரறிவார் சாற்று. 62

ஞானவடி வானவேல் நாயேனை யாண்டவேல்
வானவரைக் காத்த வடிவேலே-தானவரைச்
சாடியவே லென்றுதினம் சண்முகனே நின்வேலை
நாடுவரம் வேண்டுவனே நன்கு. 63

ஆயிரத் தெட்டண்ட மாண்டமயில் ஆறுமுக
மேயநினைத் தாங்கி விளங்குமயில்-தூய
அடியார்கள் கண்டுவக்க ஆடுமயில் என்றே
கொடியேனு முய்வதென்றோ கூறு. 64

வேலுமயி லுந்துணையா விண்ணோர்கள் உய்ந்தார்கள்
வேலுமயி லுந்துணையா வேண்டுவனே- ஆலுமயில்
வேலுமென வோதி விமலவயில் தாங்குமுன்றன்
காலுமென தாக்குவனோ கண்டு. 65

ஆயிரத் தெட்டண்டம் ஆண்டு மகிழ்சேவல்
ஆயவள்ளி சுற்ற மனைவருமே-மாயவன்று
கூவிய சேவல் குமரவேள் கைச்சேவல்
பாவியனை யாட்கொளுமே பார்த்து. 66

ஐவர் வசப்பட் டடைந்திட்ட வல்லலெலாம்
மைவரையே யென்ன வகுக்கலாம்-துய்வரைவாழ்
கைவரையைக் காத்தருள்செய் கண்ணன் மருகவருள்
ஐவரை வெல்லு மறிவு. 67

அடியே னறியாமை அண்ணா லகற்றி
வடிவேலை ஏந்துகர வள்ளால்-கொடியேற்கு
நின்னறிவைத் தந்து நிக்ழ்தா மரையடியை
என்னுளத்தே காட்டநீ எண். 68

எண்ணுவ துன்னுருவம் ஏத்துவ துன்புகழே
மண்ணி லுனையே வணங்குவது-கண்ணுதற்குத்
தாரகத்தின் உண்மைதனைச் சாற்றியவெம் சற்குருவே
காரணனே ஏழையனைக் கா. 69

அகத்தியருக் கந்நாள் அருந்தமிழைச் சொல்லி
சகத்தில் மறைவிளங்கச் சாற்றி-முகத்தியலும்
தாரகத்தைக் கேட்பித்த தண்ணளிசேர் வித்தகனே
ஏரகத்தா யெற்கணிக்க வெண். 70

கன்னிவன நாதனருள் கந்தனே வள்ளிக்காக்
கன்னிவனஞ் சென்ற கருணையனே-முன்னியவென்
கன்னிமதி வேண்டும் கடப்பமலர் மாலைகொடுத்
தின்னலை நீக்கிடுவா னெண் 71

அத்திமுகற் கொன்றா யரிமுகனை யுங்கொன்றாய்
பத்தியிலாக் குற்றத்தாற் பண்ணவனே-முத்திக்கு
வித்தாகும் பத்தி விளைவித் தருளாயேல்
எத்திறத்தி லுய்வே னியம்பு. 72

இயம்பி இயம்பி இளைத்தேனே யன்றி
கயமுகன்பின் வந்தருள்செய் கந்தா-இயம்பிய
அந்நெறியி னின்றொழுகு மாற்றலிலே னெங்ஙனுய்வேன்
நன்னெறியி னிற்பிக்க நாடு. 73

வேடநெறி நில்லேனான் வேட்கை மிகவுடையேன்
பாடவத்தின் மேலாப் பகர்சமர்த்தன்-நீடறத்தைச்
செய்யேன்மேற் செல்வழியைச் சிந்தியேன் மூடருளே
அய்யா எனைப்போலிங் கார். 74

ஆரைத் துணைகொள்வேன் அந்தார் கடம்பகுக
நீறையணிந் தோன்குமர நின்மலனே-சீரினியல்
இற்றென் றறியா வெளியேற்குப் பாடுகின்ற
பற்றளித்தாய் நன்றோவிப் பாங்கு. 75

பாங்கிருவ ரன்னையர்கள் பற்றோ டிருந்திடுங்கால்
ஏங்கி வருவேனை யேனென்னா-தாங்குநீ
எங்ங னிருப்பா யிருவர் முனையாரோ
புங்கவநின் தாளே புணை. 76

குகனே முருகா குமரகிர வுஞ்சம்
பகவேல் தொடுத்த பகவா-அகங்குடிகொள்
அய்யவென நாளும் அடியே னினைவழுத்தி
உய்ய வருள்தரவே யுன்னு. 77



உன்னு மடியார் உளக்கவலை விட்டொழிப்பார்
துன்னி யுனைவணங்கும் தொண்டரெலாம்-முன்னு
நலமெலாம் பெற்றிடுவார் நாயேனென் செய்வேன்
தலம்புகழும் வேலவநீ சாற்று. 78

ஒன்று மறியா வொருவ னெனவென்னை
என்றுநீ யாண்ட விறைவனே-இன்று
சும்மா யிருந்துவிடின் சூர்தடிந்த வேலவனே
அம்மா எனையாள்வா ரார். 79

நின்னை நினைப்பித்தாய் நின்புகழைச் சொல்வித்தாய்
நின்னடியே சாரும் நினைவுதந்தாய்-என்னாலொன்
றில்லை யெனவறிந்தேன் எல்லாம் நினதருளே
வல்லவனே வள்ளிகண வா. 80

தாவா வருள்நிறைந்த சண்முகனே நின்னடியேன்
வாவா வெனவழைத்தேன் வந்திலையே-மாவாழும்
மார்பன் மருகா வழியடியேன் அல்லனோ
யார்பற்றி வாழ்வே னறை. 81

ஞாலம் புகழும் நவவீரர் சூழ்ந்திருக்க
மாலு மயனு மகபதியும்-கோலஞ்செய்
நின்னைத் துதிக்கு நிலைகண் டுவப்பேனோ
தன்னைநிக ரில்லவநிற் சார்ந்து. 82

பொன்னைப் பொருளாகப் போற்றியொழித் தேன்பலநாள்
நின்னைப் பொருளா நினைக்கிலேன்-என்னைப்போல்
பேத மறியாப் பேதையரு முண்டோசொல்
நாத மயில்வாக னா. 83

எப்புகழை வேண்டுமென எண்ணினரோ சான்றோர்கள்
அப்புகழோ இப்போழ் தகன்றதுபோல்-கைப்பொருளை
வேண்டிப் புகழ்கின்ற வீண்சொல் புகழாமே
ஆண்டவனே நீயீண் டறை. 84

துட்டரையே அஞ்சுகின்றார் தூய ஒழுக்கமுடைச்
சிட்டரையே உய்ந்திடுவான் சேர்ந்திலரே-கட்டமே
நல்லா ருளங்குடிகொள் நாத கலியுகத்தின்
பொல்லாங் கிதுவோ புகல். 85

புகலென் றெவர்பாற் புகுவேன் முருகா
அகவல் மயிலேறு மத்தா-பகவனே
தூய ஒழுக்கமுடைச் சேட்ட னெனவென்னைத்
தாயனையாய் தள்ளி விடின். 86

தள்ளிவிடின் ஏழையனைத் தாங்குபவர் வேறுளரோ
வள்ளிதெய் வானை மகிழ்நனே-துள்ளிமுனே
வந்தெதிர்த்த சூர்க்கும் வழங்கினையே நீயருளை
அந்தநா ளென்ப தறி. 87

தெய்வம் நினையன்றித் தேடுதற்கு முண்டுகொலோ
வையந் தனிலெனைப்போல் மந்தனுண்டோ-அய்யவெங்கும்
உள்ள உனக்கிங் குணர்த்துவதும் வேண்டுவதோ
வள்ள லருள்நீ வழங்கு. 88

அறிஞர் முதலென் றறைந்திடநீ நிற்பாய்
முறையறியா மூடருளே முன்யான்-தறையில்
எனைநீக்கி நீயருளின் ஏழைபங்க னென்பானார்
உனைவே லவனே உரை. 89

மாதர்பின் சென்று மயங்குகின்ற என்மனம்நின்
பாத கமலத்தைப் பற்றுமோ-நாதா
குமரா முருகவெனக் கூறுவனே தாழ்ந்து
திமிரமகன் றுய்வேனோ செப்பு. 90

மறைகள் மறைமுடிகள் மன்னுபுரா ணங்கள்
இறையும் நினையறிய வில்லை-முறையொன்றும்
பார்த்தறியா யானோ பகவ நினையறிவேன்
வார்த்தன வள்ளிகண வா. 91

எண்குணத்தா னென்பருனை என்னை மிகஇகழ்ந்தே
எண்குணத்தா னென்றே இயம்புவார்-பண்ணொன்றப்
பேசுகின்ற பேதையர்தம் பின்செல்லும் பேதையன்யான்
ஈசுரன் எண்ணுகுரு நீ. 92

செவ்வான மேனிச் சிவசண் முகத்தேவே
அவ்வான இன்பம் அவாவுவனோ-செவ்வேலால்
அன்றுசூர்ப் போக்குதன்மு னாகண் டலனுற்ற
பின்றுதுயர் யானறிந்த பின். 93



பின்னுகுழல் தெய்வப் பிடிக்கே யிடமளித்தாய்
மன்னுவலம் வள்ளியைநீ வாழ்வித்தாய்-துன்னி
மயல்பெற்ற என்றன் மதிமகளுக் கெவ்விடமோ
துயரொழிக்கும் வேலவநீ சொல். 94

பார்த்தார் வினைபோம் பணிந்தவர்தம் மாயைபோம்
ஆர்த்தார் அரன்பணியும் அண்ணலே-கூர்த்தறிவின்
உன்னுவார் ஆணவம்போம் உண்மைதெரி வித்தனையே
பன்னுமறை நூலைப் பகர்ந்து. 95

நினைக்கண்ட வன்றுமுதல் நின்னினைவே யென்மகட்கு
மனைக்கண் வதிகாலம் வாய்சோர்வாள்-கனைகழலோய்
கந்தாசு கந்தா கடிதி னெனச்சொலுவாள்
இந்தா வெனவந் தியம்பு. 96

தாண்டுஞ் சினவிடையோன் சற்குருவே யென்றக்கால்
ஆண்டுரைத்த தொன்றை யறைந்திடற்கே-ஈண்டெனிலை
நீபார்ப்பின் நான்பாபி நீளயில்வே லேந்தும் நீ
மாபாவந் தீர்த்தோன் மகன். 97

மகனறிவு தந்தை மதியென் றறைவார்
இகலயில்வே லேந்தும் இறைவா-மிகப்பகைத்த
காமாரி தன்சுதனே காழ்த்திடுமென் காமத்தைப்
போமாறு செய்நாள் புகல். 98

தந்தை யறிவே தன்சுதனுக் கென்றுரைப்பார்
அந்தகனை அந்தணற்கா அன்றுதைத்தோன்-மைந்தவுனை
அண்டினபின் காலனெனக் கஞ்சுவனே நின்கழற்கால்
தொண்டன்றி வேறுசெயேன் சூழ்ந்து. 99

சூழ்ந்துவலம் வந்துன் துணையடிகள் உள்வைத்து
வீழ்ந்துனடி யாரை விரும்புவேன்-ஆழ்ந்துயர்ந்த
நல்வித்தை தந்துன் நளினபதஞ் சேர்ப்பிப்பாய்
புல்லனுக்கு நீயே புகல். 100

சார்ந்தாரைக் காக்கின்ற சண்முகனே ஆன்மவியல்
சார்ந்ததன் வண்ணமாச் சாற்றுநூல்-சார்ந்தேனை
நின்வணமாச் செய்யா நிபமெற் குணர்த்தாயோ
கொன்வடிவேற் கோவே குழைந்து. 101

**சண்முகப் பாமாலை முற்றிற்று**

உ

# இரத்தினகிரிப்
# பாலமுருகன் பாமாலை

## வி. அண்ணாமலை முதலியார்

### காப்பு

பைந்தமிழ்ப்பா மாலை இரத்னகிரிப் பாலனுக்குப்
பந்தமுடன் சூட்டப் பரமனருள்—ஐந்து
கரத்தோன் இணைதாள் கரங்கள் இறைஞ்சச்
சிரத்தே அணிவாம் சிறந்து.

### நூல்

#### அருள்வேட்டல்

அருமறைகள் பலபடியாய் விரிந்தோங்கிக்
காண்பரியாய் எளியாய் அன்பர்க்(கு)
இருவர்தம் முனைப்பதனால் பறந்திடந்தும்
எட்டாதான் எழிலார் மைந்தா
அருந்தவத்தோர் அகத்தென்றும் மன்னுகின்ற
அறுமுகனே அருட்செந் தேனே
ஒருபொருளே ரத்னகிரி வாழ்முருகா
உளத்திருக்கும் ஒளிநற் சேயே. 1

உளத்திருந்தே தான் மறைந்தும் மறைக்கின்ற
மாயிருளை உன்றன் அன்பு
விளக்கதனால் விலக்குகின்ற ரத்னகிரிச்
செவ்வேளே விமலா என்றன்
உளம்புகுந்தே உன்நாமம் ஆறெழுத்தை
உணர்ந்தேத்த உணர்த்தி டாயோ
களங்கமிகு கடையனேன் கடைத்தேறச்
செய்வதென்றோ கருணை கொண்டே. 2

கருணையால் ஐந்துமுகம் தான்மறைத்தே
ஆறுமுகம் காட்டி வந்த



அருட்கொழுந்தே அருங்கனியே அமரர்தமைச்
செறுத்திட்ட ஆண வத்தால்
செருவதனில் எதிர்த்தவெஞ் சூரனைமாய்த்
தாட்கொண்ட தேவ தேவே
பொருப்பிலுறை சிவக்கொழுந்தே உன்னருட்டாள்
என்சிரத்தே பொருத்த லென்றோ. 3

என்றுமுதல் நீயுண்டோ அன்றுமுதல்
உன்றனையே ஏத்து மென்னை
அன்றேநீ ஆட்கொள்ளா திருந்ததென்னோ
இன்றுனையான் அயரா தேத்த
என்னுடனே ஏன்றவினை ஏய்ப்பதையும்
கண்டிலையோ எழிலாய் ரத்னக்
குன்றுறையும் சிவகுமரா குறைகளைந்தே
யாட்கொள்வாய் குருவாய் வந்தே. 4

வந்தென்றன் உளம்புகுந்தே வன்னெஞ்சக்
கல்லையணுத் துகளாய் நூறி
அந்தமிலா ஆனந்த அருள்நீரைப்
பாய்ச்சியதை அளறாச் செய்தே
பந்தவினைப் பற்றறுக்கும் இணையடியாம்
பங்கயத்தைப் பதித்தி டாயோ
எந்தையே ரத்னகிரி வாழ்முருகா
உய்ந்திடவே ஏழை யேனே. 5

ஏழையேன் உன்கழலை இமைப்போதும்
மறவாதே ஏத்தி நாளும்
வாழையடி வாழையாய் வருமடியார்
கூட்டமதில் வாழ வைத்தால்
வாழடியார் திருநோக்கால் பழவினையும்
பாறிடுமே வள்ள லேயிக்
கோழையேன் திருவருளில் திளைத்திடுக
ரத்னகிரிக் குமர வேளே. 6

குமரனே குன்றுதோ றாடுகின்ற
குருகுகனே குழகா போற்றி
அமலனே அமரர்தீ வினைதீர்த்த
அரசனே அருள்ஞா னத்தால்

எமதுளத்தே ஒட்டியுள மலமாய்ப்ப
தரிதாமோ எழிலார் செல்வா
கமலபவன் பிரணவத்தை அறியாமைக்
கொறுத்திட்ட கந்த வேளே. 7

கந்தனே காலனையும் கழலடியாற்
காய்ந்தமுக் கண்ணன் மைந்தா
சிந்தைமிகக் குளிர்ந்திடவே மெய்ப்பொருளை
ஓதுவித்த சிவநற் கன்றே
சந்ததமும் நின்னருளைச் சாற்றுமருட்
பேறதனைத் தந்தி டாயோ
எந்தையே எழிலிரத்ன கிரிபால
முருகையா இன்பத் தேனே. 8

இன்னமுதே என்னுளத்தின் இருள்கடிந்து
ஞாயிறென எழுசெஞ் சோதீ
நின்றபெருங் கருணையினை நினைப்பறவே
நினைக்கின்ற நேச னாய
என்றனுக்கு நீயல்லால் வேறுதுணை
உண்டோசொல் இணையில் வேந்தே
ஒன்றும்நீ யல்லையன்றி ஒன்றில்லை
யாருன்னை உணரு வோரே. 9

உணர்வினுக்கு மெட்டாதாய் உன்னடியார்
உளத்தென்றும் உன்னி ஏத்த
உணர்வதனில் உணர்த்துகின்ற உமைபாலா
இரத்னகிரி ஒளிறும் சேயே
கணமேயும் பிரியாதிக் கயவனேன்
களித்திடவே கருணை காட்டாய்
இணரெரிசேர் விட்டிலென வீழ்கின்ற
பதடியேன் இனிதுய் தற்கே. 10

இன்றுய்ய இரும்பன்ன வன்மைபெறு
மனத்தேனை ஈர்த்திட் டென்றன்
என்பனைத்தும் உருக்கியே இன்கரும்பின்
சுவைமிக்க எழிற்றாள் காட்டித்
துன்பமிகத் தருகின்ற பிறப்புடனே
இறப்பதனைத் தொலைக்கும் பான்மை



என்றுளதோ அறியேனே இரத்னகிரி
வாழ்முருகா என்கட் பாவாய். 11

கண்பாவை யாயிருந்து கதிகாட்டும்
கற்பகமே கரும்பே தேனே
பண்பாடும் மாதிருவர் தழுவுசர
வணபவனே பாரிற் பாவி
எண்ணிலாப் பலபிறவி எய்துமுட
லாவிபொருள் எல்லாம் அன்றே
கொண்டிலையோ அப்பேறுண் டோரத்னக்
குன்றுரையும் குமர வேளே. 12

குன்றுறையும் குருபரனே குன்றவில்லி
தன்செல்வக் குமரா என்றன்
குன்றனைய குற்றங்கள் குணமென்றே
நீகொண்டால் குறைதான் உண்டோ
பன்னரிய வேதிமுன்னால் வல்லிரும்பு
பொன்னாதல் பார்த்தி லாயோ
அன்பரெலாம் ஏத்திரத்ன கிரியாயென்
குறைகளைதல் அரிதோ சொல்லாய். 13

அரிதாமோ அரிஅயனும் காணாதான்
அருள்குமரா அடியார் வைப்பே
பொருளனைத்தும் தானாகி உடனாயும்
வேறாகும் பொருளே உன்றன்
அருளதனால் மாறிநின்றே மயக்கிவரும்
ஐம்புலத்தார் அடைத்து நைய
கருவறுத்தாட் கொள்வதன்றோ ரத்னகிரிக்
கோயில்கொளும் கருணைத் தேவே. 14

கருணையே உருவாங்கார்த் திகைப்பெண்டிர்
பாலுண்டு கவின்ற கந்தா
ஒருமையுடன் நினைக்கின்ற உள்ளுணர்வை
எனக்கீந்தே உய்வித் தாள்வாய்
ஒருநாமம் ஓருருவம் இல்லாத
ஒண்பொருளே உலக நாதா
அருவாகி அருவுருவாய் உருவாயும்
அருள்புரிவோய் அண்டர் கோவே. 15

அண்டமுதல் அணுவீறாய்க் கண்டபொருள்
அத்தனையும் அருளாம் உன்றன்
பண்டமெனத் தெரிதலினால் நின்னருளாம்
திருவடிக்கே படைக்க வொன்றும்
கண்டிலனே ஏற்பாயென் தொண்டிரத்ன
கிரியுறையும் கார்த்தி கேயா
நண்ணரிய நாதாந்த முடிவேயென்
நடுவுறையும் நற்று ணையே. 16

நற்றுணையே நாடோறும் பொறிவழியே
நாடுநெஞ்சை நாடா வண்ணம்
உற்றதுணை நீயல்லால் வேறுண்டோ
மாற்றுதற்கே உமையாள் செல்வா
கற்றவர்கள் ஏத்துகின்ற குருமணியே
இரத்னகிரி கவின வாழ்வோய்
பற்றறுக்கும் அருள்நெறியைப் பற்றமனம்
உற்றகுரு பரனே போற்றி. 17

மனத்திலுறு மாசகற்றி உன்நாமம்
ஆறெழுத்தை மனனம் செய்ய
உனதருளும் எய்திட்டால் இப்பிறப்பின்
மேலுண்டோ உய்யு மாறே
வனத்திலுறு கானவர்தம் கன்னிதனை
வரிந்தேற்ற வள்ளால் என்றும்
உனதடியார் தொழுதேத்த உற்றரத்ன
கிரியானே உணர்த்தாய் இன்றே. 18

இன்றேயான் உன்னடிக்கே என்றனையே
ஒப்புவித்தேன் ஏற்பாய் எந்தாய்
குன்றனைய வினைபோக்கி குரைகழற்கீழ்
ஏற்றிட்டால் குறைதான் உண்டோ
மன்றாடு மாமணியின் செவிதனிலே
மறையோதும் மலையின் வாழ்வே
நன்றிரத்ன கிரிவாழும் மறைமுதலே
உயிர்தோறும் நண்ணும் தேவே. 19

தேவரசே தெவ்வரெலாம் மாய்ந்திடச்செவ்
வேல்விடுத்த தீரா தெய்வப்



பாவதனில் உறைந்திடுவாய். எம்பாவின்
உள்ளிருந்தே பண்பு மிக்க
நாவதனால் நவில்கின்ற நல்லோர்கள்
வாழ்வுமிக நல்காய் நாதா
ஆவிரத்ன கிரிபால முருகாநின்
னடிபரவும் அருமை நல்கே. 20

**இரத்தினகிரிப் பாலமுருகன் பாமாலை முற்றிற்று**